# சித்த மருத்துவம்

தொகுதி - 1 : வரலாறு



தமிழ் வளர்ச்சிக் கழகம்
சென்னைப் பல்கலைக்கழக வளாகம்
சென்னை - 600 005

2013

**தமிழ் வளர்ச்சிக் கழக வெளியீடு**

முதற் பதிப்பு 2003

இரண்டாம் பதிப்பு 2007

மூன்றாம் பதிப்பு 2013

பதிப்புரிமை உடையது

நிறுவனர்
திரு. தி.சு. அவினாசிலிங்கம்

புரவலர்
முனைவர் நா. மகாலிங்கம்

தலைவர்
டாக்டர் வா.செ. குழந்தைசாமி

துணைத் தலைவர்
டாக்டர் மு. பொன்னவைக்கோ

செயலாளர்
டாக்டர் உலகநாயகி பழனி

பதிப்பாசிரியர்
முனைவர் பெ. அர்த்தநாரீசுவரன்

**தமிழ் வளர்ச்சிக் கழக வெளியீடு**

ஆசிரியர் குழு

மரு. கு. கணபதி (ஒருங்கிணைப்பாளர்)
மரு. கி. நடராசன்
மரு. ச. முத்தரசன்
மரு. மொ. லோகமணியன்
மரு. செ.நெ. தெய்வநாயகம் (மறுசீராய்வாளர்)

தமிழ் வளர்ச்சிக் கழகம்
**சென்னைப் பல்கலைக்கழக வளாகம், சென்னை - 600 005.**

## Bibliographical Data


| | | |
|---|---|---|
| Name of the Book | : | Siddha Maruttuvam Vol.1-Varalaru |
| Author/Editor | : | Dr.G.Ganapathy (Coordinator) |
| Edition | : | First Edition 2003<br>Second Edition 2007<br>Third Edition 2013 |
| Copy Right | : | Tamil Valarchi Kazhagam |
| Language | : | Tamil |
| Subject | : | History of Siddha Medical System |
| Pages | : | x + 303 |
| Price | : | ₹ 300/- |
| Paper | : | Maplitho |
| Size | : | Double Crown |
| Binding | : | Deluxe |
| Point | : | 12 Pt |
| Wrapper Design | : | Sivagami Printographics |
| Published by | : | Tamil Valarchi Kazhagam<br>University Building<br>Chepauk, Chennai- 600 005.<br>Ph: 25365440 |
| Printed by | : | Pavai Printers Pvt. Ltd.<br>J.J. Khan Road, Royapettah.<br>Chennai-600 014.<br>Ph. 28482441, 28482973 |

## [illegible]

## முகவுரை

தமிழ் வளர்ச்சிக் கழகம் சென்ற 56ஆண்டுகளாகத் தமிழ் மொழியின் வளர்ச்சிக்காக, ஆக்கப்பூர்வமான பணிகளைச் செய்து வருவதைத் தமிழ் மக்கள் நன்கு அறிவர்.

பொதுக் கலைக்களஞ்சியம் – 10 தொகுதிகள், குழந்தைகள் கலைக்களஞ்சியம் – 10 தொகுதிகள், உயிரியல் தாளமுறை, செயற்கைக் கோளின் கதை, மனிதன் சுற்றுச்சூழல் மற்றும் வேதிப்பொருட்கள், பரம்பரை தொடரும் பாதை எனும் அறிவியல் நூல்கள் ஆகியவற்றைத் தமிழ் வளர்ச்சிக் கழகம் வெளியிட்டுள்ளது.

தமிழ் மக்களிடையே மருத்துவம் பற்றிய விழிப்புணர்வை ஏற்படுத்தும் நோக்கத்தில் மருத்துவக் களஞ்சியம் என்ற தலைப்பில் 12 தொகுதிகளை வெளியிடும் திட்டத்தை மேற்கொண்டு, இதுவரை 11 தொகுதிகள் வெளியிடப் பட்டு, மக்களிடையே நல்ல வரவேற்பைப் பெற்றுள்ளன.

சித்த மருத்துவம் நமது பண்டை மருத்துவ முறையாகும். சித்தர்களால் உருவாக்கப்பட்ட இம் மருத்துவ முறை வாழையடி வாழையெனப் பரம்பரை மருத்துவர்களால் பயன்படுத்தப்பட்டும், பாதுகாக்கப்பட்டும் வருகிறது, சித்த மருத்துவத்தின் மூலநூல்கள் பாடல்களால் அமைந்தவை, சித்தர்கள் பலரின் பாடல்கட்கு விளக்க நூல்கள் பல வந்துள்ளன. எனினும் சித்த மருத்துவத்தின் அடிப்படைகளை, அதன் வரலாற்றை, பொது மக்களும் புரிந்துகொள்ளும் வகையில் எளிய முறையில், அதே சமயத்தில் தேவையான தகவல்களுடன் சித்த மருத்துவம் பற்றி முறையான, முழுமையான ஒரு நூல் வரிசை வந்திருப்பதாகத் தெரியவில்லை. எனவே சித்த மருத்துவம் என்ற தலைப்பில் கீழே குறிப்பிடப்பட்டிருக்கும் ஆறு பிரிவு களில் ஆறு தொகுதிகளைக் கொண்ட ஒரு நூல் வரிசையை வெளியிடுதெனத் தமிழ் வளர்ச்சிக் கழகம் முடிவு செய்தது.

சித்த மருத்துவம்

| | | |
|---|---|---|
| தொகுதி – 1 | : | வரலாறு |
| தொகுதி – 2 | : | சித்த மருத்துவத்தின் அடிப்படைகள் |
| தொகுதி – 3 | : | வாத (வளி) நோய்கள் |
| தொகுதி – 4 | : | பித்த (அழல்) நோய்கள் |
| தொகுதி – 5 | : | கப (ஐய) நோய்கள் |
| தொகுதி – 6 | : | சிறப்புத் தொகுதி (காயகற்பம், யோகம், வர்மக்கலை, தோல் நோய்கள் முதலியன) |

சித்த மருத்துவப் பயிற்சியிலும், சித்த மருத்துவக் கல்வியைப் பயிற்றுவிப்பதிலும் தேர்ந்த அனுபவம் பெற்ற சித்த மருத்துவப் பேராசிரியர்கள் இப்பெரும் பணியில் பங்கேற்றுள்ளனர். இத்திட்டத்தின் முக்கிய நோக்கம், "உடம்பார் அழியின் உயிரார் அழிவர்" என்ற சித்த மருத்துவத்தின் அடிப்படைக் கோட்பாட்டை மக்களிடையே பரப்பி, உடல் நலம் பேணல் பற்றிய விழிப்புணர்வை ஏற்படுத்துதலும், பல வகையான நோய்களைப் பற்றிய பொது விவரங்களை அவர்களுக்கு எடுத்துரைத்தலும், முறையான மருத்துவ உதவியை நாடத் துணைபுரிதலும் ஆகும். இது மருத்துவர்களுக்காக வெளியிடப்படும் நூல் தொகுப்பு அன்று. சித்த மருத்துவம் எனும் தமிழ் மருத்துவத்திற்கு ஓர் அறிமுக நூல் வரிசை ஆகும். அதே சமயம், மக்களுக்கான மருத்துவக் கை நூல்களும் (Medical Hand Books) ஆகும்.

படிப்பறிவு உடையோர்களிடையேகூட மருத்துவம் பற்றிய தெளிவு போதுமான அளவு இல்லை. மருத்துவத்தின் முதல் பணி உடல் நலத்தைக் காத்தலாகும் (Preservation of Health). அடுத்ததாக நோய் வரும் முன் நோய்வராது காத்தலாகும் (Prevention of Disease). நோயைத் தடுக்கத் தவறியோ அல்லது தடுக்க இயலாமலோ நோய்வாய்ப்பட நேர்ந்தால், அதனைக் குணப்படுத்துவது மூன்றாவது கட்டமாகும். நோய்த் தடுப்பைப் பற்றிய கவலையோ, நோயின் குறிகுணங்கள் தென்படினும் உரிய காலத்தில் மருத்துவம் செய்துகொள்ள வேண்டும் என்ற எண்ணமோ இல்லாதவர்களாகவே நம்மில் பலரும் இருந்துவருகின்றனர். இத்தகைய நிலைமையை மாற்றி, உடல் நலம் பேணுவதன் இன்றியமையாமையை எடுத்துரைத்து, தக்க முறையில் ஆற்றுப்படுத்துவனவாக இந்த நூல் வரிசை அமையும் என நம்புகிறோம்.

சித்த மருத்துவம் தொகுதி – **1 :** வரலாறு என்னும் இத்தொகுதி அறிமுகத் தொகுதியாக அமைகின்றது. வரலாற்று அடிப்படையில் தெளிவான, நம்பகமான சான்றுகளைக் கொண்டு சித்த மருத்துவத்தின் வரலாற்றைக் கூறுவது என்பது சாத்தியமற்றதாகவே உள்ளது. எனவே முடிந்தவரையில் கிடைக்கின்ற ஆதாரங்களைக் கொண்டும், வாய்மொழி வழக்குகளைக் கொண்டும் இத்தொகுதியில் சித்த மருத்துவத்தின் வரலாறு கூறப்பட்டுள்ளது.

இதன் ஆக்கத்தில் ஒருங்கிணைப்பாளராக இருந்து, உரிய நேரத்தில் கட்டுரைகளைத் தொகுத்தளித்த பேராசிரியர் மரு. கு. கணபதி அவர்களுக்கும் கட்டுரைகளை எழுதி உதவிய மரு. கி. நடராசன், மரு. ச. முத்தரசன், மரு. மொ. லோகமணியன் ஆகியோர்களுக்கும், மறுசீராய்வு செய்த மரு. செ.நெ. தெய்வநாயகம் அவர்களுக்கும் மரு. வீ. சுப்பிரமணியன் அவர்களுக்கும் மனமார்ந்த நன்றி.

ஈரோடு எஸ்.கே.எம். உடல், மனநலக் காப்பக அறக்கட்டளையினர் நூலை மீள்பார்வை செய்து அரிய கருத்துகளை வழங்கினர். மேலும் அறக்கட்டளையினர்

இந்நூல் அச்சிட்டப்படுவதற்குத் தேவையான செலவையும் ஏற்றுள்ளனர். அவர்கட்கு நாம் மனம் நிறைந்த நன்றி கூறக் கடமைப்பட்டிருக்கிறோம்.

நூலை நல்ல முறையில் அச்சிட்ட பாவை அச்சகத்தாருக்கும் கணிபொறியில் வடிவமைத்த திரு. து. வேல்முருகன் அவர்களுக்கும் நமது நன்றி உரித்தாகுக.

இந்நூலுக்கும் இனி வரவிருக்கும் 5 நூல்களுக்கும் தமிழ் மக்களிடையே நல்ல வரவேற்பு இருக்குமென நம்புகிறோம்.

வா.செ. குழந்தைசாமி
தலைவர்
தமிழ் வளர்ச்சிக் கழகம்



மருத்துவ முறைகளிலே மிகவும் முன்னோடி மருத்துவமாகக் கருதப்படுவது சித்த மருத்துவமாகும். இம் மருத்துவம் தென் இந்திய நாட்டில் தோன்றிய பெரும் அறிஞர்களாம் சித்தர்களால் அறியப்பட்டது.

பிற்காலத்தில் பரம்பரை மருத்துவர்களால் பாதுகாக்கப்பட்டு, மக்கள் நெடுநாள் நோயின்றி வாழவும், அவர்களின் நோய்களைப் போக்கவும், பயன்படுத்தப்பட்டுவந்தது. பின் சில நாகரிக மாற்றங்களால் சித்த மருத்துவம் மக்கள் மத்தியில் முக்கியத்துவம் பெறாத நிலையிலிருந்தது. அதற்குக் காரணம் சித்த மருத்துவத்தின் அருமை பெருமைகளை அறியாமையே ஆகும். ஆனால் கடந்த 30–40 ஆண்டுகளில் தமிழக அரசே சித்த மருத்துவத்தைத் தனி மருத்துவப் பாடமாகக் கற்பித்து, அதன் பயனை மக்கள் முழுமையாக அடையவேண்டும் என்ற எண்ணத்தில் கல்லூரி வாயிலாகச் சித்த மருத்துவப் பட்டதாரிகளை, முதுநிலைப் பட்டதாரிகளை உருவாக்கி, மக்கள் மத்தியில் ஒரு புதிய நம்பிக்கையையும் அதன் உன்னதமான பயன்களையும் அடையச் செய்த முயற்சி வெற்றி பெற்றுள்ளது.

இந்நிலையிலும் சித்த மருத்துவ நூல்கள் பல இருந்தபோதிலும், மக்கள் எளிதில் உணர்ந்துகொள்ளக்கூடிய வகையிலும், மருத்துவ மாணவர்களுக்கு மேலும் பல தரவு நூல்கள் கிடைக்கிற வகையிலும் நூல்கள் வெளியிடப்படவேண்டிய கட்டாயச் சூழ்நிலையில் இருக்கிறோம். இந்த முக்கியத்துவத்தை உணர்ந்த தமிழ் வளர்ச்சிக் கழகம், மற்ற மருத்துவக் களஞ்சியங்களை வெளியிட்டுள்ளது போல் சித்த மருத்துவ நூல்களையும் வெளியிட வேண்டும் என்ற ஆவலில், சித்த மருத்துவ நூல்களை 6 தொகுதிகளாகப் பிரித்து, அதில் முதலாவது தொகுதியான சித்த மருத்துவம் – வரலாறு என்னும் இத்தொகுதியைத் தயாரிக்கும் பொறுப்பை என்னிடம் ஒப்படைத்தது.

இந்தத் தொகுதி சிறந்த முறையில் மக்களுக்கும், மருத்துவ மாணவர்களுக்கும் தரவு நூலாகவும் பயன்படத்தக்கது என்றால் அந்தப் பெருமை தமிழ் வளர்ச்சிக் கழகப்

புரவலர் அமரர் திரு சி. சுப்பிரமணியம் அவர்களையும், அதன் தலைவர் டாக்டர் வா.செ. குழந்தைசாமி அவர்களையும். துணைத் தலைவர்கள் டாக்டர் நா. மகாலிங்கம், டாக்டர் பெ. இராமசாமி, செயலர்கள் திரு. வா.திருமலை, முனைவர் கொடுமுடி சண்முகன், ஆசிரியர் திரு மா. மதியழகன் ஆகியோரையும் சாரும் என்பதில் ஐயமில்லை. எனவே சித்த மருத்துவ வளர்ச்சிக்கு ஒரு வகையில் பாடுபடுகின்றவன் என்னும் முறையில் என் உளமார்ந்த நன்றியை இவர்கள் அனைவருக்கும் தெரிவித்துக்கொள்கிறேன்.

அடுத்ததாக இந்தத் தொகுதியை என்னுடன் இணைந்து பல தலைப்புகளில் கட்டுரைகள் எழுதி ஆக்கத்துடனும், ஊக்கத்துடனும் பணியாற்றிய மரு. கி. நடராசன், மரு.ச.முத்தரசன், மரு.மொ. லோகமணியன், மறுசீராய்வாளர் மரு. செ. நெ. தெய்வநாயகம் ஆகியவர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்தப் பணியை முடித்துக் கொடுக்க அனுமதி வழங்கிய இந்திய மருத்துவம் மற்றும் ஹோமியோபதித் துறை இயக்குநர் திரு. இராமமோகனராவ் இ.ஆ.ப. அவர்களுக்கு மனமார்ந்த நன்றியை என் குழு மருத்துவர்கள் சார்பாகவும் என் சார்பாகவும் தெரிவித்துக் கொள்கிறேன்.

மரு. கு. கணபதி

# INTRODUCTION

SIDDHA SYSTEM OF MEDICINE is one of the ancient systems of medicine compiled by SIDDHARS, who lived a spiritual life in the southern region of India. The Siddhars were the embodiment of divine knowledge, with which they served the people to cure diseases. This practice has been hereditarily nurtured by their successors for generations.

The Siddha system of medicine is not only used to cure, but also to prevent diseases and in turn to increase the life span of human beings. This system, which had unfortunately suffered from gaining importance during the alien rule by the English and others, gained importance in the past four decades due to the support given by Government of Tamil Nadu.

As a result of the due recognition accorded by the Government of Tamil Nadu, degree courses were started in the Siddha system of medicine in 1964 in Madras University. Following this, Madurai Kamaraj University started U.G. course in Siddha in the year 1966 and P.G. course in the year 1972. At present, the Siddha degrees are awarded by the Tamil Nadu Dr. M.G.R. Medical University, Chennai, since all the medical colleges are affiliated to it.

The degree in Siddha medicine which was originally awarded as B.I.M. (Bachelor of Indian Medicine) is now being awarded as B.S.M.S. (Bachelor of Siddha Medicine and Surgery). The Post-Graduate degree is awarded as M.D. (Siddha) in six branches of specialization.

With a view to introducing the Siddha system to the reading public, the Tamil Valarchi Kazhagam which has already released 11 volumes of MARUTTUVA KALANJIYAM on modern medicine in Tamil, has been taking steps to publish 6 volume series on SIDDHA MEDICINE.

The first volume on the history of Siddha medicine i.e. SIDDHA MARUTTUVA VARALARU deals with the history of Siddha medicine and Siddhars who contributed to this sytem of medicine.

**Siddha Maruttuvam : Volume I : Varalaru**

**An Introduction**

This book which has been compiled by Prof. Dr. G. Ganapathy and others begins with the "Siddhars and their Movement in Tamil Nadu – An Introduction:" (First Chapter). In it mysticism, Siddhar mysticism, mystics and Siddhars supernatural powers are defined.

**History of Medicine**

The second chapter is on "History of Medicine". The formation of the Universe, Life and Language are explained. History of different types of Medical Sciences is also briefly stated.

**Siddha Medicine during Sankam Age**

In this chapter "Medicine in Sankam Literature" that five elements which are basic for the formation of every object and the living beings with the single sense to six senses are explained.

**View of Tiruvalluvar on Medicine**

In the fourth chapter Tiruvalluvar and his views on Medicine are explained. Naturally Tiruvalluvar is well versed in explaining any subject with great brevity and elaboration can be given by other experts for every stanza. Full explanations for two Kurals which are from the chapter "Maruttuva Athikaram" are given with application. The diagnostic methodology followed in Siddha system of medicine (En vagai thervu, Nadi, etc), the etiology of the diseases, line of treatment and treatment for ailments are explained based on the first Kural. The constitution of the body, stages of the diseases, relationship between the six seasons and the position of Vali (Vatham), Alal (Pitham) and Aiyam (Kapam) in the body (three vital factors) are explained based on the second Kural.

**Scientific knowledge of Siddhars**

In the fifth chapter, the principles of Siddha Medicine, atomic theory, explanation about the responsibility of Vali (Vatham), Alal (Pitham) and Aiyam (Kapam), about medicinal plants, metals, about "Mupu", the methods adopted in preparing Siddha medicine etc. are given in detail with scientific approach.

**Science and the Spiritual knowledge of Siddhars**

Details about 96 Thathuvams (principles), explanation about Varmam in Siddha medicine, Attanka Yogam are explained.

**Virtue of Siddha Physician**

In virtue of Siddha Physician the important characters to have, in which metal vessel the medicine has to be given or water has to be drunk, the knowledge about planets and their influence on the internal organs of the mankind are stressed.

**Life history of Siddhars**

In these chapters, 18 Siddhars and various other groups of 18 Siddhars, details about Attanga Siddhis (Super Natural powers), life history of various Siddhars and their valuable contribution to the system etc. are given in detail.

**College level teaching of Siddha Medicine**

In this chapter, the beginning and the development for learning the Siddha Medicine in college level is given. The Siddha Medical Colleges available for under graduate courses, Post graduate courses and Research in Siddha medicine, the role of State Government and the Central Government in the development of Siddha system are mentioned.

The authors of the book accept whole heartedly that the entire credit for the successful completion of the volume I goes to Tamil Valarchi Kazhagam. The authors express their gratitudes to the ex-Finance Minister, Govt. of India and ex-Governor of Maharashtra Government Late Thiru C. Subramaniam (Patron of Tamil
2 Valarchi Kazhagam), and Dr. V.C. Kulandaiswamy, ex-Vice-Chancellor of various

Universities and President of Tamil Valarchi Kazhagam for their personal interest in bringing out this book. We also record our sincere thanks to the other associates of Tamil Valarchi Kazhagam: Dr. N. Mahalingam and Dr. P. Ramaswamy, Vice-Presidents.

Dr. P. Balasubramanian and Thiru M. Mathialagan, Editors; and Thiru V. Thirumalai and Dr. Kodumudi Shanmugam, Secretaries in succession, Tamil Valarchi Kazhagam, for their valuable support.

I personally thank my colleagues, Dr. K. Natarajan, Dr. S. Mutharasan and Dr. M. Logamanian for their uninhibited service in the timely completion of this work.

We the authors of the book, thank the Director of Indian Medicine and Homoeopathy, Thiru Ram Mohana Rao, I.A.S. for his permission to carry out this great task.

We hope that this book will definitely serve as an introductory text to Siddha Medicine.

**Dr. G. Ganapathy**

# 1

# தமிழகத்தில் சித்தர் இயக்கம் - ஓர் அறிமுகம்

மா. மதியழகன்

## முன்னுரை

தமிழகத்தில் இலக்கியம் மற்றும் சமயச் சூழலில் புதிரானவர்கள், மர்ம மானவர்கள், சிக்கலுக்குரியவர்கள் என்றெல்லாம் கருதப்பட்டு வந்த குழுவினரே சித்தர்களாவர். ஆனால் இருபதாம் நூற்றாண்டில் பல துறைகளிலும் மறுமலர்ச்சி ஏற்பட்டது போலவே, சித்தர்களின் மீதான எண்ணத்திலும் சாதகமான மாற்றம் ஏற்பட்டது. மற்றவர்கள் அவர்களை விட்டு ஒதுங்கிப் போவதற்குக் காரணமாகக் கருதப்பட்ட புதிர், மர்மம் முதலானவைகளே இக்காலத்தில், அப்படி என்னதான் புரியாத புதிரும், சிக்கலும் அவர்களிடையே மண்டிக் கிடக்கின்றன என்பதை அறியும் ஆர்வத்தையும், துணிவையும், அக்கரையையும் அறிஞர்களிடையே ஏற்படுத்தின. அதன் விளைவாகச் சித்தர் பாடல்களைத் தொகுத்துப் பதிப்பித்தல், அவர்களைப் பற்றிய விளக்க நூல்களை எழுதுதல், ஆய்வுகளை மேற்கொள்ளுதல் முதலிய செயற்பாடுகள் மேற்கொள்ளப் படலாயின. அதன் மூலம் சித்தர்களுடையதும், சித்தர்களைப் பற்றியதுமான நூல்கள் கணிசமான அளவில் கிடைத்துள்ளன. தமிழ்ப் பண்பாட்டு மறுமலர்ச்சியின் காரணமாகச் *சித்த மருத்துவமும்* தனி மருத்துவ முறையாக அடையாளம் காணப்பட்டு, அங்கீகாரமும் பெற்றுள்ளது.

## சித்தர்கள் நிறுவனமயப்பட்டவர்களா?

சமண, பௌத்த, சைவ, வைணவ சமயங்களைப் போல் நிறுவனமயமாக்கப் பட்ட சங்கம், சமயம், மடம் முதலிய அமைப்புகளை நிறுவி, அவ்வமைப்புகளின் கீழ்,

ஓர் இயக்கமாகச் சித்தர்கள் செயல்பட்டார்களா என்பது சித்தர்களைப் பற்றிய சிந்தனையின்போது முதற்கண் தோன்றும் வினாவாகும்.

ஓர் இயக்கம் என்பது, அது தோன்றி வளர்வதற்கான பல்வேறு வரலாற்று ரீதியான புறக்காரணிகளின் அடிப்படையில், குறிப்பிட்ட சிலவோ பலவோவான கொள்கைகளுக்காக, ஒரு தலைவனின் கீழ், பல தொண்டர்களின் செயல்பாட்டின் மூலம் இயங்குவதாகும். சமண, பௌத்த இயக்கங்கள் இவ்வகையில் தோன்றி வளர்ந்தனவே. இவ்வியக்கங்கள் வரையறுகப்பட்ட கொள்கைகளின் அடிப்படையில், திட்டமிட்ட முறையில் தம் கருத்துக்களை மக்களிடையே பரப்பி, ஒருசார் மக்களைத் தங்களின் ஆதரவாளர்களாகவும் ஆக்கிக் கொண்டன. சைவ, வைணவ சமயங்களும் கடவுளரைத் தலைவராகக் கொண்டு, வரையறுத்த கொள்கைகளின் அடிப்படையில் இயங்குவனவாகும். தமிழகத்தில் சித்தர் இயக்கம் என்பது மேற்கூறிய சமண, பௌத்த, சைவ, வைணவ இயக்கங்களைப் போல செயற்படவில்லை என்பது வெளிப்படையாகத் தெரியவருகிறது. அப்படியானால் சித்தர்கள் என்ற பெயரில் ஒரு சாராரை, ஓரினப்பட்டவர்களாகக் கருதுவது எதனடிப்படையில் என்பது அடுத்துத் தோன்றும் வினாவாகும்.

ஒரு தலைமையின் கீழ், வரையறுக்கப்பட்ட கொள்கையின் அடிப்படையில் சங்கம், சமயம், மடம் முதலிய அமைப்பு நிறுவனமாகச் சித்தர்கள் இயங்கவில்லை என்றாலும் கருத்தியல் (Concept) ஒருமைப்பாடொன்றன் அடிப்படையில் ஒரு சாராரைச் சித்தர் என்ற வகைப்பாட்டுக்குரியோராகக் கூறமுடிகிறது. சித்தர்கள் ஓரியக்கத்தினராகத் திட்டமிட்டுச் செயற்படவில்லை, என்றாலும் அவர்களிடையே குரு – சீடப் பாரம்பரிய உறவு முறை இருந்தது போல் தோன்றுகிறது.

சித்தர்களை குரு – சீடப் பாரம்பரியத்தைத் தழுவியர்களாகக் கொள்வதுவும் மேம்போக்கானதொரு கருத்தாகவே காணப்படுகிறது. ஏனென்றால் அவர்களுள் எல்லாச் சித்தர்களுக்கும், இன்னாருக்கு இன்னார் குரு, இன்னாருக்கு இன்னார் சீடன் என்ற பரம்பரை வழித் தொடர்ச்சியை அறியமுடியவில்லை. சித்தர் பாடல்கள் பலவற்றில் குரு வணக்கம் வருகிறது.

*அங்கையிற் கண்ணாடிபோல ஆதிவத்துவை*
*அறிவிக்கும் எங்கள் உயிரான குருவைச்*
*சங்கையறச் சந்ததமுந் தாழ்ந்து பணிந்தே*
*தமனியப் படம் எடுத்து ஆடுபாம்பே.*[1]

(உள்ளங்கையில் இருக்கும் கண்ணாடி பார்ப்பவரின் முகத்தைக் காட்டுவதுபோல் பரம்பொருளை அறிவிக்கும், உயிருக்கு நிகரான குருவை ஐயத்திற்கிடமின்றி நித்தமும் தாழ்ந்து பணிந்து, பாம்பே நீ படம் எடுத்து ஆடுவாயாக.)

என்றவாறு வரும் குரு வணக்கத்தில், குருவினுடைய பெயர் விதந்து கூறப் பெறுவதில்லை. பொதுப்படையான குரு வணக்கமாகவே அமைந்திருக்கும். சித்தர்களுடைய பாடல்கள் பலவும், குரு ஒருவர் தம் சீடனுக்குக் கூறும் அமைப்பில் அமைந்தனவாகும்.

*அய்யனே குருவான அகண்டமூர்த்தி*
*அரிதாமென்ற ஞானமெல்லாம் அருளிச் செய்தாய்*
*மெய்யனே ஏறுகிற சாதகஞ்சொல்*
*வேதாந்த லட்சியத்தை விளங்கச் சொல்லு.*

. . . . . . .

*சாற்றிடென்று கேட்ட மாணாக்க னேகேள்*
*சந்தோட மாச்சுதிப்போ சார்பு சொல்வேன்.*[2]

(பரந்த ஞானத்தை உடைய குருவே அரிய பல அறிவுரைகளைப் புகட்டியதைப் போன்றே, வீடுபேற்றை அடைவதற்கான மார்க்கமாகிய பிராணாயாமத்தை எடுத்துரைப்பீராக .... இலக்கை அடையும் மார்க்கத்தைக் கேட்ட மாணவனே! மிக்க மகிழ்ச்சியுடன் கூறுகிறேன்.)

என்பது சித்தர் பாடல்கள் பலவற்றின் அமைப்பு முறை. சித்தர் பாடல்களில் மிகப்பரவலாகப் பயின்று வரும் 'பாரப்பா', 'கேளப்பா', 'காணப்பா', 'ஆமப்பா', என்றவாறு வரும் முன்னிலைகளும், பிறர் கேட்கச் சித்தர் சொல்லுவதாக அமைந்த அமைப்பைக் காட்டுவனவாகவே உள்ளன. சித்தர்கள் யாவரும் உண்மையில் சீடர்களை முன்னால் இருத்திக் கொண்டு, அவர்களுக்கு போதிப்பதற்காகத்தான் தம் செய்யுட்களை இயற்றினர் என்று துணிந்து கூறவியலாது. ஒரு சிலர் அவ்வாறு செய்திருக்கலாம். பெரும்பாலான சித்தர் பாடல்கள் குரு சீடனுக்குக் கூறும் 'பாவனையில்' அமைந்தனவேயாகும். இத்தகைய சூழ்நிலையில் சித்தர்களை, 'ஓரினப்பட்டவர்களாகக் கூறுவது, நுண்மையாக, கருத்தியலில் அவர்களிடையே காணப்படும் ஒருமைப்பாட்டையும் மரபுத் தொடர்ச்சியையும் வைத்தேயாகும்.

இதே போன்று சித்த மருத்துவர்களிடையேயும் இன்னார் இன்னாருக்கு உரைத்தார் என்று பரம்பரைத் தொடர்ச்சியைக் கூறும் முறைகளும் நம்பிக்கைகளும் காணப்படுகின்றன. அவற்றுள் ஒன்று: "சிவபெருமான் உமையவளுக்கும், உமை நந்திதேவருக்கும், நந்தி தன்வந்திரிக்கும், தன்வந்திரி அச்சுவினி தேவர் களுக்கும், அவர்கள் அகத்தியருக்கும், அகத்தியர் புலத்தியருக்கும், புலத்தியர் தருமசௌமியருக்கும், தருமசௌமியர் தேரையருக்கும், தேரையர் தன் வழி வந்த ஏனையோர்க்கும் கற்பித்தார்" என்பதாகும். இத்தகைய வம்சாவளியின் வரலாற்றுத்தன்மை என்ன என்பது ஆராய்ச்சிக்கு உரியதாகும்.

எனவே சித்தர் என்போர் பருமையளவில், நிறுவனமயப்பட்ட சங்கம், சமயம் முதலிய அமைப்புகளை நிறுவி, அதன்வழி இயங்கவில்லை; அவர்கள் தம் கொள்கைகளை மக்களிடையே பிரச்சாரம் செய்து, தமக்கென ஒரு கூட்டத்தைச் சேர்க்க முயன்றவர்களும் அல்லர். 'ஒத்த கருத்தியலின் மரபுத்தொடர்ச்சியை உடைய ஒரு கூட்டத்தவர்' என்ற முறையிலேயே அவர்களை ஓரினப்பட்டவர்களாகக் கொள்ள முடிகிறது.

## சித்தர் என்போர்

சித்தர் என்ற சொல்லை இடுகுறிப் பெயராக் கொண்டால், ஆன்மீகத் தேடலில் ஈடுபட்ட ஒரு கூட்டத்தாரைக் குறிப்பதாகக் கொள்ளலாம். ஆனால் இப்பெயரைக் காரணப்பெயராகக் கொண்டு பல்வேறு காரணங்கள் கூறப்பட்டுள்ளன.[3] அக்காரணங்கள் யாவும் கூறியோர்தம் கருத்து விளக்கங்களாகவே அமைந்துள்ளன. சித் – சித்து – சித்தி – சித்தம் – சித்தர் என்பன ஒன்றோடொன்று தொடர்புடைய அல்லது ஒரு மூலத்திலிருந்து தோன்றிய சொற்களாகக் காணப்படுகின்றன. இறைவனை 'சத், சித், ஆனந்தம்' என்னும் மூன்று நிலைகளை உடையவனாகக் கூறுவது வழக்கம். இத்தொடரிலுள்ள 'சித்' என்னும் சொல் இறைவனைப் பேரறிவாளன் என்று சாற்றுகிறது. இதிலிருந்து சித் – சித்து என்னும் சொல் பேரறிவு என்னும் பொருளை உடையது என்பது தெளிவாகிறது. 'சித்தம்' என்பதை அந்தக்கரணங்களுள் ஒன்றாக சைவ சித்தாந்த சாத்திரம் கூறுகின்றது. இது தீர்மானிக்கும் தன்மை உடையது. சித்தர்களின் கருத்துப்படி இதுவே மனம் – உள்ளம் – இருதயம்; இதுவே மனிதனுக்கு மூலப் பொருள்.[4] 'சித்தி' என்பது பெறத்தக்க பேற்றை அடைதல் என்னும் பொருளை உடையது.[5] எனவே அறிவுபூர்வமான, சிந்தனைத் தெளிவின் மூலம் பெறத்தக்க பேறு இதுவெனத் தீர்மானித்து, அப்பேற்றினைப் பெற முயன்றவர்களே சித்தர்களாவர். சித்தர்கள் பெறத்தக்க பேறாகக் கருதியதும் வீடுபேற்றை அடையும் நிலையையேயாகும். இவ்வாறல்லாமல் வீடுபேறு அல்லது மோட்சம் அடைந்தவர்களே சித்தர்கள், அல்லாதவர்கள் பக்தர்கள் என்று கருதுவாருமுண்டு.[6] இது பொருந்தாது. சித்தர்களும் பக்தர்களும் ஆன்மீகத் தேடலில் ஈடுபட்ட தனித்தனிக் கூட்டத்தாரேயாவர், இவ்விரு சாராருக்கும் அடிப்படை நோக்கம் வீடுபேறு அடைதலே. ஆனால் அப்பேற்றை அடையும் முறையிலேயே இருசாராரும் வேறுபடுகின்றனர். பக்தர்கள் உணர்வுவயப்பட்ட, சமயம் சார்ந்த ஆன்மீகவாதிகள் என்றால், சித்தர்கள் அறிவுவயப்பட்ட, சமயம் கடந்த ஆன்மீகவாதிகளாவர்.

சித்தர் என்போர் யாவர் என்பதற்கும் சித்தர் பாடல்களிலேயே சில விளக்கங்கள் காணக் கிடைக்கின்றன. பிராணாயாமத்தின் மூலம், பிராணனை

(குண்டலினி என்னும் உயிர்ப்பைப்) புருவமத்தியில் நிறுத்தி, ஒளிமயமான இறைவனை அகக்கண்களால் கண்டு மகிழ்பவனே சித்தன்.

*யோகச் சமாதியின் உள்ளே யகலிடம்*
*யோகச் சமாதியின் உள்ளே யுளரொளி*
*யோகச் சமாதியின் உள்ளே யுளசத்தி*
*யோகச் சமாதி உகந்தவர் சித்தரே.*[7]

என்று திருமூலரும் யோகச் சமாதியின் (யோகாசனம்) மூலம் அகநோக்கிப் பரம்பொருளை அறிய, அடைய முற்படுபவரே சித்தர் என்று குறிப்பிடுவர். கொங்கணர், கருவூரார், சட்டை முனி, இராமதேவர் முதலானோரும் 'வாலை' என்னும் உயிர்ப்பைத் தன்னுள்ளேயே இருத்தி, தன் அகத்திலே இறைவனைக் காண முற்படுபவரே சித்தர் என்று சித்தருக்கு இலக்கணம் கூறுகின்றனர்.[8] மூச்சையடக்கித் தன்னுளேயே தண்ணருள் இறைவனைக் காண முற்படும் நெறிக்கு மாறான, வைதீகச் சமயங்கள் கூறும் வேதாந்த சம்பிரதாயங்களை வெறுத்துப் புறந்தள்ளுவதும் சித்தருக்குரிய இயல்பாகும்.

*மூலமதை யறிந்தக்கால் யோகமாச்சு; முறைமையுடன்*
*கண்டக்கால் வாதமாச்சு*
*சாலமுடன் கண்டவர்முன் வசமாய் நிற்பார்*
*சாத்திரத்தைச் சுட்டெரித்தால் அவனே சித்தன்.*[9]

என்று அகஸ்தியர், சாத்திரத்தைச் சுட்டெரித்தலையும் சித்தருக்குரிய இலக்கண மாகவே கூறுவர். பத்திரகிரியாரும்

*சாத்திரத்தைச் சுட்டு சதுர்மறையைப் பொய்யாக்கிச்*
*சூத்திரத்தைக் கண்டு துயர் அறுப்பது எக்காலம்*[10]

என்பர்.

சமண சமயத்திலும் சித்தர் என்றதொரு பிரிவு உண்டு. தீவிர நோன்பை மேற்கொண்டு வாழ்ந்த அவர்களுக்கும் இங்கு ஆராய்ச்சிக்கு எடுத்துக்கொள்ளப் பட்டிருக்கும் சித்தர்களுக்கும் தொடர்பு இருப்பதாகத் தெரியவில்லை.

## சித்தரும் அருளியலும்

அருளியல் (Mysticism) என்பது ஒரு பொதுவான கருத்தியல் (concept). மறைபொருளைத் தேடல், இறைமையோடு ஐக்கியமாதல், இறையனுபவம் எனப் பரந்துபட்ட அனுபவத்தைக் குறிப்பது. இது இறையனுபவத்தைப் பெற முற்படுவார்

தம் நிலைக்கேற்பப் பல்வேறு வகைப்பட்டதாக அமைகிறது. கிறித்துவ சமயம் சார்ந்தவர்களின் இறையனுபவம், 'கிறித்துவ அருளனுபவம்' (Christian mysticism), இஸ்லாமியர்களின் இறையனுபவம், 'இஸ்லாமிய அருளனுபவம்' (Islamic mysticism) என்று அழைக்கப்படுகின்றன. இவ்வகையில் சித்தர்களின் இறையனுபவம், 'சித்தர் அருளனுபவம் (Cittar mysticism) என்றே அமையும். இவ்வாறல்லாது Mystics என்றாலும் சித்தர் என்றாலும் பொருள் ஒன்றே எனக் கூறுவாறும் உளர்[11]. Mystics என்பதும் சித்தர் என்பதும் சொற்பொருள் அளவில் வேண்டுமானால் ஒரு பொருள் குறித்தனவாகலாம். ஆனால் இவ்விரு சொற்களும் வெறும் சொற்பொருளை மாத்திரம் உணர்த்தாமல், பரந்த நிலையில் ஒரு கருத்தியலை (Concept) உணர்த்தும்போது, சித்தர் மரபு, அருளியலின் ஒரு வகையாக மட்டுமே அமையும். ஏனெனில் சித்தர் என்ற சொல்லும் நடைமுறையில் ஆன்மீகவாதிகள் அனைவரையும் குறிப்பிடாமல் ஒரு சாராரை மட்டுமே குறிப்பதால், சித்தர்களைப் பொதுப்படையாக Mystics (அருளாளர்) என்று கொள்ளாமல், அருளாளர் வகையில் ஒரு சாரார்தான் எனக் கொள்வதுவே பொருந்தும்.

## சித்தர் கணம் (எண்ணிக்கை)

தமிழகத்துச் சித்தர்கள் யார், அவர்கள் எத்தனை பேர் என்பதே ஒரு தனிச் சிக்கலாகும். அறிவுபூர்வமாகச் சிந்தித்துச் செயல்படுவோர் அனைவருமே சித்தர்கள்தாம் என்ற கருத்து நிலவுகிறது. இவ்வகையில் தொல்காப்பியர்[12], திருவள்ளுவர், வீரமாமுனிவர்,[13] பாரதியார், திரு. வி. கல்யாணசுந்தரனார்[14] முதலியவர்களும் ஆழ்வார், நாயன்மார்களும் கூடச் சித்தர்கள்தாம் என்ற கருத்துமுண்டு.[15] இதுவொரு பொதுவான, மேலோட்டமான கருத்தேயல்லாமல் சித்தர் மரபு என்ற வரையறைக்குள் அடங்குவதன்று. சித்தர் மரபு என்ற வரையறையொன்றை வகுத்துக் கொண்டு காணுங்கால், மேற்கூறியவர்களின் நிலைவேறு, சித்தர்களின் நிலைப்பாடு வேறு என்பது புலனாகும். இங்குள்ள சிக்கலெல்லாம் சித்தர் மரபு என்ற வரையறைக்குள்ளேயே சித்தரின் எண்ணிக்கை எவ்வளவு என்பதாகும்.

தமிழகச் சித்தர்களைப் பதினெட்டுப் பேர்களாகக் கொண்டு, 'பதினெண் சித்தர்' என எண் அடை சாற்றி வழங்குவது பொதுவான வழக்கம். இந்திய மக்களிடையே பதினெட்டு என்ற எண் மிகவும் பிரபலமாக வழங்கிவரும் எண்ணாகும். தேவாசுரப் போர் நடந்த கால அளவு 18 ஆண்டுகள், இராமாயணப் போர் 18 மாதங்கள், பாரதப் போர் 18 நாள், செங்குட்டுவன் – கனக விசயன் போர் 18 நாழிகைகள், ஆடிமாதம் 18ஆம் நாள் சிறந்தது, புராணங்கள் 18, உபபுராணங்கள் 18, மெய்யெழுத்து 18, மேல் கணக்கு 18, கீழ்க்கணக்கு 18 எனப் பெரும்பாலானவற்றையும் பதினெட்டு என எண்ணிக்கைப் படுத்திக் கூறும் மரபுப்படியே

சித்தர்களையும் பதினெண்மர் எனக் கூறியிருக்கலாம். பகவத் கீதையில் பதினெட்டு வகையான யோகங்கள் கூறப்பட்டுள்ளன. அப்பதினெட்டு யோகங்களின் தாத்பரியமே (குறியீடே) பதினெண் சித்தர் என்ற கருத்துமுண்டு.[16] இக் கருத்துகளுக்கும் சித்தர்களைப் பதினெண்மராகக் கருதுவதற்கும் தொடர்பு ஏதுமில்லை என வெட்டிக் கூறுவதற்கோ அன்றி இக் கருத்துகளின் அடிப்படையில்தான் சித்தர் பதினெண்மர் என்ற வழக்குத் தோன்றியது என்று ஒட்டிக் கூறுவதற்கோ போதுமான ஆதாரங்கள் இல்லை. எனவே

*பதினெட்டுப் பேர் எனக் குறித்ததன் நோக்கம்*
*ஒரு வேளை சித்தர் கூட்டம் எனக் கணக்கெடுக்கப்பட்ட*
*காலத்தில் பதினெட்டுப் பேர் மட்டும் இருந்திருக்கலாம்.*
*அதுவே மரபாக வந்திருக்கலாம். அல்லது சித்தர் கூட்டத்தில்*
*சிறப்போடு விளங்கியவர்கள் பதினெட்டுப் பேராக*
*இருந்திருக்கலாம்*[17]

என்றே கருத வேண்டியுள்ளது. சிதம்பரம் நடராசர் கோயிலில் சித்தர்களாக இருபத்தியொரு உருவச் சிலைகள் வைக்கப்பட்டுள்ளன. இது முதலில், சித்தர் என்போர் பதினெட்டுப் பேர் மட்டுமல்லர் என்பதற்குக் காட்சி பூர்வமான சாட்சியமாகும். சித்தர்களைப் பதினெட்டுப் பேர்கள் எனக் கூறுவனவாகப் பல்வேறு பட்டியல்கள் உள்ளன.[18] அப்பட்டியல்கள் யாவும் ஒன்று போலில்லாமல், ஒன்றுக்கொன்று வேறுபட்ட நபர்களைக் குறிப்பனவாகவே உள்ளன. அப்பட்டியல்கள் கூறும் நபர்களையெல்லாம் தொகுத்துப் பார்த்தால் ஐம்பதுக்கும் மேற்பட்ட பெயர்களைக் காணமுடிகிறது. அப்பட்டியல்களில் இடம் பெற்றுள்ள சித்தர்களே அல்லாமல் வேறு பல சித்தர்களும், பெயர் தெரியாதவர்களும் கூடச் சித்தர் மரபுக்குரியவர்களாகக் காணப்படுகின்றனர்.[19] எனவே சித்தர்களை இத்துணை பேர் என அறுதியிட்டுக் கூறுவது நடைமுறைக்குப் பொருத்தமாகத் தோன்றவில்லை. கைலாயக் கம்பளிச் சட்டை முனி கூறுவது போல் அவர்களைப் பலராகக் கொள்வதுவே பொருத்தமானதாகும்.[20]

## சித்தர் வரலாறு

தமிழகத்தில் சித்தர்களின் தோற்றக் காலம் எது என்பது பல்வேறு கருத்து முரண்களுக்குட்பட்ட களமாக விளங்குகிறது. குறுந்தொகையுள் (130) வரும்

*நிலந்தொட்டுப் புகாஅர் வானமேறார்*
*விலங்கிரு முந்நீர் காலிற் செல்லார்*
*நாட்டி னாட்டி னூரி னூரிற்*
*குடிமுறை குடிமுறை தேரிற்*
*கெடுநரு முளரோநங் காதலோரே*

எனும் பாடலை எடுத்துக்காட்டி, இப்பாடலில் வரும் நிலத்தினுள் உறைதல், வானத்தில் மறைதல், கடலின் மீது நடத்தல் என்னும் கருத்துகள் அட்டமா சித்திகளுள் அடங்கும் இயற்கை இகந்த கருத்துகளே; எனவே இப்பாடலில் வரும் இக்கருத்துகளை வைத்துத் தமிழகத்தில் சித்தர் மரபு சங்க காலந்தொட்டே நிலவி வருகிறது என்று கருதப்படுகிறது.[21] மேற்குறித்த வெள்ளிவீதியாரின் பாடல், தலைவனது பிரிவிடை வருந்திய தலைவியைத் தோழி ஆற்றுவிப்பதாக அமைந்தது. "தலைவன் நிலத்தைத் தோண்டி அதனுள்ளே சென்று விடமாட்டான்; ஆகாயத்தில் ஏறி மறைந்து விடமாட்டான்; பெருங்கடலைக் காலால் கடந்து தொலைதூரத்திற்குப் போய் விடவும் முடியாது; அவன் இந்நிலவுலகிலே, ஏதோவொரு நாட்டில், ஏதோவொரு ஊரில், ஏதோவொரு வீட்டில்தான் இருப்பான்; தன் வினை (பணி) முடிந்ததும் திரும்ப வருவான்; எனவே நீ கவலற்க" என்று கூறுகின்றாள். இக்கூற்றில் நிலந்தொட்டுப் புகலும் வானமேறலும் கடலைக் காலால் கடத்தலும் நடைபெறக்கூடிய மானுடச் செயல்கள் என்ற நேர் பொருளில் கூறப்படவில்லை. நடைபெறவியலாத அமானுடச் செயல் என்ற எதிர்ப் பொருளிலேயே கூறப்பட்டுள்ளன. எனவே இப்பாடலைக் கொண்டு தமிழகத்தில் சித்தர் மரபு, சங்க காலத்திலேயே இருந்தது என்று வாதாடத் தேவையில்லை. இதேபோன்று தமிழகத்தில் சித்தர் மரபின் தொடக்க காலத்தை வேத காலத்திற்கும் முற்பட்டதாகக் கூறுவதும்,[22] தமிழகத்தில் சித்தர் இயக்கத்தைத் தொன்மை வாய்ந்ததாகக் காட்ட வேண்டும் என்ற அபிமானம் பற்றியல்லாமல் ஆதாரபூர்வமாகவன்று.

தமிழகத்தில் சித்தர் என்ற சொல்லாட்சியையும் சித்தர் மரபுகளையும் முதன் முதலில் திருமூலரின் **திருமந்திரத்திலேயே** காண முடிகிறது. திருமூலரின் பூர்வீகம் கைலாயம் என்றும், இயற்பெயர் நாதர் என்றும் **பெரியபுராணம்** குறிப்பிடுகின்றது.[23] இவருடைய காலம் கி.பி. 6ஆம் நூற்றாண்டு எனக் கணிக்கப் பட்டுள்ளது.[24] இதே கால கட்டத்தில் வட இந்தியாவில் பீகாரிலும் வங்காளத்தின் வட பகுதியிலும் சகஜவாதிகள் (Sahajiyas) என்று சொல்லப்படுகின்ற சித்தர் கூட்டம் ஒன்று தோன்றியுள்ளது. இக்கூட்டத்தாரும் வைதீகச் சமய ஆசாரங்களையும் வேதாகம சாத்திரங்களையும் சாதிப்பாகுபாடுகளையும் புறக்கணித்து, பிராணா யாமத்தின் மூலம் தன்னுள் உறைகின்ற இறைவனை அறிய–அடைய முற்பட்டவர் களாவர். மருத்துவ முறைகளின் மூலம் உடலைக் காப்பதிலும் கவனம் செலுத்தி யுள்ளனர். இவர்கள் உருவ வழிபாட்டை மேற்கொள்ளவில்லை, என்றாலும் சிவனையே தம் முழுமுதற் கடவுளாகக் கொண்டவர்களாவர். எனவே இம்மரபும் சைவத்தின் ஒரு பிரிவாகவே கருதப்படுகிறது.[25] வடநாட்டுச் சித்தர்களை நாதர் என்று அழைக்கும் வழக்கமும் காணப்படுகிறது. **பெரியபுராணத்தின்**படி நாதர் என்ற திருமூலர் வடநாட்டிலிருந்து (கைலாயம்) தமிழ் நாட்டுக்கு வந்தவர் என்ற

நிலையையும், தமிழ்ச்சித்தர் மரபை முதன் முதலாகத் திருமூலரின் வாயிலாகவே அறிய முடிகிறது என்ற நிலையையும், இதே காலகட்டத்தில் வடநாட்டில் நாதர் (சித்தர்) மரபு தோன்றிப் பரவியது என்ற நிலையையும் சேர்த்துப்பார்க்கிறபோது, தமிழ்நாட்டுச் சித்தர் மரபிற்கும் வட நாட்டு நாதர் மரபிற்கும் இடையே நெருங்கிய உறவும் ஊடாட்டமும் இருந்திருக்கிறது என்பதை அறியமுடிகிறது. திருமூலரின் காலத்தை ஒட்டியே (பல்லவர் காலம்) சைவ சமயத்தின் பல்வேறு பிரிவுகளான பாசுபதம், காபாளிகம், காளாமுகம் முதலியனவும் வடநாட்டிலிருந்து தமிழ்நாட்டுக்கு வந்தேறியுள்ளன[26] என்பதும் அக்காலத்தில் நிலவிய கருத்துப் பரிமாற்றங்களை உறுதிபடுத்துவதாய் உள்ளன.

தமிழகச் சித்தர் மரபின் வரலாற்றைத் திருமூலரிலிருந்தே தொடங்க வேண்டியதாகிறது. தமிழ் இலக்கிய வரலாற்றில் சித்தர் கொள்கைகளுக்கு இலக்கிய வடிவம் கொடுத்த முதல்வர், மூலவர் திருமூலரே. அவரும் சித்தர் கொள்கைகளை மட்டும் கூறுவதாகத் தம் நூலை இயற்றினாரில்லை. சைவ சமய சித்தாந்தங் களுக்கு இடையேதான் சித்தர் மரபையும் கூறிச் சென்றுள்ளார். அவருடைய நூலும் சித்தர் இலக்கிய வரிசையில் இடம் பெறாது, சைவத் திருமுறைகளுள் ஒன்றாக – பத்தாம் திருமுறையாகக் கொள்ளப்பட்டுள்ளமையும் கவனத்திலிருத்த வேண்டிய தாகும். சித்தர் வரலாற்றில் இயற்கையிகந்த, அமானுட வாழ்வை மேற்கொண்ட வராக அறியவரும் முதல் சித்தரும் திருமூலரே. அவர் மூவாயிரம் ஆண்டுகள் வாழ்ந்ததாகவும், கூடுவிட்டுக் கூடு பாய்ந்ததாகவும் கதைகள் வழங்கி வருகின்றன.

சித்தர் வரலாற்றில் திருமூலரையடுத்து, ஒரு நீண்ட இடைவெளிக்குப் பிறகே மீண்டும் சித்தர் பற்றிய செய்திகளை அறிய முடிகிறது. கி.பி. 14ஆம் நூற் றாண்டு முதற்கொண்டே சித்தர்களின் வரலாறு தொடர்ச்சியாக அமைந்து வருகிறது.[27] சித்தர் மரபில் திருமூலரை அடுத்துத் தோன்றிய மிகப் பெருஞ்சித்தர் சிவவாக்கியர். வாழ்ந்த காலம் கி.பி. 14ஆம் நூற்றாண்டு. இவரே சித்தரின் கொள்கைகளை மட்டும் கூறுவதாகத் தனி நூலை இயற்றிய முதல் சித்தர். இவரைத் தொடர்ந்து இதே நூற்றாண்டில் பட்டினத்தார், பத்திரகிரியார், ஔவையார் முதலிய சித்தர்கள் வாழ்ந்துள்ளனர். இவர்களைத் தொடர்ந்து 15ஆம் நூற்றாண்டில் அகப்பேய்ச் சித்தர், அழுகுணி, இடைக்காடர், ஏனாதி, கடுவெளி, குதம்பை, காளை, பாம்பாட்டி முலியோர் வாழ்ந்துள்ளனர். இச்சித்தர்கள் யாவரும் சித்தர் மரபின் 'ஞான சித்தி' அல்லது 'யோக சித்தி'[28] மரபைச் சேர்ந்தவர்களாகவே அமைகின்றனர். இவர்கள் புறவுலகைப் புறக்கணித்துத் தன்னில் தான் ஒடுங்கி, தன்னுள்ளேயே லயிக்க வேண்டும் என்பதைப் போதித்துள்ளனர். இவர்கள் அறநெறிப் புலவர்களைப் போன்றே உலக நிலையாமை, யாக்கை நிலையாமை, பெண் வெறுப்பு முதலிய வற்றைக் கூறிச் சென்றுள்ளனர். உருவ வழிபாட்டையும், சாதி, சமய ஏற்றத்

தாழ்வுகளையும் போலி குருக்களையும் வைதீக நெறிகளையும் கட்டோடு வெறுத்தொதுக்கிவிட்டுச் சமரச சன்மார்க்கத்தையே அவாவியுள்ளனர்.

*கோயிலாவது ஏதடா குளங்களாவது ஏதடா*
*கோயிலும் குளங்களும் கும்பிடும் குலாமரே*
*கோயிலும் மனத்துளே குளங்களும் மனத்துளே*
*ஆவதும் அழிவதும் இல்லையில்லை இல்லையே.*[29]

என்பது தன்னுள்ளேயே இருக்கிற இறைவனை அறியாது, கோயிலிலும் குளத்திலும் சென்று தேடும் மூடர்களை (குலாமர்) நோக்கிப் பாடப்பட்ட பாடலாகும்.

*பறைச்சியாவது ஏதடா பணத்தியாவது ஏதடா*
*இறைச்சி தோல் எலும்பினும் இலக்கமிட்டு இருக்குதோ*
*பறைச்சிபோகம் வேறதோ பணத்திபோகம் வேறதோ*
*பறைச்சியும் பணத்தியும் பகுத்துப்பாரும் உம்முளே.*[30]

என்பது சாதிபேதத்தைக் கண்டிப்பது. அறிவியல் முறைப்படி, எந்தவொரு ஆரோக்கியமான பெண்ணுடன் உடலுறவு கொண்டாலும், ஏற்படும் இன்பம் ஒன்றேதான். தாழ்ந்த சாதிக்காரி என்பதால் குறைந்த இன்பமோ, உயர்ந்த சாதிக்காரி என்பதால் மிகுதியான இன்பமோ ஏற்பட்டுவிடாது. அப்படியிருக்கப் பறைச்சி என்றும் பணத்தி என்றும் தாழ்வு உயர்வு கற்பிப்பது ஏன் என்ற சிந்தனையைத் தூண்டுவது இப்பாடல். இதே போன்று வேதம், ஆகமம் முதலிய வைதீக சாத்திரங்களும் மக்களை ஏமாற்றிப் பிழைப்பு நடத்தும் புரோகிதர்களுக்காக இயற்றப்பட்டவை. எனவே இந்நூற் பயிற்சிகள் ஆன்மீகத் தேடலுக்குத் தேவையற்றவையேயாம்.

*சதுர்வேதம் ஆறுவகைச் சாத்திரம் பல*
*தந்தரம் புராணங்கலை சாற்றும் ஆகமம்*
*விதம் விதமானவான வேறு நூல்களும்*
*வீணான நூல்களே என்று ஆடுபாம்பே*[31]

என்பது அவர்கள் துணிபு.

தமிழகத்தின் இடைக்காலம் பேரரசின் கீழ், நிலமானிய சமூக அமைப்பு வன்மையாகக் கட்டமைந்த காலமாகும். இக்காலத்தில் வாழ்க்கை முறையானது கோயில்களின் கட்டுப்பாட்டில், வைதீகச் சமயங்களின் ஆதிக்கத்திற்கு உட்பட்டிருந்ததாகும். சாதிக் கட்டுப்பாடுகளும், சமய ஆசாரங்களும் சமூக வாழ்வின் இன்றியமையா அம்சங்களாகக் கடைபிடிக்கப்பட்டு வந்துள்ளன. தமிழகத்தில் ஆண்டான் அடிமை முறை மேலோங்கி இருந்ததும் இக்காலத்திலேதான். இத்தகைய

சூழ்நிலையில் சமகாலத்துச் சமூக, சமயக் கட்டுத்திட்டங்களை எதிர்த்துக் குரல் கொடுத்தவர்களாகச் சித்தர்கள் விளங்குகின்றனர். இதனால் இவர்களைச் சமூகச் சீர்திருத்தவாதிகளாகவும் புரட்சியாளர்களாகவும் கூட மதிப்பிடுவதுண்டு.[32] ஆனால் சித்தர்கள் அனைவரும் ஒன்று திரண்டு, ஒரியக்கமாகச் செயற்படாமல், தனித்தனியான உதிரிகளாகவே தம் எதிர்ப்பைத் தெரிவித்துள்ளனர். இவர்களால் சமூகத்தில் குறிப்பிடத் தகுந்த மாற்றம் எதையும் கொண்டுவர முடியாமல் போய்விட்டது. அரசியல் அதிகாரம் பெற்ற நிலவுடைமை அமைப்பில், வேதாகம வழிபட்ட வைதீக, சநாதனக் கோட்பாடுகள் ஆதிக்கம் செலுத்தி வந்த அக்காலத்தில், புரட்சிகரமான மாற்றங்களைக் கொண்டு வருவது சாத்தியமற்றதே.[33] எனினும் சித்தர்கள் தம் சமகாலத்துச் சமய, சமூக முறைமைகளை ஏற்காமல் புறக்கணித் தனர், சாடிக் கண்டித்தனர் என்பதே பெரிய காரியம்தான். அவர்கள் சமூக உறவுகளிலிருந்து தாமே ஒதுங்கியதோடு, பிறரால் ஒதுக்கியும் வைக்கப்பட்டனர்.

15ஆம் நூற்றாண்டிற்குப் பிறகு சித்தர் என்ற பெயரில் ஏராளமானோர் வாழ்ந்துள்ளனர். இக்கால கட்டத்தில் ஞான சித்தியைவிட 'காய சித்தியைப்' பற்றிக் கூறும் மருத்துவ, நாடி சாத்திர, வான சாத்திர, இரசவாத நூல்களே மிகுதியாகக் காணப்படுகின்றன. இந்நூல்களில் 14, 15ஆம் நூற்றாண்டுகளில் வாழ்ந்த ஞான சித்தர் நூல்களில் காணப்படுவதுபோன்று சமய, சமூக ஏற்றத் தாழ்வுகள் பற்றிய எதிர்ப்புக் குரல்களைக் காண முடியவில்லை. இது காலப்போக்கில் சித்தர்களிடையே ஏற்பட்ட சமரச உணர்வின் விளைவா என்பது தனியே ஆய்ந்தறிய வேண்டிய ஒன்று. இவர்கள் காயத்தைப் (உடலை) பேணுவதற்குதவும் மூலிகைகளையும் மருந்து செய்முறைகளையுமே கூறிச் சென்றுள்ளனர். அகத்தியர், போகர், தேரையர், யூகிமுனி, புலிப்பாணி, புலத்தியர், திருவள்ளுவர், மச்சமுனி, தன்வந்திரி, கோரக்கர், ரோமமுனி, புசுண்டர், புண்ணாக்கீசர் முதலியோர் காய சித்தர் மரபில் குறிப்பிடத் தகுந்தவர்களாவர்.

ஆக சித்தர் வரலாற்றில் கி.பி. 14, 15ஆம் நூற்றாண்டு வரையுள்ள காலகட்டத்தில் ஞான சித்தர் மரபு செல்வாக்கு பெற்றிருந்ததையும் 16ஆம் நூற்றாண்டிற்குப் பிறகு காய சித்தர் மரபு வளர்ந்து வந்துள்ளமையையும் அறிய முடிகிறது. 17ஆம் நூற்றாண்டில் தோன்றிய தாயுமானவரும் 19ஆம் நூற்றாண்டில் தோன்றிய இராமலிங்க அடிகளாரும் குறிப்பிடத் தகுந்த பிற்காலத்துச் சித்தர்களாவர். தாயுமானவரையும் இராமலிங்க அடிகளாரையும் சித்தர்கள் என்று மாத்திரம் கொண்டுவிட முடியாது. இவ்விருவரும் சித்தர் மரபு பற்றி மிகுதியாகச் சிந்தித் துள்ளனர். என்றாலும் இவர்களுடைய ஆளுமை, வெறும் சித்தர் பட்டியலோடு அடங்கிவிடவில்லை. சித்தர் என்ற நிலையோடு மிகச் சிறந்த பக்தி மார்க்கிகளாகவும், சைவ சமய சமரச சன்மார்க்கிகளாகவும் இவர்களுடைய ஆளுமை பன்முகப் பட்டுள்ளது.

சித்தர் வரலாறு ஒரு குறிப்பிட்ட காலத்தோடு மட்டும் முடிவடைந்துவிட்ட ஒன்றாகக் கருதப்படவில்லை. அது தொடர்ந்து வரும் ஒன்றாகவே நம்பப்படுகிறது. பொதுவாக சித்தர்கள் யாவரும் மரணமிலாப் பெருவாழ்வு உடையவர்கள், அவர்கள் இன்னமும் மலைக் குகை போன்ற மறைவிடங்களில் வாழ்ந்து வருகின்றனர் என்ற நம்பிக்கை நிலவுகிறது.[34] இது நம்பிக்கையின் பாற்பட்டதேயன்றி உண்மை யாகாது. இது பற்றிய ஆராய்ச்சி இங்கு தேவையில்லை.

சுப்பிரமணிய பாரதியாரையும் சித்தர் மரபுக்குரியவராகக் கூறுவது வழக்கம்.[35] அவர் தனிப்பட்ட வாழ்வில் சித்தராக – இயற்கையிகந்த அதீத ஆற்றல்களைக் கைவரப் பெற்றவராக வாழ்ந்தவர் அல்லர். ஆனால் காற்றை அடக்குதல், காலனை வென்று மரணமிலாப் பெருவாழ்வு வாழ்தல், உடலைப் பேணுதல், உன்மத்தனாகித் திரிதல், காக்கை, குருவி எங்கள் சாதி என அனைத்துயிர்களையும் தம்முயிர் போல் எண்ணிப் பூரித்தல் முதலிய சித்தர் மரபுகளைப் போற்றியவர் – பின்பற்றியவர் என்பதில் ஐயமில்லை.

## சித்தர் மரபு

சித்தர்கள் தங்களுக்கென ஒரு தனிப்போக்கை (Trend) வகுத்துக் கொண்டவர்கள்; என்றாலும் அவர்களுடைய போக்கு ஒரே தன்மை வாய்ந்தது அன்று. அதனை இருவகைப்பட்டதாகவே கொள்ள வேண்டியுள்ளது.[36] பொதுவாகச் சித்தர்கள் வீடுபேறு அடைவதற்குச் சமய வழிப்பட்ட உருவ வழிபாட்டையோ, சாத்திரப் பயிற்சியையோ மேற்கொண்டவர்கள் அல்லர். உடலைக் கோயிலாகவும் உயிரைக் கடவுளாகவும் கருதியவர்கள்.

*உள்ளம் பெருங்கோயில் ஊனுடம் பாலயம்*
*வள்ளற் பிரானார்க்கு வாய்கோ புரவாசல்*
*தெள்ளத் தெளிவார்க்குச் சீவன் சிவலிங்கம்*
*கள்ள புலனைந்துங் காளா மணிவிளக்கே.*[37]

என்பது திருமூலர் தரும் விளக்கம். உடம்பாகிய கோயிலுள் இருக்கும் உயிராகிய கடவுளைப் பிராணாயாமத்தின் மூலம் கண்டறியலாம் என முயன்றவர்கள் ஒரு சாரார். இவர்கள் 'ஞான சித்தர்' அல்லது 'யோக சித்தர்' என்ற வகைக்குரியவர்களாக அமைகின்றனர். பிரிதொரு சாரார் உயிராகிய கடவுள் உறையும் உடம்பாகிய கோயிலைப் பாதுகாத்தலே விடுதலை அடைதலுக்குப் போதுமானது எனக்கொண்டு மருத்துவ முறைகளின் மூலம் உடம்பினை ஓம்புவதில் கவனம் செலுத்தியுள்ளனர். இவர்கள் 'காய சித்தர்' என்னும் வகையைச் சேர்ந்தவர்களாவர். முன்னவர் பிராணயாமத்தின் மூலம் உயிர்ப்பைத் தன்னுள்ளேயே அடக்கிப் பாதுகாப்பதன் மூலம்

உடலை அழியாமல் பாதுகாக்கலாம் எனக் கருதியவர்கள். பின்னவர்களோ மருத்துவ முறைகளைக் கையாண்டு உடலைப் பாதுகாப்பதன் மூலம் உயிரை நிலைபெறச் செய்து சாகாமல் வாழலாம் எனக் கருதியுள்ளனர். யோக சித்தர்கள் உயிருக்கு (கடவுள் – சிவன்) முதன்மை அளித்தவர்கள் என்றால் காய சித்தர்கள் உடலுக்கு (கோயில் – சீவன்) முதன்மை அளித்தவர்களாக அமைகின்றனர்.

இவ்விரு சாராரிடையே மற்றுமொரு பெரிய வேறுபாடும் காணப்படுகிறது. யோக சித்தர்கள் நிலையாமைக் கொள்கையை வற்புறுத்தியுள்ளனர். ஏனைய ஆன்மீகவாதிகள் மற்றும் அறநெறியாளர்களைப் போலவே இவர்களும் உலக மறுப்பாளர்களாகவே காணப்படுகின்றனர். ஆனால் காய சித்தர்களோ நிலையாமைக் கோட்பாட்டை வற்புறுத்தவில்லை. நிலைபேரற்ற இவ்வுலகப் பொருட்களின் துணைகொண்டே, நிலைபேற்றினை அடையலாம் என்ற உலக ஏற்பாளர்களாகவே காணப்படுகின்றனர். தமிழகச் சித்தர் மரபைத் தொடங்கி வைத்தவரான திருமூலர்கூட சித்தர் போக்கை இருவகைப்பட்டது என்று வெளிப்படையாக வகைப்படுத்திக் கூறவில்லை என்றாலும், பொதுப்படையாக, இவ்விரு மரபுகளையுமே கூறிச் சென்றுள்ளார்.

*பூவினிற் கந்தம் பொருந்திய வாறுபோல்*
*சீவனுக்குள்ளே சிவமணம் பூத்தது*
*ஓவியம் போல உணர்ந்தறிவாளர்க்கு*
*நாவி யணைந்த நடுதறி யாமே.*[38]

பூவினில் நறுமணம் பொருந்தியவாறு சீவனுக்குள்ளே (உடலுக்குள்ளே), சிவன் (உயிர்) பொருந்தியுள்ளான்; அவனை ஓவியம் போல ஒடுங்கி (செயலற்று) இருந்து தன்னுள்ளேயே கண்டு மகிழலாம் என்று யோக சித்தர் மரபைக் கூறுவது இது. இதேபோன்று அவர் உடலை ஓம்புவதன் மூலம் உயிரைக் காக்கும் காய சித்தர் மரபை, ‘காய சித்தி உபாயம்’[39] என்றே தலைப்பிட்டுப் பதினாறு பாடல்களில் விளக்கிச் சென்றுள்ளார்.

*உடம்பார் அழியில் உயிரார் அழிவர்*
*திடம்பட மெய்ஞ்ஞானம் சேரவு மாட்டார்*
*உடம்பை வளர்க்கும் உபாயம் அறிந்தே*
*உடம்பை வளர்த்தேன் உயிர் வளர்த்தேனே.*[40]

என்றவாறு திருமூலர் காய சித்தர் மரபையும் வற்புறுத்தியுள்ளார். திருமூலரிடமும் உலக மறுப்புக் கொள்கையைக் காண முடிகிறது. அவர் யாக்கை நிலையாமை, செல்வம் நிலையாமை, இளமை நிலையாமை, உயிர் நிலையாமை, மகளிர் இழிவு முதலிய தலைப்புகளிலேயே (முதல் தந்திரம்) பல பாடல்களை இயற்றியுள்ளார்.

*அடப்பண்ணி வைத்தார் அடிசிலை உண்டார்*
*மடக்கொடி யாரொடு மந்தனங் கொண்டார்*
*இடப்பக்கமே இறை நொந்தது என்றார்*
*கிடக்கப் படுத்தார் கிடந்தொழிந் தாரே.*[41]

"ஒரு நாள் இரவு, நிறைவாக உணவை உண்டுவிட்டுத் தன் மனையாளொடு புணர்ந்து மகிழ்ந்தவர், இடப்பக்கமே சற்று நெஞ்சு வலிக்கிறது என்று படுக்கையில் படுத்தவர் படுத்தவரே, மறுநாள் அவர் எழுந்திருக்கவே இல்லை". என்பது இதன் பொருள். திருமூலர் ஞான சித்தி, காய சித்தி என்ற இரண்டையும் ஒரு நாணயத்தின் இரு பக்கங்களைப் போல் சித்தர் மரபாகக் குறிப்பிட்டுள்ளார். காலப் போக்கில் இவ்விரு கூறுகளும் தனித்தனிக் கிளைகளாகவே வளர்க்கப்பட்டு வந்துள்ளமையை அறியமுடிகிறது.

பதினெண் சித்தர் பெரிய ஞானக் கோவை, சித்தர் பாடல்கள் என்னும் தலைப்புகளில் சித்தர் பாடல்கள் தொகுக்கப்பட்டுப் பல பதிப்புகள் வெளி வந்துள்ளன.[42] அப்பதிப்புகளில் காணப்படுவன யாவும் ஞானக் கருத்துகளைக் கூறும் ஞான சித்தர் மரபைச் சேர்ந்தனவேயாகும். பொதுவாகச் சித்தர் பாடல் என்றாலே, அது ஞானக் கருத்துகளைக் கூறுவனவாகவுள்ள, அப் பதினெண் சித்தர் ஞானக் கோவைத் தொகுப்பைத் தான் குறிக்கும். அத் தொகுப்பிலடங்கியுள்ள பாடல்களே சித்தர் இலக்கியமாகவும் கருதப்படுகின்றன.[43]

ஞான சித்தி என்பது புறவுலகைப் புறக்கணித்து, அகவுலகை வேண்டுவது. புறவுலகம் நிலையற்றது, புறத்தே காணப்படும் பொருட்களால் மனிதனுக்குப் பயனில்லை என்பது இவர்கள் கொள்கை. இவர்கள் பஞ்ச பூதங்களுள் (மண், விண், நீர், நெருப்பு, காற்று) காற்றையே முதன்மையாக எடுத்துக் கொண்டவர்கள். காற்றிலிருந்தே பிற பூதங்களும் தோன்றின என்பது இவர்களின் வாதம்.[44] மனிதனுக்கும் மூலாதாரமாய் இருப்பது காற்றே – சுவாசமே. இதுவே உயிர் இச்சுவாசத்தை வெளியே விடாமல் தன்னுள்ளேயே அடக்கிப் பாதுகாத்தால் நரையில்லை, திரையில்லை, மூப்பில்லை, மேனி அழகு பெறும். மரணமிலாப் பெருவாழ்வு கிட்டும், பேரின்பத்தில் மூழ்கித் திளைக்கலாம்.

*உருத்தரித்த நாடியில் ஒடுங்குகின்ற வாயுவைக்*
*கருத்தினால் இருத்தியே கபாலம் ஏற்ற வல்லிரேல்*
*விருத்தரும் பாலராவர் மேனியும் சிவந்திடும்*
*அருள்தரித்த நாதர்பாதம் அம்மைபாதம் உண்மையே.*[45]

என்ற சிவவாக்கியமும் இந்நிலையை அப்பன் (சிவன்) மீதும், அம்மை (உமை) மீதும் ஆணையிட்டே கூறியுள்ளது. ஞான சித்தர்கள் காற்றை அடக்குதலுக்குப்

புறவயப்பட்ட எந்தப் பொருளையும் துணையாகக் கொள்வது வீண் என்கின்றனர். புறப்பொருட்கள் என்பன:

> தன்னுடைய சக்தி தன்னிலிருந்து வெளியே வியாபிக்கின்றன. அந்தச் சக்தியிலிருந்தே சிருஷ்டிகளுண்டாயின, தன்னால் சிருஷ்டிக்கப்படுகிற பொருள்களைத் தானே கட்டிப் பிடித்துப் புலம்புகிறான்... அந்தப் பிடியை அதிலிருந்து வேறுபடுத்தி அந்தச் சக்தியை தன் உள்ளில் நடத்தி ப்ரம்மரந்திரத்தில் கலக்கச் செய்வதுதான் மோஷம்.[46]

என்பது சித்த வேதம் கூறும் விளக்கமாகும் இக்கருத்திலிருந்து, புறப்பொருட் களால் மனிதனுக்கு 'பந்தம்' ஏற்படுமேயில்லாது விடுதலை கிட்டாது, எனவே புறப்பற்றினின்றும் முற்றாக விடுபட வேண்டும் என்பது புலனாகிறது.

ஞான சித்தர்கள் மோட்சம் அடைவதற்குப் பிராணாயாமம் (பிராணன் – உயிர், சுவாசம், காற்று; ஆயாமம் – காத்தல் – உயிர்ப்பைக் காத்தல் அல்லது காற்றை அடக்குதல்) ஒன்றையே மார்க்கமாகக் கூறி, வேறொன்றுமே தேவையில்லை என வலியுறுத்துகின்றனர். இவர்களுடைய நிலை செயலற்றுச் சிந்தை ஒடுங்கிய சமாதி நிலையாம். இந்நிலையை இவர்கள் 'தூங்காமல் தூங்குதல்'[47] 'மாளாமல் மாளுதல்'[48] என்றெல்லாம் வருணிக்கின்றனர்.

சித்தர் மரபில் இரண்டாவது வகையாக விளங்குவது காய சித்தர் மரபு. இம்மரபினோரும் பிராணாயாமத்தைக் கையாண்டவர்கள்தாம். ஆனால் புறவுலகைப் புறக்கணித்து அகநிலையில் ஒடுங்குதலை மாத்திரம் வற்புறுத்தியவர்களல்லர். புறப்பொருட்களின் துணையோடேயே அகநிலையை எய்தலாம் என்பது இவர் களுடைய போக்காகும். ஞான சித்தர் கடவுளை (உயிரை) நேரடியாக அடைய முற்பட்டவர்கள் என்றால், காய சித்தர்கள் கடவுளை, அக்கடவுள் உறையும் கோயிலின் (உடலின்) மூலமாகக் காண முற்பட்டவர்களாவர். ஆகையால் இவர்கள் உடலுக்கு முக்கியத்துவம் அளித்து, அதனைப் பேணும் மார்க்கமாக மருத்து வத்தையும், மருத்துவத்தோடு தொடர்புள்ள நாடி சாத்திரம், வான சாத்திரம், இரசவாதம் முதலிய துறைகளிலும் தம் கவனத்தைச் செலுத்தியுள்ளனர். இத் துறையில் இவர்கள் செய்தனவாக அச்சேறியும் ஏறாமலும் ஐநூறுக்கும் மேற்பட்ட நூற்கள் காணப்படுகின்றன. தமிழகத்தில் மேற்கூறிய பொருள்கள் (Subjects) குறித்த நூற்கள் யாவும் சித்தர் செய்தனவாகவே கருதப்படுவது வழக்கம்.[49]

இவ்வாறல்லாது சித்தர்களை மூவகையாகப் பாகுபடுத்தும் முறையும் காணப்படுகிறது. ஞான சித்தர், காயசித்தர் என்ற இரு நெறிகளிலும் அடங்காது, அல்லது இவ்விரு நெறிகளையும் இணைத்துக் கடைப்பிடிக்கும் நெறி ஒன்றிருப்

பதாகக் கருதப்பட்டு, அந்நெறியானது 'சன்மார்க்க சித்தர் நெறி' என்றும் அழைக்கப் படுகிறது. அந்த நெறிக்குரியவராகத் திருமூலர் மட்டும் இனங்காணப்பட்டுள்ளார்.[50] வேறுபட்ட கொள்கைகளுக்கிடைய சமரசம் கண்டு, அதன் அடிப்படையில் புதியதாக ஒரு மார்க்கம் தோன்றுமானால், அதைத் தனிப்பெயரில் அமைந்த, புதிய மார்க்க மாகக் கருதலாம். ஆனால் வேறுபட்ட கொள்கை என்ற உணர்வே இல்லாமல், சித்தர் பற்றிய பொதுவான, ஆரம்ப நிலைக் கருத்துகளைக் கூறியுள்ள திருமூலரை, சன்மார்க்க சித்தர் என்ற தனி வகைக்குரியவராகக் கொள்ளலாமா என்பது சிந்தனைக்குரியதாகும்.

## சித்தரும் அரிய ஆற்றலும்

சித்தர்கள் மோட்சம் அடைவதற்காகப் பிராணாயாமப் பயிற்சியை மேற் கொள்ளும்போது அவர்களுக்குப் பல அரிய, அதீத ஆற்றல்கள் கைகூடுவதாகக் கருதப்படுகிறது. அவ்வாறு கூடும் ஆற்றல்கள் எட்டு வகையானவையாகக் (அட்டமா சித்தி) கூறப்பட்டுள்ளன.[51] திருமூலரும் இவ்வெட்டு வகைகளையும் தம் நூலிலேயே விளக்கி உள்ளார்.[52] சித்தர் பாடல்களிலும் சித்தருக்குக் கைகூடும் ஆற்றல்கள் தற்பெருமையுடனேயே குறிப்பிடப்பட்டுள்ளன. "கடும் நஞ்சையுடைய எட்டுத்தலை நாகத்தையும் மிகச் சாதாரணமாகப் பிடித்து ஆட்டுவோம்; இந்திரனின் உலகமாகிய தேவலோகத்தை பூலோகத்திற்கு வரச்செய்வோம்;[53] எட்டு மலைகளையும் பந்தாகச் சுருட்டி எறிந்து விடுவோம்; ஏழு கடல்களையும் குடித்து ஏப்பம் விடுவோம்; அளந்து மதிப்பிட முடியாத மணலையும் அளந்து விடுவோம்;[54] வெம்மை பொருந்திய சூரிய ஒளியைத் தண்மை வாய்ந்ததாக ஆக்குவோம்.[55] இவ்வளவு ஏன், பிரபஞ்சத்தைப் படைப்போனாகிய பிரமனையே எங்களுக்கு அடிமையாக்கிக் கொண்டு, அவனுடைய தொழிலை நாங்களே மேற்கொண்டு, சிவனுக்குச் சமமாக வாழ்வோம்"[56] என்று பாம்பாட்டிச் சித்தர் தம் ஆற்றல்களை எல்லாம் அடுக்கிக் கூறுவர். தாயுமானவ சுவாமிகளும் வித்தகச் சித்தர் கணத்தின் அரிய ஆற்றல்களை எல்லாம் பத்துப் பாடல்களில் விரித்துரைப்பர்.[57] திருவிளையாடற் புராணம் சிவனே சித்தனாகத் தோன்றி, அரிய பல சித்து விளையாடல்களைப் புரிந்ததாக எடுத்துரைக்கின்றது.[58] இத்தகைய அற்புத ஆற்றல்கள் சித்தர்களுக்கு உடல் மற்றும் உள்ளப் பயிற்சியின் மூலம் கைகூடுவது இயல்பே என்பர்.[59] இவ்வாற்றல்களை வைத்துப் பல வித்தைகள் காட்டி மக்களை மயக்கவும் கூடும். ஆனால் சித்தர்களின் நோக்கம் இவ்வாற்றல் களைப் பெறுவதன்று, வீடு பேறு அடைதலேயாகும். பெருங் குறிக்கோள் ஒன்றை நாடிப் போவோர்க்கு, இடைவழியில் கைகூடும் மிகச் சாதாரணமான வித்தை களாகவே இவை கருதத் தக்கன. உண்மையான சித்தர்கள் இவ்வாற்றல்களை ஒரு பொருட்டாகவே கருதமாட்டார்கள்.[60]

## உலகு தழுவிய மரபு

தமிழ் நாட்டுச் சித்தர் இயக்கத்தைப் போலவே உலகின் பல்வேறு பகுதி களிலும் இவ்வகை இயக்கங்கள் தோன்றிப் பரவியுள்ளதை அறிய முடிகிறது. சீன நாட்டில் தோன்றிய தாவோயிசமும் அரேபிய நாடுகளில் நிலவிய சூபியிசமும் வட இந்தியாவின் நாத மரபும் தமிழ் நாட்டுச் சித்தர் இயக்கத்தைப் போன்றனவே யாகும். சமயச் சடங்குகளைப் புறக்கணித்தல், சாத்திரக் குப்பைகளை வெறுத் தொதுக்குதல்; சாதி முதலிய சமூக ஏற்றத் தாழ்வுகளைக் கண்டித்தல்; உருவ வழிபாட்டை மறுத்தல்; மரணமிலாப் பெருவாழ்வு வாழ்வதில் விருப்பம்; உடலை ஓம்ப மருத்துவ முறைகளைக் கையாளல்; மக்களிடமிருந்து விலகி உன்மத்தர்களாகத் தம் விருப்பப்படி வாழ்தல் முதலியன இவர்களிடையே காணப்படும் ஒருமைப்பாடுகள். இளந்தெங்கில் நீர் கலந்தாற்போல இறைவன் வந்து இவர்களுள்ளே கலந்து விட்டபடியால் வேறெதையும் வேண்டாது, பிற மாந்தரிடத்துத் தொடர்பு கொள்ளாது மௌனிகளாகவே இவர்கள் வாழ்ந்துள்ளனர்.

*செய்யதெங்கிலே இளநீர் சேர்ந்த காரணங்கள் போல்*
*அய்யன் வந்து என்னுளம் புகுந்து கோயில் கொண்டான்*
*அய்யன் வந்து என்னுளம் புகுந்து கோயில் கொண்டபின்*
*வையகத்தில் மாந்தர் முன்னம் வாய் திறப்பது இல்லையே* [61]

என்று தமிழ்ச் சித்தர் ஒருவர் தம் நிலைப்பாட்டை வெளிப்படையாகவே கூறிப் போந்துள்ளார்.

தமிழகத்துச் சித்தர் மரபும் வடநாட்டு நாத மரபும் நெருங்கிய தொடர்பு கொண்டன என்பது முன்னமே கூறப்பட்டது.[62] தமிழகத்துச் சித்தர்களைப் பதினெண்மர் என்று கூறுவது போலவே வடநாட்டு நாதர்களை 'நவநாதர்' என ஒன்பது பேராகக் கூறுவது வழக்கம். நவநாதர் என்ற தொடரில் உள்ள 'நவ' என்ற முன்னொட்டை 'நவம்' என்ற பெயர்ச்சொல்லாகக் கொண்டால் புதுமையான கருத்துகளைக் கொண்ட நாதர்கள் (தலைவர்கள்) என்ற பொருள் வருகிறது. இப்பொருளே சரியானதாகவும் படுகிறது[63]. இவ்வாறல்லாமல் 'நவ' என்பதற்கு ஒன்பது எனப் பொருள் கொண்டு நாதர்களை ஒன்பது பேராக மட்டும் கருதுவது பொருத்தமன்று. ஏனெனில் நாதர்கள் 80க்கும் மேற்பட்டோராகவே இருந்துள்ளனர். தமிழகச் சித்தரைப் போன்றே நாதர்களும் வைதீகச் சமயங்களை மறுத்தவர்கள். குரு–சீட மரபைத் தழுவியவர்கள்; இவர்களுக்கும் மூல குரு நந்தியே (சிவனே); இவர்களும் மனித ஏற்றத் தாழ்வுகளைக் கண்டித்து, ஒவ்வொரு சீவனையும் சிவமாகவே கருதியவர்கள். தமிழ்ச் சித்தர்கள் 'சித்த மருத்துவம்' என்ற மருத்துவ முறையை வளர்த்தெடுத்தது போலவே, நாதர்கள் 'ஆயுர்வேத மருத்துவ முறையை வளர்த்தெடுத்துள்ளனர்.

சித்தர் மரபு இலங்கைத் தமிழர்களிடையேயும் பரவியுள்ளது. ஈழத்துச் சித்தர்களின் வரலாறு கி.பி. 18ஆம் நூற்றாண்டிற்குப் பிறகே தெரிய வந்துள்ளது. இலங்கைச் சித்தர் மரபும் தமிழகத்துச் சித்தர் மரபும் ஒன்றே. இந்த நூற்றாண்டிலும் இலங்கையில் சித்தர் மரபு தொடர்ந்து நிலவி வருவதாக நம்பப்படுகிறது.[64]

## சித்தர் கொள்கை

சித்தர் மரபு என்பதும் சித்தர் கொள்கை என்பதும் ஒன்றோடொன்று முரண்பட்டனவல்ல. ஆனால் அதற்காக இவ்விரு தலைப்புகளையும் ஒரே பிரிவாகக் கொண்டு ஆராய்வதற்கில்லை. சித்தர் மரபு என்பது, சித்தர்களிடையே நிலவிய பெரும்போக்கைக் (Trend) குறிப்பது. சித்தர் கொள்கை என்பது அவர்களுடைய கருத்து நிலையைக் (Idealogy) குறிப்பது. எனவே இரண்டையும் தனித்தனியாகக் காண்பதுவே தெளிவு தரக்கூடியதாகும்.

ஞான சித்தர் அல்லது யோக சித்தர், காய சித்தர் ஆகிய இரு சாராருமே சித்தர் கணத்தார்தாம் என்பதில் ஐயமில்லை. அடிப்படை நோக்கத்தில் (மோட்சம் அடைதல்) இரு மரபினோர்க்கும் கருத்து வேறுபாடில்லை. குறிக்கோளை அடையும் முயற்சி – முறையிலேயே வேறுபடுகின்றனர். இந்த முரண்பாடே, சித்தர் மரபு என்ற பொது நிலையிலிருந்து அவர்களை இரு வகைப்பட்டவர்களாகக் கொள்ள வைத்துள்ளது. பிற ஆன்மீக வாதிகளைப் போல, சமயக் கட்டுத் திட்டங்களுக்கு உட்பட்டு பக்தி, கர்மம், முதலிய மார்க்கங்களின் மூலம், உருவ வழிபாடு செய்தும், தல யாத்திரை, தீர்த்த யாத்திரை முதலியவைகளை மேற்கொண்டும், வேதம் முதலிய புனித நூல்களை ஓதியும், காணக்கூடிய உலகத்திற்கு அப்பாற்பட்டு விளங்குவதான பேரின்ப (சொர்க்கம்) உலகொன்றை அடைய வேண்டும் என்று முயன்றவர்கள் அல்லர் சித்தர்கள். இவர்கள் இறைவனைத் தம்மினின்றும் புறம்பே இருப்பதாகக் கொள்ளவில்லை. இளந்தெங்கில் நீர் புகுந்தாற்போல், இறைவன் தம் உள்ளேயே குடிகொண்டவன்,[65] மூலநாடி தன்னிலே முளைத்தெழுந்த சோதி[66]. அவனை அறிவதற்கு – அடைவதற்கு சமய நெறிப்பட்ட வழிமுறைகள் எதுவுமே தேவையில்லை. தன் உயிர்ப்பை வெளியே விடாமல், தன்னுள்ளேயே அடக்கினால் போதும். அதுவே மோட்சம், அதுவே சிவானந்தத்தில் திளைத்தலாம். இதுவே சித்தர்களின் அடிப்படைக் கொள்கை.

இக்கொள்கையை உடைய சித்தர்கள் அண்டத்தையும் அதில் அடங்கியுள்ள பிண்டங்களையும் (பொருள்கள்) இருவேறுபட்டனவாகக் கருதவில்லை. அண்டத்திலுள்ள அனைத்து அணுவிலும் கலந்துள்ள ஆன்மா ஒன்றே.

*அணுவில் அணுவினை ஆதிப் பிரானை*
*அணுவில் அணுவினை ஆயிரங் கூறிட்டு*
*அணுவில் அணுவை அணுக வல்லார்க்கு*
*அணுவில் அணுவை அணுகலு மாமே.*

*அணுவுள் அவனும் அவனுள் அணுவும்*
*கணுவற நின்ற கலப்ப துணரார்*
*இணையிலி யீச னவனெங்கு மாகித்*
*தணிவற நின்றான் சராசரத் தானே.*[67]

என்பதும் இவர்களின் திடமான கொள்கை. இத்தகைய கொள்கையுடையோர், மக்களிடையே காணப்பட்ட சாதி, சமய வேறுபாடுகளையும் மூட நம்பிக்கைகளையும், கண்டித்ததில் வியப்பொன்றுமில்லை.

## சித்தர்களின் கடவுள்

சித்தர்கள் திருமூலர் குறிப்பிடுவது போல 'ஒன்றே குலம்'[68] என்ற சாதி பேதங்களுக்கு அப்பாற்பட்டவர்கள் என்பதில் சிக்கல் இல்லை. ஆனால் அவர்களுடைய, 'ஒருவனே தேவன்' என்ற கொள்கை சில சிக்கல்களைத் தோற்றுவிக்கின்றது. சித்தர்கள் சமய முத்திரையற்ற சமரச சன்மார்க்க நெறியைப் பேணியவர்கள்தாம்; என்றாலும் அவர்கள் சிவனையே தம் ஒரே தேவனாகக் கொண்டதாகத் தெரிகிறது. சித்தர்கள் கொள்கையளவில் ஒரு தேவனைக் குறிப்பிட்டு, நடைமுறையில் அவ்வொரு தேவனாக சிவனையே கொண்டுள்ளதால் அவர்களை முற்றிலும் சமயம் கடந்தவர்களாகக் காண்பதற்குப் பதிலாக, சைவ சமயத்தின் ஒரு சாராராகவே கருத வேண்டியுள்ளது.[69] இதேபோன்று சித்தர்கள் உருவ வழிபாடு கூடாது என்று கூறியபோதிலும் அவர்கள் இறைவனை உருவமுடையவனாக, அதுவும் சைவர்கள் குறிப்பிடும் சிவக் கோலமாகவே காட்டியுள்ளனர்.[70] எனவே சைவத்தின் பல பிரிவுகளான நாயன்மார், பாசுபதர், காளாமுகர், காபாளிகர், வீரசைவர் என்போரைப் போல சித்தர்களும் ஒரு பிரிவினரே எனக் கொள்ள வேண்டியுள்ளது.

## சித்தர்களும் நிலையாமையும்

"சித்தர்கள் எதார்த்த உண்மைகளை எடுத்து வைத்துத் தர்க்க ரீதியாகப் பொருள் முதல்வாத அடிப்படையில் ஆராய்ந்த அறிஞர்கள்,"[71] மாயாவாதத்திற்கு எதிரானவர்கள்[72] என்றெல்லாம் கருதப்படுகின்றனர். தமிழகத்தில் சித்தர் மரபைத்

தொடங்கி வைத்தவரான திருமூலரே யாக்கை (உடல்), உலகம், செல்வம், உயிர் முதலியவற்றின் நிலையாமைகளை விரிவாக வலியுறுத்தியுள்ளார். சித்தர் பாடல்களாகத் தொகுக்கப்பட்டு வெளிவந்துள்ள பதினெண் சித்தர் பெரிய ஞானக் கோவையில் காணப்படும் பாடல்களில் பெரும்பான்மையும் நிலையாமையை – மாயாவாதத்தைப் பேசுபவைதான்.

*தாய்தந்தை பெண்டுபிள்ளை தானென் றிரங்கி நித்தம்*
*காய்பறிக்கி றாயே கனியிருக்க – தாய் தந்தை*
*எத்தனைபேர் பெற்றாரோ என் மனமே நாமுந்தான்*
*எத்தனைபே ரைப் பெற்றோம் இங்கு.*[73]

*காண்பது மழிந்து போகும் காயமுமழிந்து போகும்*
*ஊண்பொருள் அழிந்து போகும் உலகமும் அழிந்து போகும்*
*பூண்பணி நாகைநாதர் பொற்பதம் அழியாதென்று*
*வீண்பொழு தினைப் போக்காமல் வெளிதனில் ஒளிபார் நெஞ்சே.*[74]

என்பனவெல்லாம் நிலையாமையை எடுத்தியம்புவனவேயல்லாமல் வேறில்லை. இத்தொகுப்பில் இடம் பெற்றுள்ள பட்டினத்தார் பாடல்களில் அளவு கடந்த பெண் வெறுப்பும் நிலையாமையுமே கூறப்பட்டுள்ளன.

*எத்தனைபேர் நட்டகுழி எத்தனைபேர் தொட்ட முலை*
*எத்தனை பேர் பற்றி இழுத்த இதழ் நித்த நித்தம்*
*பொய்யடா பேசும் புவியில்மட மாதரைவிட்டு*
*உய்யடா உய்யடா உய்*[75]

என்பது பட்டினத்தாரின் பெண் வெறுப்புப் பாடல். இலக்கியத்தில் இதைவிடக் கடுமையாகப் பெண் வெறுப்பைக் காட்டிவிட முடியாது. இவருடைய உடற்கூற்று வண்ணம் என்னும் நூல் யாக்கை நிலையாமையை உணர்த்துவதற்கென்றே இயற்றப்பட்டுள்ளது. எனவே சித்தர்களை மாயாவாதத்திற்கெதிரானவர்கள் என்று கூறிவிட முடியாது.

மருத்துவம் முதலிய நூல்களை இயற்றியுள்ள காய சித்தர்களை வேண்டுமானால் மாயாவாதிகள் அல்லர் என்று கொள்ளலாம். இவர்களுடைய நூல்களில் ஞான சித்தர் நூல்களைப் போன்று நிலையாமைக் கருத்துகள் விரிவாக, விதந்து கூறப்படவில்லை. இவர்கள் தம் நூல்களிலே, தாம் கூற எடுத்துக்கொண்ட மருத்துவம் முதலிய பொருட்களை (Subjects) அல்லாமல் வேறு எதையும் விரித்துரைக்கவில்லை. காய சித்தர்கள் தம் நூற்களில் நிலையாமையை விரித் துரைக்கவில்லை என்பதற்காக இவர்களை மாயாவாதத்தின் எதிரிகள் என்ற

அணியில் சேர்த்துவிடவும் முடியாது. காய சித்தர்கள் நிலைபேருடைய பரம்பொருளை அடைவதற்காக, நிலையற்ற புறப்பொருட்களையும் அல்லது உலகத்தையும் (ஞான சித்தர்களைப் போல் புறக்கணிக்காமல்) துணையாகக் கொண்டனர், அவ்வளவே.

## சித்தர்கள் கருத்து முதல்வாதிகளே

சித்தர்கள் மாயாவாதத்திற்கு எதிரானவர்கள் அல்லர் என்பது போலவே அவர்கள் பொருள் முதல்வாதிகளோ (Materialists) அல்லது உலகாயதவாதிகளோ அல்லர். அவர்களும் ஏனைய ஆன்மீகவாதிகளைப் போலக் கருத்து முதல்வாதிகளே. அதிலும் அகநிலைக் கருத்து முதல்வாதிகளே (Subjective idealism) ஆவர். அகநிலைக் கருத்து முதல்வாதம் என்பது "பொருள் வகைப் புலப்பாடுகள் என்று கருதப்படுகின்ற அனைத்தும் மனிதனின் உணர்வில்தான், அதாவது அக நிலையில்தான் இருக்கிறது"[76] என்ற கொள்கையை உடையது. சித்தர்களின் தன்னில் தான் ஒடுங்கி, தன்னுள்ளேயே பேரின்பப் பெருவெளியைக் காணவேண்டும் என்ற கொள்கையும் இவ்வகநிலைக் கருத்து முதல் வாதத்தின் பாற்பட்டதுதான் என்பதில் ஐயமில்லை. சித்தர்கள் பூமியில் இருக்கின்ற அனைத்தும், மனிதர்கள் உட்பட ஒரே சீவன்தான்; மற்றவை வெறும் புலனுணர்வுகளே என்ற கொள்கையை உடையவர்கள். இதனை, "தானே ஈஸ்வரன், தன்னுடைய சக்தி வெளியினில் வியாபித்தபோது அதிலிருந்து உலகம் தோன்றியது"[77] என்று **சித்தவேதம்** என்ற நூல் வற்புறுத்துகிறது. இந்த வகையில் சித்தர்களுடைய கொள்கை 'ஆன்மீக நித்தியவாத'மும் (Solipism) ஆகிறது.

## சித்தர் இலக்கியம்

சித்தர்கள் இலக்கியவாதிகள் அல்லர் என்பதைக் கவனத்திற்கொண்டு அவர்தம் பாடல்களை அணுகி, அவற்றின் இலக்கியத் தரத்தை மதிப்பிடுதல் வேண்டும். சித்தர்கள் புறநிலைகளைப் புறகணித்து, அகவயப்பாட்டிற்கே முதன்மை அளித்த மறைஞானக் கவிஞர்களாகக் காணப்படுகின்றனர். அவர்கள் உள்ளடக் கத்தை வெளிப்படுத்த உதவும் ஒரு சாதனமாகத்தான் செய்யுளைக் கொண் டுள்ளனர் என்றாலும் சித்தர் பாடல்கள் பலவும் கலை நயத்தோடேயே அமைந் துள்ளன. அவைகள் எளிய, இனிய சந்த நயத்தில் படிப்பவரின் மனதைக் கவரும் ஆற்றல் வாய்ந்தனவாக உள்ளன. தமிழ் இலக்கிய வரலாற்றில் பிற இலக்கிய வகைகளுக்கு ஒப்பாகவே சித்தர் இலக்கியமும் ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளது.

சித்தர் இலக்கியம் எது என்பது வரையறை செய்யப்பட வேண்டிய தொன்றாகும். தமிழில் சித்தர் பெயரால் ஏராளமான நூற்கள் காணப்படுகின்றன.

சித்தர்களின் ஞானப் பாடல்களை எல்லாம் ஒன்று திரட்டி, பதினெண் சித்தர் பெரிய ஞானக் கோவை என்ற தலைப்பில் பல பதிப்புகள் கொண்டுவரப்பட்டுள்ளன.[78] அப்பதிப்புகளில் பதினெண் சித்தர் என்று குறிப்பிடப்பட்டிருந்தாலும் பதினெட்டிற்கும் மேற்பட்டச் சித்தர்களின் பாடல்கள் இடம் பெற்றுள்ளன.[79] தாயுமானவரும் சித்தர் மரபில் பல பாடல்களைப் பாடியுள்ளார்;[80] என்றாலும் அவருடைய பாடல்கள் அத்தொகுப்புகளில் இடம்பெறவில்லை. ஆனால் இராமலிங்க அடிகளாரும் ஒரு சித்தர், அவருடைய பாடல்களுக்கும் அத்தொகுப்பில் பிரதிநிதித்துவம் கொடுக்க வேண்டும் என்ற எண்ணத்தில் அப்பாடல்கள் சேர்க்கப்பட்டுள்ளனவே அல்லாமல், அவர் சித்தர் நெறிபற்றிப் பாடிய பாடல்களை எல்லாம் தொகுத்துச் சேர்க்கப்பட்டவை அல்ல. இது மனம்போன போக்கிலேயே செய்யப்பட்டுள்ளது. த. கோவேந்தன் என்பவர் பதிப்பித்துள்ள **சித்தர் பாடல்கள் (1976)** என்ற நூலில் முப்பத்திரண்டு சித்தர்களின் பாடல்கள் தொகுக்கப்பட்டுள்ளன. இத்தொகுப்பில் **பதினெண் சித்தர் பெரிய ஞானக் கோவையில்** இடம் பெற்றுள்ள 'இராமலிங்கர் பாடல்கள்' **சிவயோக சாரம், ஞானசர நூல், சிவானந்த போதம்** முதலிய நூல்கள் இடம் பெறவில்லை. மாறாக ஞானக் கோவையில் இடம் பெறாத உலோகாயதச் சித்தர், ஏனாதிச் சித்தர், காளைச் சித்தர், காரைச் சித்தர், தடங்கண் சித்தர் ஆகியோர் பாடல்கள் புதியனவாகச் சேர்க்கப்பட்டுள்ளன.

இத் தொகுப்புகளில் சித்தர் பாடல்கள் முற்றிலும் அடங்கிவிட்டன என்று கூறிவிடமுடியாது. இத்தொகுப்புகளில் இடம் பெற்றுள்ள பாடல்கள் யாவும் ஒரே மாதிரியான இலக்கியத் தரம் வாய்ந்தனவும் அல்ல.[81] சித்தர் இலக்கியத்தை முழுமையாக அறிந்துகொள்வதற்கும் ஆராய்வதற்கும் போதுமான, ஆதாரபூர்வமான பதிப்பு இன்னமும் வெளிவரவில்லை என்பது உண்மைதான்.[82] வந்துள்ள பதிப்புகள் பெரும்பான்மையும் மலிவுப் பதிப்புகளாகவே உள்ளன. காய சித்தர்களின் மருத்துவ, நாடி சாத்திர நூல்களை இலக்கியமாகக் கருதத் தேவையில்லை. ஞான சித்தர் பாடல்களையே இலக்கியமாகக் கொள்ள வேண்டும்.

தமிழ் இலக்கியத்தைச் சங்க இலக்கியம், நீதி இலக்கியம், பக்தி இலக்கியம், காப்பிய இலக்கியம், சிற்றிலக்கியம் என்றெல்லாம் வகைப்படுத்துவது போன்றே சித்தர் பாடல்களும் 'சித்தர் இலக்கியம்' என்ற தனி வகையாகக் கூறத்தக்க வகையிலேயே அமைந்துள்ளன.[83] சித்தர்கள் தம் நூற்களைக் கற்றறிந்த பண்டிதர்களை நோக்கிப் பாடியவர்களல்லர். பாமர மக்களுக்காகவே பாடியுள்ளனர். அவர்கள் மரபிலக்கியப் போக்குகளை மீறி, பழகு தமிழில், எளிய நடையில் பாடிச் சென்றுள்ளனர், என்றாலும் அவர்கள் முற்றிலும் யாப்பு வரையறைகளைப் புறக்கணித்தவர்களுமல்லர்.

தம் கருத்துகளைப் பாமர மக்களை நோக்கிக் கூறிய சித்தர்கள், அப்பாமர மக்களின் இலக்கிய வடிவத்தைப் பெருமளவில் கையாண்டுள்ளனர். கும்மி,[84] ஏற்றம்,[85] ஒப்பாரி[86] முதலியன அவர்களால் கையாளப்பட்டுள்ள நாட்டுப்புற இலக்கிய வடிவங்களாகும். சித்தர் பாடல்களில் அமைந்துள்ள பொருள் விளங்காப் புதிர் நிலை விடுகதைத் தன்மை வாய்ந்ததாகும்.

*மாங்காய்ப்பால் உண்டு மலைமேல் இருப்போர்க்குத்*
*தேங்காய்ப்பால் ஏதுக்கடி – குதம்பாய்*
*தேங்காய்ப்பால் ஏதுக்கடி.*[87]

என்ற பாடலில் வரும் மாங்காய்ப் பால் என்பதென்ன, தேங்காய்ப் பால் என்பதென்ன, மலை மீது இருப்பவர் யார், மலை மீது இருப்பவர் மாங்காய்ப் பாலை உண்டால் அவருக்குத் தேங்காய்ப் பால் ஏன் தேவையில்லை, என்பன அடுக்கடுக்காகத் தோன்றும் வினாக்கள். இலகுவில் விடை கிடைத்து விடாத புதிர்கள். சித்தர் மரபுகளையும் குழுக்குறி முறைகளையும் அறிந்திருந்தால்தான் இவற்றிற்கு எளிதில் விடை காண முடியும். மாங்காய்ப் பால் என்பது மூலாதாரத்தில் உள்ள குண்டலினி என்னும் உயிர்ப்பைப் பிராணாயாமத்தின் மூலம் புருவ மத்தியில் கொண்டுவந்து நிறுத்தினால் அது பாலாக – அமுதமாக வடியும். அந்தப் பாலைப் பருகுவதன் மூலமே பேரின்பப் பெருவெள்ளத்தில் மூழ்கித் திளைக்கலாம். இவ்வாறு மூழ்கித் திளைப்பதை விடுத்து, தென்னங்கள் (தேங்காய்ப் பால்) முதலிய போதைப் பொருட்களைப் பருகுவது வீண் என்பது இப்பாடல் உணர்த்த வரும் பொருளாம். இப்பாடலில் வரும் மலைமீதிருப்போர் என்பதற்குப் பிராணாயாமம் செய்யும் சித்தர் என்பது பொருள். இவ்வாறு பொருள் விளங்காப் புதிர்ப் பாடல்கள் விடுகதையின் இயல்பு கொண்டன என்பதில் அய்யமில்லை. நாட்டுப்புறப் பாடல்களில் வரும் 'தங்கரத்தினமே', தங்கமே தங்கம்', 'ஞானத் தங்கமே' முதலிய விளிப் பெயர்களைப் போன்றே சித்தர் பாடல்களில் 'குதம்பாய்', 'ஞானப்பெண்ணே', 'வாலைப் பெண்ணே', 'கோனாரே', 'தாண்டவக் கோனே' என்றவாறு விளிகள் அமைந்து வந்துள்ளன. சித்தர் பாடல்களில் காணப்படும் பேச்சு வழக்குச் சொற்களும், வந்த சொல்லோ அன்றி அடியோ மீண்டும் வருந்தன்மையும், மக்களிடையே மிகப் பரவலாக வழங்கி வருதலும் சித்தர் இலக்கியத்தில் உள்ள நாட்டுப்புற இலக்கியச் சாயலைப் பறைசாற்றுவனவே.[88] சித்தர் பாடல் தொகுப்புகளாக வெளிவந்துள்ள பெரும் பாலான பதிப்புகளும் மக்கள் பதிப்பாக, மலிவுப் பதிப்பாக அமைந்துள்ளமையும் அவற்றின் நாட்டுப்புறச் சாயலையே காட்டுகின்றது. தென்னிந்திய நாட்டுப்புறப் பாடல்களைத் தொகுத்த கோவர் (Charles E. Gover)[89] என்பாரைச் சித்தர் பாடல்கள் நாட்டுப்புறப் பாடல்களாகவே மயங்க வைத்துள்ளமையும் குறிப்பிடத்தக்கதாகும்.

## சித்தர் இலக்கியமும் குறியீட்டியலும்

இலக்கிய இயக்கம் (Literary Movement) என்ற வகையில் சித்தர் இலக்கியத்தைக் குறியீட்டு (Symbolistic) இலக்கியமாகவே கொள்ள வேண்டும். உலக இலக்கிய வரலாற்றில் குறியீட்டியல் முறையானது 19ஆம் நூற்றாண்டின் இறுதியில் பிரான்சு நாட்டில், ஓர் இலக்கிய இயக்கமாகக் கொண்டுவரப்பட்டு, அதற்கான வரைவிலக்கணங்களும் வகுக்கப்பட்டுள்ளன. ஆனால் தமிழகத்தில் குறியீட்டியலானது, ஓர் இலக்கிய இயக்கம் என்ற சிந்தனையற்ற நிலையில், சித்தர் பாடல்களில் – திருமூலர் காலந்தொட்டு – நீண்ட காலமாகவே கையாளப்பட்டு வந்துள்ளது. அருளியல் (Mystical) கருத்துகளைக் குறியீட்டின் மூலம்தான் வெளிப்படுத்த முடியும் என்பது பொது நியதி.[90] எனவே சித்தர்களும் சாதாரணமாகப் பொருள் விளங்காத நிலையில் தாராளமாகக் குழுக்குறிகளைக் கையாண்டு இருள்மைத் தன்மை வாய்ந்தனவாகவே பாடல்களைப் பாடியுள்ளனர். அவர்தம் பாடல்களில் வரும் குழுக்குறிகளை அறிந்து கொள்வதற்குத் தனிப் பயிற்சி வேண்டும். இல்லையேல் அவர்களின் நூற்களைப் பயின்றறிவது கடினம்.

*மூலமாம் குளத்திலே முளைத்தெழுந்த கோரையை*
*காலமே எழுந்திருந்து நாலுகட்டு அறுப்பிரேல்*
*பாலனாகி வாழலாம் பரப்பிரமம் ஆகலாம்*
*ஆலம் உண்ட கண்டர்பாதம் அம்மைபாதம் உண்மையே.*[91]

என்பது ஒரு சித்தர் பாடல். இப்பாடலில் பயின்று வந்துள்ள சொற்களிலோ, சொற்களைச் செய்யுளாக அமைத்துக் கூறியுள்ள நடையிலோ ஒன்றும் கடினம் இல்லை. இப்பாடலுக்குச் சாதாரணமாக, "மூலம் என்னும் குளத்தில் வளர்ந்துள்ள கோரைப் புற்களைக் காலையில் எழுந்திருந்து நான்கு கட்டுகள் அறுத்தால், இளமையோடு வாழ்வது மட்டுமல்லாமல் பரம்பொருளும் தாமேயாகலாம்; இது ஆலம் உண்ட நீலகண்டன் மற்றும் அம்மையின் மீது ஆணையாக உண்மையேயாம்'' என்ற பொருளையே தருகிறது. ஆனால் இதன் உண்மையான பொருள், "மூலாதாரத்தில் இருக்கும் குண்டலினி என்னும் உயிர்ப்பைப் பிராணாயாமத்தின் மூலம் சுழுமுனை என்னும் நெற்றிக்கண்ணில் (புருவ மத்தி) பொருத்தி, அவ்வாறு பொருத்துவதன் மூலம் உண்டாகும் அமுதப்பாலைப் பருகினால் மரணமிலாப் பெருவாழ்வு – சித்தி – கிடைக்கும்" என்பதாகும். அதாவது தன்னுடைய உயிர்ப்பை – சுவாசத்தைத் தன்னுளே அடக்கி, தன்னுள் இருக்கும் இறைமையை அறிந்து, பேரின்பப் பெரு வெளியில் மூழ்கவேண்டும் என்ற ஞான சித்தர் மரபையே இப்பாடல் உணர்த்துகிறது. இப்பாடல் யாக்கப்பட்ட முறை எளிமையாகத் தோன்றினாலும், இதில் சொல்லப்பட்ட கருத்து, குறியீட்டின் வாயிலாக, இருள்மை நிலையில் வைக்கப்பட்டுள்ளதால் இதன்பொருள் அவ்வளவு இலகுவில் பிடிபட்டு

விடக் கூடியதன்று. இதனையே 'ஏமாற்றும் எளிமை'[92] என்பர். சித்தர் பாடல்கள் பெரும்பான்மையும் இவ்வகையில் அமைந்தனவே.

குறியீட்டியிலானது இரண்டு வகைப்பட்டதாகக் காணப்படுகிறது. இவற்றுள் ஒன்று மானிடப்பக்கம் சார்ந்தது. மற்றது மனம் கடந்தது – அமானுடப்பக்கம் சார்ந்தது.[93] இவ்விரு வகைகளுள் சித்தர்கள் கையாண்ட குறியீடு மனங்கடந்த குறியீட்டியலாகும். புறப்பொருள் உலகம் (Objective world) நிலையில்லாதது, உண்மையற்றது; கண்களால் காணவியலாத முழுப்பொருளின் (பரம்பொருளின்) பிரதிபலிப்பே இவ்வுலகம். அதாவது விரிந்ததொரு நிறை உலகம் – இலட்சிய உலகம் நுண்மை நிலையில் இயங்குகிறது. நிறைவில்லாத இவ்வுலகு அதன் பிரதியாக உள்ளது என்பது மனங்கடந்த அல்லது அமானுடப் பக்கம் சார்ந்த குறியீட்டாளர்களின் கொள்கை.[94] இந்த "உள்ளிருப்பதும், நிலையானதுமான உண்மையைக் குறிப்பின் வழியேதான் உணர்த்த முடியும்"[95] என்பது இவர்களின் வாதம். சித்தர்களின் இலக்கியக் கொள்கையும் இதுவே தான். இக்கருத்தை மனதிற்கொண்டு அணுகினால், சித்தர்களின் பாடல்களில் பயின்று வந்துள்ள குழுக்குறிகளும் இருள்மைத் தன்மையும் தர்க்கப் பொருத்தமானவையே என்பது விளங்கும்.

நவீனக் குறியீட்டாளர்கள் கூறும் 'குறியீட்டியல் கவிதைகள் இசையோடு நெருங்கிய தொடர்புடையன, யாப்பு மீறுவன'[96] என்ற வரையறைகளும் சித்தர் பாடல்களுக்கு மிகவும் பொருந்தியுள்ளன.

*நந்தவனத்திலோ ராண்டி – அவன்*
*நாலாறு மாதமாய்க் குயவனை வேண்டிக்*
*கொண்டுவந்தானொரு தோண்டி – மெத்தக்*
*கூத்தாடிக் கூத்தாடிப் போட்டுடைத்தாண்டி.*[97]

என்ற பாடலைக் கேட்டாலோ, படித்தாலோ தன்னிச்சையாகத் 'தந்தன, தந்தன, தான–தன' என்ற மெட்டில் கைத்தாளம் போடத் தோன்றும். இப்பாடலை இசை நயத்தோடல்லாது வெறும் செய்யுளாக உணர முடியாது. இது இசையோடு இரண்டறக் கலந்ததாகும். சித்தர் பாடல்கள் பெரும்பான்மையும் இவ்வாறு அமைந்தனவே. நவீனக் குறியீட்டாளர்கள், தங்களது சுற்றுச் சூழல் மீதும், நடுத்தர வகுப்பாரின் ஒழுக்க நிலை மீதும் ஏளன உணர்ச்சி கொண்டு சாடினர்[98] என்பது போலவே சித்தர்களும் தம் சுற்றுச் சூழலை வெறுத்து, ஒதுங்கி வாழ்ந்தவர்கள்தாம்; வேதாகம வைதீகர்களின் ஒழுகலாறுகளை எள்ளி நகையாடியவர்தாம். ஆனால் நவீனக் குறியீட்டாளர்களைப் போல மனித இனத்தின் மீது வெறுப்போ, துயரவாதம் (Sadism), காமவெறி முதலிய வக்கிர புத்தியோ[99] கொண்டவர்கள் அல்லர். சித்தர்கள்

மனித நேயம் மிக்கவர்கள், மனித குல உய்விற்காகப் பாடுபட்டவர்கள் என்ற வகையில் நவீனக் குறியீட்டாளர்களிடமிருந்து பெரிதும் வேறுபடுகின்றனர்.

சித்தர் இலக்கியம் பற்றிக் குறிப்பிட்டுச் சொல்ல வேண்டிய மற்றுமொரு செய்தி, இவ்விலக்கியத்தில் உணர்வுக்கு மிகுதியும் இடமில்லை. புதுக்கவிதை களைப் போல அறிவுபூர்வமாகக் கருத்தை நறுக்கெனத் தெரிவிப்பனவாகும். இவ்வகை இலக்கியத்தில் உணர்வுச் சித்திரிப்பைவிடச் சிந்தனைச் செறிவே மிகுதி.

## சித்தர் அறிவியல்

தமிழர்களின் ஆன்மசக்தி, ஞானச் செருக்கு ஆகியவற்றின் நிலைக்களமாக இருப்பவை சித்தர் வாக்குகள்,[100] திராவிடர்களின் விஞ்ஞான முறையை வளர்த்தவர்கள் சித்தர்கள்[101] என்றெல்லாம் சித்தர்கள் போற்றப்படுகின்றனர். இப்போற்றுதல்கள் சித்தரைப் பற்றிய மிகையான கருத்துகள் அல்ல. சித்தர் மரபிலே காய சித்தியைப் பற்றிச் சிந்தித்த சித்தர்களே உடலை அழியாமல் பாதுகாத்து, மரண மில்லாப் பெருவாழ்வு வாழ்வதை ஒரு தனி அறிவியல் முறையாகவே வளர்த் தெடுத்துள்ளனர். எனவே 'சித்தர் அறிவியல்' என்ற இப்பகுதி, காய சித்தர்களின் பங்களிப்பைப் பற்றியது, ஞான சித்தர்களைப் பற்றியதன்று.

காய சித்தர்கள் உடலைப் பேணுவதற்கு மூலிகைகளையும், உலோகத் தாதுக்களையும் நுணுகி ஆராய்ந்துள்ளனர். இவ்வாராய்ச்சியின் விளைவாக வளர்ந்து வந்த மருத்துவ முறையானது தமிழ் நாட்டுச் சித்தர்களின் தனி முறையாகவே, 'சித்த மருத்துவம்' என்ற பெயரில் வழங்கி வருகிறது. மூலிகைகளிலிருந்தும் உலோகத் தாதுக்களிலிருந்தும் பெறப்பட்ட மருந்தை உரிய காலத்தில், உரிய முறையில் பயன்படுத்துவதற்குப் பருவங்கள் பற்றிய அறிவும் தேவை. இதனை யொட்டி வானியல் பற்றிய அறிவு சித்தர்களிடையே வளரலாயிற்று. சித்த மருத்துவத் தோடு தாவரவியல், நிலவியல், உடலியல், இரசாயனம் ஆகிய அனைத்தும் தொடர்புடையனவாகையால், தமிழகத்தில் இவ்வறிவியல் துறைகளும் சித்தர் களாலேயே வளர்க்கப்பட்டுள்ளன. இவற்றோடு சித்தர்கள் இரசவாத முறையையும் தங்கள் மருத்துவத்தில் பெருமளவிற்குப் பயன்படுத்தி வந்துள்ளனர். எனவே தமிழகத்தின் மரபு முறை அறிவியல் துறைகளுக்கு எல்லாம் மூலவர்கள் சித்தர்கள் தான் எனில் மிகையாகாது.[102]

சித்தர்களின் அறிவியல் துறைகள் மக்களிடையே விரிவாகப் பரவி, தொடர்ந்து வளர்க்கப்படவில்லை என்பதும் உண்மைதான். அதற்குக் காரணம் சித்தர்கள் தமது

காலத்துச் சாதி, சமயப் பாகுபாடுகள், வேதாகமச் சாத்திரங்கள், வைதீகப்பற்று, மூட நம்பிக்கைகள், உருவ வழிபாடு முதலியவற்றை எதிர்த்தனர். அதன் விளைவாகப் பழமைவாதிகளின் எதிர்ப்புக்கு ஆளாக வேண்டி இருந்தது. அரசியல் செல்வாக்கும் சமூக மதிப்பும் பெற்றிருந்த மேல் தட்டு மக்களால் மாந்திரீகர்களாகவும் பித்தர்களாகவும் நிந்திக்கப்பட்டும் சமூகத்திலிருந்தே புறக்கணிக்கவும் பட்டார்கள். அவர்களுடைய அறிவியல் பரிசோதனைகள் மாயாசால வித்தைகளாகத் திரித்துக் கூறப்பட்டன. எனவே சித்தர்கள் சமூகத்திலிருந்து ஒதுங்கியும் ஒதுக்கப்பட்டும் வாழ வேண்டியதாயிற்று. அவர்களுடைய அறிவியல் துறைகளும் வளர்ச்சியடையாது போயிற்று. [103]

எப்படியாயினும் சித்தர்கள் கலை (இலக்கியம்), அறிவியல் ஆகிய இரு துறைகளிலுமே தமிழர்களுக்கு அளித்துள்ள பங்களிப்பு குறைத்து மதிப்பிடக் கூடியதன்று. கலைப் பிரிவில் சித்தர் பாடல்கள் (ஞான சித்தர்கள்) ‘சித்தர் இலக்கியம்’ என்ற தனி வகையாக விளங்குவது போலவே, அறிவியல் துறையில் அவர்களுடைய (காய சித்தர்கள்) மருத்துவ முறை, ‘சித்த மருத்துவம்’ என்ற தனி முத்திரையுடன் அமைந்துள்ளது. சர்வதேச அளவில் வழங்கி வரும் ஆயுர்வேத முறை, யுனானி முறை, அலோபதி முறை, ஹோமியோபதி முறை, அக்குப்பஞ்சர் முறை முதலிய மருத்துவ முறைகளைப் போல, சித்த மருத்துவ முறையும் ஒரு தனி மருத்துவ முறையாக வழங்கி வருகிறது என்பதும் குறிப்பிடத்தக்க தொன்றாகும்.

# சான்றாதாரங்கள்

குறிப்பு : இக்கட்டுரையில் எடுத்தாளப்பட்டுள்ள சித்தர் பாடல்கள் யாவும் அரு. ராமநாதன் பதிப்பித்துள்ள "சித்தர் பெரிய ஞானக் கோவை என வழங்கும் சித்தர் பாடல்கள்" என்ற நூலிலிருந்தேயாகும்.


1. பாம்பாட்டிச் சித்தர் பாடல் – 14.
2. கைலாயக் கப்பளிச் சட்டை முனி நாயனார் ஞானப் பாடல்கள் – 43,44.
3. இரா. மாணிக்கவாசகம், நம் நாட்டுச் சித்தர்கள், ப.40.
4. ஸ்வாமி சிவானந்த பரமஹம்ஸர், சித்த வேதம், ப.26.
5. கலைக் களஞ்சியம், தொகுதி–4, ப.643.
6. மேற்படி, ப.643.
7. திருமந்திரம், 1490.
8. கொங்கண நாயனார் வாலைக் கும்மி–74; சட்டை முனி ஞானம்–1; இராமதேவர் பூஜா விதி–3; கருவூரார் பூஜா விதி–18.
9. அகஸ்தியர் ஞானப்பாடல்கள், ஞானம் –2–5.
10. பத்திரகிரியார் மெய்ஞானப் புலம்பல்–155.
11. கலைக் களஞ்சியம், தொகுதி–4, ப.645.
12. வி. பலராமய்யா, சித்தர் மெய்ப்பொருள், பக்.8,9.
13. எம்.பி. தங்கவேலு, "தமிழகமும் சித்த வைத்தியமும்", இரண்டாவது உலகத் தமிழ்க் கருத்தரங்கு நிகழ்ச்சிகள். (பதி.) வி.ஐ. சுப்பிரமணியம், ப.141.
14. க. கைலாசபதி, ஒப்பியல் இலக்கியம், ப.211.
15. கலைக் களஞ்சியம் தொகுதி–4, ப. 643.
16. Swami Advayananda Saraswathi, Eighteen Siddhars and the Dark God with 18 steps.
17. இரா. மாணிக்கவாசகம், நம் நாட்டுச் சித்தர்கள், பக்.108, 109.
18. சே.பிரேமா, சித்த மருத்துவத் தொகையகராதி, பக். 39-45.

19. அரு. ராமநாதன் பதிப்பித்துள்ள சித்தர் பெரிய ஞானக்கோவை என வழங்கும் சித்தர் பாடல்கள் என்ற நூலில் உள்ள 'ஞானசர நூல்', 'சிவானந்த போதம்', 'காயக் கப்பல்', முதலிய நூல்களை இயற்றியவர் யார் எனத் தெரியவில்லை.

20. கைலாயக் கம்பளிச் சட்டைமுனி நாயனார் பாடல்கள்– பின் ஞானம் நூறு – 84, 91.

21. கலைக் களஞ்சியம் தொகுதி–4, ப.645.

22. A. Shanmuga Velan, Siddhar's Science of Longevity and Kalpa Medicine of India, P.18.

23. பெரியபுராணம் – "திருமூல நாயனார் புராணம்".

24. மு. அருணாசலம், தமிழ் இலக்கிய வரலாறு – 14ஆம் நூ.ப.340.

25. K. Satchidandamurthy, Philosophy in India, P.65.

26. மா. இராசமாணிக்கனார், பல்லவர் வரலாறு, ப. 271.

27. இது மு. அருணாசலம் அவர்களின் தமிழ் இலக்கிய வரலாறு, 14.,15,16ஆம் நூற்றாண்டு தழுவியது.

28. சித்தர்கள் 'ஞான சித்தர்' அல்லது 'யோக சித்தர்' மற்றும் 'காய சித்தர்' என இருவகைப்பட்டவர்கள் என்ற செய்தி இக்கட்டுரையில் 'சித்தர் மரபு' என்ற தலைப்பில் விளக்கப்பட்டுள்ளது.

29. சிவவாக்கியர் பாடல்–33.

30. மேற்படி, 38.

31. பாம்பாட்டிச் சித்தர் பாடல்–98.

32. A.V. Subramania Iyer,. The Poetry and the Philosophy of the Tamil Siddhars, P.83.

33. க. கைலாசபதி, ஒப்பியல் இலக்கியம், பக். 196,197.

34. வி. பலராமய்யா, சித்தர் மெய்ப்பொருள், ப.21.

35. க. கைலாசபதி, ஒப்பியல் இலக்கியம், ப.212.

36. A. Shanmuga Velan, Siddhar's Science of Longevity and Kalpa Medicine of India, P.18.

37. திருமந்திரம், 1823.

38. மேற்படி, 1459.

39. மேற்படி, மூன்றாந் தந்திரம்.

40. மேற்படி, 724.

41. மேற்படி, 148.

42. அ) இராமலிங்க முதலியார் பதிப்பு – 1899.
    ஆ) வா. சரவணமுத்துப் பிள்ளைப் பதிப்பு – 1904.
    இ) இ. ராம. குருசாமிக் கோனார் பதிப்பு – 1914.
    ஈ) வித்தியாரத்நாகர அச்சுக்கூடப் பதிப்பு – 1933.
    உ) இரத்தினநாயகர் & சன்ஸ் பதிப்பு – 1938.
    ஊ) மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை, எம்.ஆர். அப்பாதுரை பதிப்பு – 1947.
    எ) அரு. ராமநாதன் பதிப்பு – 1959.
    ஏ) அரம்பேடு சிவப்பிரகாச முதலியார் பதிப்பு–1967.
    ஐ) த. கோவேந்தன் பதிப்பு – 1976.
    ஒ) ச. மெய்யப்பன் பதிப்பு – 1987.
    ஓ) ஸ்ரீரங்கம் சித்தர் பதிப்பு – 1990.
    ஔ) வளர்மதி பதிப்பு – 1992.
    க) எஸ்.பி. ராமச்சந்திரன் பதிப்பு – 1995.

43. மு. அருணாசலம், தமிழ் இலக்கிய வரலாறு– 16ஆம் நூ. பாகம்–3, ப.227.

44. அரு. ராமநாதன் பதிப்பில் இடம்பெற்றுள்ள "பீருமுகமது ஞானரத்தினக் குறவஞ்சி", அருணாசல குருவின் "நிஜானந்த போதம்" முதலிய நூல்களும் ஸ்வாமி சிவானந்த பரமஹம்சர் இயற்றியுள்ள சித்த வேதம் என்ற நூலும் இக்கருத்தினையே வலியுறுத்துகின்றன.

45. சிவவாக்கியர் பாடல் – 4.

46. ஸ்வாமி சிவானந்த பரமஹம்சர், சித்த வேதம், ப.54.

47. பத்திரகிரியார் மெய்ஞானப் புலம்பல்–1.

48. பீருமுகமது ஞானரத்தினக் குறவஞ்சி – 61.

49. மு. அருணாசலம், தமிழ் இலக்கிய வரலாறு, 15ஆம் நூ.ப.317.

50. R. Venkatraman, A History of the Tamil Siddha Cult, pp.7-8.

51. அட்டமா சித்தி என்பன :

அணிமா – சிறியதாதல், மகிமா–பெரியதாதல், கரிமா–கனமானதாதல், லகிமா–இலேசானதாதல், பிராத்தி–எங்கும் சஞ்சரித்தல், பிரகாமியம்–கூடுவிட்டு .டுபாய்தல், ஈசத்துவம்–எல்லாவற்றையும் இயக்குதல், வசித்துவம்–அ னத்தையும் தன் வசமாக்குதல்.

52. திருமந்திரம்– மூன்றாந் தந்திரம்.

53. பாம்பாட்டிச் சித்தர் – 25.

54. மேற்படி–28.

55. மேற்படி–31.

56. மேற்படி–32.

57. தாயுமானவர் பாடல்கள் – "சித்தர் கணம்", "தேசோமயானந்தம்".

58. பரஞ்சோதி முனிவர், திருவிளையாடற் புராணம் – "எல்லாம்வல்ல சித்தரான படலம்", "அட்டமா சித்தி அருளிய படலம்".

59. இரா. மாணிக்கவாசகம், நம்நாட்டுச் சித்தர்கள், ப.64.

60. ஆ. பாலகிருஷ்ண பிள்ளை (பதி.), திருவருட்பா உபதேசப் பகுதி, ப.134.

61. சிவவாக்கியர் பாடல்–31.

62. இக்கருத்து, இக்கட்டுரையின் 'சித்தர் வரலாறு', என்னும் பகுதியில் விளக்கப்பட்டுள்ளது.

63. இரா. மாணிக்கவாசகம், நம் நாட்டுச் சித்தர்கள், ப.119.

64. இலங்கையில் இருபதாம் நூற்றாண்டிலும் சித்தர்கள் வாழ்வதாகவும், தாமே சித்தரிடம் ஆசி பெற்றதாகவும் நா. முத்தையா என்பவர் 'ஈழத்துச் சித்தர்கள்' என்ற தம் நூலில் பல இடங்களில் குறிப்பிட்டுள்ளார். தமிழகத்திலும் இதே நிலைதான். சித்தர் மெய்ப்பொருள் என்ற நூலை எழுதிய வி.பலராமய்யாவும் சித்தரிடம் ஆசி பெற்றதாகக் கூறியுள்ளார். 'சித்தர்கள்' என்ற நூலின் ஆசிரியரான கே.ஆர்.பசுபதி என்பவரின் முன்னோர்கள் சித்தர் மரபைச் சேர்ந்தவர்கள் எனக் குறிப்பிட்டுள்ளார்.

65. சிவவாக்கியர் பாடல்–31.

66. மேற்படி, 68.

67. நிஜானந்த போதம்– ப.459.

68. திருமந்திரம்– 2104.

69. M. Arunachalam, "Medieval Literature - The Later period 1250-1850 A.D." , Proceedings of the Fifth International Conference Seminar of Tamil Studies, Vol.I, P.7b-10.

70. சிவவாக்கியர் இறைவனை ஆலமுண்ட கண்டனாகவும் (14ஆம் பாடல்), மாதொரு பாகனாகவும் (19ஆம் பாடல்), அம்பலத்தில் ஆடுபவனாகவும் (34ஆம் பாடல்) குறிப்பிடுகின்றார். பிற சித்தர்களும் இவ்வாறே பல இடங்களில் குறிப்பிட்டுள்ளனர்.

71. சாமி. சிதம்பரனார், சித்தர்கள் கண்ட விஞ்ஞானம் – தத்துவம், ப.50.

கே.ஆர். பசுபதி, சித்தர்கள், ப.2.

72. க. கைலாசபதி, ஒப்பியல் இலக்கியம், ப.187.

73. பட்டினத்தார் ஞானம், 70.

74. கணபதிதாசர் நெஞ்சறிவிளக்கம்–3.

75. பட்டினத்தார் திருப்பாடல் திரட்டு–பொது–16.

76. இயக்கவியல் பொருள் முதல் வாதமும் வரலாற்றுப் பொருள் முதல் வாதமும் (தொடக்க நூல்), ப.22.

77. ஸ்வாமி சிவானந்த பரமஹம்ஸர், சித்த வேதம், ப.27.

78. இப்பதிப்பு விவரம் 41ஆவது குறிப்பில் தரப்பட்டுள்ளது.

79. இந்நூலில் பட்டினத்தார், பத்திரகிரியார், சிவவாக்கியர், பாம்பாட்டி, இடைக்காடர், அகப்பேய், குதம்பை, கடுவெளி, அழுகனி, கொங்கனர், பீருமுகமது, மதுரை வாலைசாமி, சேஷயோகி, சட்டை முனி, திருவள்ளுவர், கணபதி தாசர், அகஸ்தியர், உரோமரிஷி, திருமூல நாயனார், சுப்பிரமணியர், வால்மீகர், நந்தீஸ்வரர், இராமதேவர், கருவூரார், கைலாயக் கம்பளிச் சட்டை முனி நாயனார், காகபுசுண்டர், சூரியானந்தர், பூரணானந்தர், இராமலிங்கர், குருஞான சம்பந்த சாமிகள், அருணாசல குரு முதலியவர்களின் பாடல்கள் தொகுக்கப்பட்டுள்ளன. இதுவல்லாமல் “ஞானசர நூல்”, “சிவானந்த போதம்”, “காயக் கப்பல்”, முதலியன ஆசிரியர் பெயர் தெரியாத நூற்களாகச் சேர்க்கப்பட்டுள்ளன.

80. "சித்தர் கணம்", "தேசோமயானந்தம்" என்னும் தலைப்புகளில் அப்பாடல்கள் அமைந்துள்ளன.

81. மு. அருணாசலம், தமிழ் இலக்கிய வரலாறு – 14ஆம் நூ. ப.339.

82. --------. தமிழ் இலக்கிய வரலாறு–16ஆம் நூ. பாகம் 3, ப.233.

83. சி.கோ. தெய்வநாயகம், சித்தர் சிந்தனைகள், ப.62.

84. "கொங்கண நாயனார் வாலைக் கும்மி", "மதுரை வாலைசாமி ஞானக் கும்மி".

85. "சேஷ யோகியார் ஞான ஏற்றம்".

86. பட்டினத்தாரின் "அருட் புலம்பல்", பத்திரகிரியாரின் "மெய்ஞானப் புலம்பல்".

87. குதம்பைச் சித்தர் பாடல் – 28.

88. சு. சண்முகசுந்தரம், நாட்டுப்புற இலக்கியத்தின் செல்வாக்கு, பக்.35–38.

89. Charles E. Gover, The Folk Songs of Southern India, PP.147-177.

90. Encyclopaedia Britannica Vol. 12, P.787.

91. சிவவாக்கியர் பாடல் – 150.

92. இரா. மாணிக்கவாசகம், நம்நாட்டுச் சித்தர்கள்– ப.250.

93. ஆரார், சிம்பலிசம், ப.64.

94. மேற்படி, ப.64.

95. மேற்படி, ப.66.

96. மேற்படி, பக்.67,68.

97. கடுவெளிச் சித்தர் பாடல்–4.

98. ஆரார், சிம்பலிசம், ப.69.

99. மேற்படி, ப.69.

100. கே.ஆர். பசுபதி, சித்தர்கள், அ.வெ.ர. கிருஷ்ணசாமி என்பவரின் பதிப்புரை.

101. வி. பலராமய்யா, சித்தர் மெய்ப்பொருள், ப.3.

102. க. கைலாசபதி, ஒப்பியல் இலக்கியம், ப.196.

103. மேற்படி, பக். 196–197.

# துணைநூற் பட்டியல்

## தமிழ்

1. அம்புஜம்மாள், எஸ். பகவான் ஸ்ரீ காரைச் சித்தர். சென்னை : சித்தாஸ்ரமம், 1961.

2. அரவிந்தன், மு.வை. சித்தர்கள் ஓர் அறிமுகம். சென்னை : மணிவாசகர் பதிப்பகம், 1987.

3. அருணாசலம், ப. திருமந்திரக் கோட்பாடு. மறுபதிப்பு, சென்னை : பாரி புத்தகப் பண்ணை, 1983.

4. அருணாசலம், மு. தமிழ் இலக்கிய வரலாறு. திருச்சிற்றம்பலம்: காந்தி வித்தியாலயம், 14, 15ஆம் நூ. 1969; 16ஆம் நூ.பாகம் 3, 1976.

5. அன்னி மிருதலகுமாரி தாமசு."சித்தர் பாடலின் சில செய்யுள் வடிவங்கள்", எட்டாவது கருத்தரங்கு ஆய்வுக் கோவை, தொகுதி.1. பதி. ச. அகத்தியலிங்கம் & தா.ஏ. ஞானமூர்த்தி. அண்ணாமலை நகர்: இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்றம், 1976.

6. ஆரார். சிம்பலிஸம். திருப்புத்தூர்: அறிவகம். 1982.

7. இயக்கவியல் பொருள் முதல் வாதமும் வரலாற்றுப் பொருள் முதல் வாதமும் (தொடக்க நூல்). மாஸ்கோ : முன்னேற்றப் பதிப்பகம், 1978.

8. இரகுநாதன் சி.அ. கஞ்சமலை சித்தர். சென்னை: முத்தமிழ் நிலையம், 1947.

9. இரத்தின நாயகர் அண்டு சன்ஸ் பதிப்பு. பதினெண் சித்தர் பெரிய ஞானக் கோவை, மறுபதிப்பு, சென்னை : 1951.

10. இராசமாணிக்கனார், மா. பல்லவர் வரலாறு. சென்னை: கழகம், 1944.

11. இராசேந்திரன், அ. "போகர்", ஏழாவது கருத்தரங்கு ஆய்வுக் கோவை, தொகுதி–2. பதி. ச. அகத்தியலிங்கம், ம. ப. அண்ணாமலை நகர் : இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்றம், 1975.

12. இராமலிங்கம், அரங்க. திருக்குறளில் சித்தர் நெறி. சென்னை: தேன் மழைப் பதிப்பகம். 1994.

13. இளங்குமரன், இரா. சித்தர் பாடல்கள் : சிவவாக்கியர். சென்னை : கழகம், 1984.

14. --------. சித்தர் பாடல்கள் : குதம்பைச் சித்தர், சென்னை : கழகம், 1987.

15. இளமதி, சு. (சானகிராமன்). "சித்தர்கள் காட்டும் குரு", பதினைந்தாவது கருத்தரங்கு ஆய்வுக்கோவை, தொகுதி – 3. பதி. ச. அகத்தியலிங்கம். ம.ப. அண்ணாமலை நகர் : இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்றம், 1983.

16. -------. "கொங்கணரும் குறியீடும்", பதினாறாவது கருத்தரங்கு ஆய்வுக் கோவை, தொகுதி–3. பதி. ச. அகத்தியலிங்கம். ம.ப. அண்ணாமலை நகர்: இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்றம், 1984.

17. -------. "சித்தர்களின் அறிவியல் கருத்துக்கள்", இரண்டாம் கருத்தரங்கு – தமிழ் இலக்கிய ஆய்வுக் கோவை, தொகுதி–1. பதி.ச. அகத்தியலிங்கம். & சோ. ந. கந்தசாமி. தஞ்சாவூர் : அனைத்திந்தியத் தமிழ் இலக்கியக் கழகம், 1988.

18. ----. சித்தர்களின் சிந்தனைகள். புதுச்சேரி : 1991.

19. கமலக்கண்ணன், பா. சித்தர் நூல்களில் அகத்தியர், திருவள்ளுவர் வரலாறு. சென்னை: வானதி பதிப்பகம், 1993.

20. கருப்பையா, பழ. பட்டினத்தார் ஒரு பார்வை, சென்னை: மணிவாசகர் பதிப்பகம், 1998.

21. கல்யாணசுந்தரம், திரு. வி. சித்த மார்க்கம், சென்னை: சாது அச்சுக்கூடம், 1954.

22. கன்னியப்பன், சிவ. சித்தர் பாடல்கள் திரட்டும் உரையும். சென்னை : முல்லை நிலையம், 1997.

23. காயாரோகணம், பா. சொ. "சித்தர் இலக்கியம்", வானவில். பதி. இரா. குமர வேலன், ம.ப. மறுபதிப்பு, சென்னை : 1989.

24. குணா. தமிழர் மெய்யியல். சென்னை:1980.

25. குப்புசாமி முதலியார், க.ந. சித்த மருத்துவம். சென்னை : அரசாங்க வெளியீடு, 1954.

26. குருசாமிக் கோனார், இ. ராம. பதி. வைத்திய வாத யோக ஞான சாஸ்திரத் திரட்டு. மதுரை: 1914.

27. கேசவப் பிள்ளை, பி. சித்தர் காப்பியம். திருநெல்வேலி : 1982.

28. கைலாசபதி, க. ஒப்பியல் இலக்கியம். சென்னை : நியு செஞ்சுரி புக் ஹவுஸ், 1969.

29. கோவேந்தன், த. பதி. சித்தர் பாடல்கள். சென்னை: பூம்புகார் பிரசுரம், 1976.

30. சண்முகசுந்தரம், சு. நாட்டுப்புற இலக்கியத்தின் செல்வாக்கு. சிதம்பரம் : மணிவாசகர் பதிப்பகம், 1980.

31. சரவணமுத்துப் பிள்ளை, வா. பதி. பதினெண் சித்தர் அருளிய பெரிய ஞானக் கோவை. மறுபதிப்பு, சென்னை : 1939.

32. சாமி, A.A. சித்த விஞ்ஞானம். பெரம்பலூர் : சித்த விஞ்ஞானக் கழகம், 1982.

33. சாரங்கபாணி, A.R. சித்தர் நெறி (2 பாகங்கள்). சென்னை: மணிவாசகர், பதிப்பகம், 1997.

34. சிதம்பரனார், சாமி, சித்தர் கண்ட விஞ்ஞானம் – தத்துவம். சென்னை:இலக்கிய நிலையம், 1961.

35. சிவப்பிரகாச முதலியார், அமரம்பேடு. பதி. பதினெண் சித்தர்கள் பாடல். சென்னை: 1967.

36. சிவானந்த பரமஹம்சர், ஸ்வாமி. சித்த வேதம். கோயம்புத்தூர்: 1928.

37. சுப்பிரமணியன், சக்தி பி. நெல்லை மாவட்டச் சித்தர்கள். சென்னை: கழகம், 1995.

38. சோமு, மீ.ப. சித்தர் இலக்கியம் – ஆய்வு நூல். அண்ணாமலை நகர்: அண்ணாமலைப் பல்கலைக் கழகம், பகுதி 1 & 2, 1988; பகுதி 3, 1989.

39. ஞானி. மார்க்சியமும் தமிழ் இலக்கியமும். கோவை : பரிமாணம் வெளியீடு, 1988.

40. தங்கவேலு, எம்.பி. "தமிழகமும், சித்த வைத்தியமும்", இரண்டாவது உலகத்தமிழ்க் கருத்தரங்கு நிகழ்ச்சிகள். பதி. வி.ஐ. சுப்பிரமணியம். சென்னை : 1971.

41. தெய்வநாயகம்,சி.கோ. சித்தர் சிந்தனைகள். சிதம்பரம் : மணிவாசகர் பதிப்பகம், 1984.

42. நாராயணன், க. சித்தர் தத்துவம். மறுபதிப்பு, சென்னை : தமிழ் புத்தகாலயம், 1990.

43. பசுபதி, கே.ஆர். சித்தர்கள். திருச்சி: 1990.

44. பரமகுரு, பொன். நான் கண்ட சித்தர்கள். சென்னை : வானதி பதிப்பகம்.

45. பலராமையா, வி. அமுத கலசம். சென்னை: அருட்பெருஞ்சோதி பதிப்பகம்.

46. ------. சித்தர் மெய்ப்பொருள். சென்னை: 1969.

47. ----. சாகாக்கலை. சென்னை : 1975.

48. --------. கடவுளும் மோட்சமும். சென்னை : 1976.

49. --------. முப்பு குரு. சென்னை : 1977.

50. பாரடே, மோசஸ் மைக்கேல். தமிழ்ச் சித்தர் பாடல்களும் விவிலியமும் (சமயக் கருத்துக்கள்). சென்னை : சி.எஸ். ஐ. திருச்சபை வெளியீடு, 1999.

51. பாலகிருஷ்ண பிள்ளை, ஆ. பதி. திருவருட்பா உபதேசப் பகுதி. சென்னை : 1959.

52. பிரேமா, சே. சித்த மருத்துவ நூலோதி. தஞ்சாவூர் : தமிழ்ப் பல்கலைக் கழகம், 1988.

53. ------. சித்த மருத்துவத் தொகையகராதி. தஞ்சாவூர் : தமிழ்ப் பல்கலைக் கழகம், 1989.

54. மாடசாமி, ச. பாம்பாட்டிச் சித்தர். மதுரை : ஒ வெளியீடு, 1980.

55. மாணிக்கம், மு. "சிவவாக்கியர் தத்துவம்", செந்தமிழ்ச்செல்வி. 59.2 (1984), 65–76.

56. மாணிக்கவாசகம், இரா. திருமந்திர ஆராய்ச்சி சென்னை : அன்னை அபிராமி அருள் வெளியீடு, 1982.

57. ------. நம் நாட்டுச் சித்தர்கள். மறுபதிப்பு, சென்னை: அன்னை அபிராமி அருள் வெளியீடு, 1982.

58. ----. சித்தர்கள் பரிபாஷை அகராதி. மறுபதிப்பு சென்னை : திருமகள் நிலையம், வெளியீடு, 1988.

59. ----. சித்தர்கள் சொன்னவை. சென்னை : அபிராமி அருள் வெளியீடு, 1985.

60. மாணிக்கவாசகம், ஞா. & இராமலட்சுமணன், பதி. சித்தர் பாடல்கள். சென்னை: உமா பதிப்பகம், 1995.

61. முத்தப்பன், பழ. "சித்தர் தத்துவம்", பதினேழாவது கருத்தரங்கு ஆய்வுக் கோவை தொகுதி–3. பதி. ச. அகத்தியலிங்கம். ம.ப. அண்ணாமலை நகர் : இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்றம், 1985.

62. முத்தையா, நா. ஈழத்துச் சித்தர்கள். சென்னை : பாரி நிலையம் : 1980.

63. முருகேசன், சி.எஸ். சித்தர்களின் சாகாக் கலை. சென்னை: அழகு பதிப்பகம், 1996.

64. மெய்யப்பன், ச. பதி. சித்தர் பாடல்கள். மறுபதிப்பு, சென்னை : மணிவாசகர் பதிப்பகம், 1991.

65. ராமச்சந்திரன், எஸ்.பி. பதி. சித்தர்கள் வரலாறு கூறும் சதுரகிரித் தலபுராணம். மறுபதிப்பு, சென்னை : தாமரை நூலகம், 1994.

66. ––––––. பதி. சிவவாக்கியம் 1000. சென்னை : தாமரை நூலகம், 1994.

67. ––––––. பதி. நாற்பத்தெண் சித்தர்கள் திருவாய் மலர்ந்தருளிய பெரிய ஞானக் கோவை. சென்னை : தாமரை நூலகம், 1995.

68. ––––. பதி. யோகஞான சாஸ்திரத் திரட்டு (8 பாகங்கள்). சென்னை : தாமரை நூலகம், 1995–1996.

69. ராமநாதன், அரு. பதி. சித்தர் பெரிய ஞானக் கோவை என வழங்கும் சித்தர் பாடல்கள். மறுபதிப்பு, சென்னை : பிரேமா பிரசுரம், 1986.

70. ராமலிங்க முதலியார். பதி. பெரிய ஞானக்கோவை, சென்னை : 1899.

71. வடிவேலு முதலியார், மா. பதி. சிவவாக்கியர் பாடல் மூலமும் உரையும். சென்னை.

72. வளர்மதி. பதி. பதினெண் சித்தர் பாடல்கள். மறுபதிப்பு, சென்னை : மதி நிலையம், 1992.

73. வித்தியாரத்நாகர அச்சுக்கூடப் பதிப்பு. பதினெண் சித்தர் பெரிய ஞானக்கோவை. சென்னை : 1933.

74. வேணுகோபாலப் பிள்ளை, மே.வீ. & எம்.ஆர். அப்பாதுரை. பதி. சித்தர் பெரிய ஞானக்கோவை. மறுபதிப்பு, சென்னை:1956.

75. வேலன், தா.தி. திருவள்ளுவர் ஒரு சித்தர். சென்னை : 1990.

76. வேலுச்சாமி, கி. ''சித்தர்கள் மூச்சோட்டக் கணிப்பு'', பதினான்காவது கருத்தரங்கு ஆய்வுக்கோவை, தொகுதி–3. பதி. ச. அகத்தியலிங்கம். ம.ப. அண்ணமாலை நகர் : இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்றம், 1982.

77. ஜகதீசன், அ. ''கடுவெளிச் சித்தர் யோகத்தை அணுகும் முறை'', பன்னிரண்டாவது கருத்தரங்கு ஆய்வுக்கோவை, தொகுதி–3. பதி.ச.அகத்தியலிங்கம் & தா.ஏ. ஞானமூர்த்தி. அண்ணாமலை நகர் : இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்றம், 1980.

78. ஜெகதீசன், ஏ. ''சித்தர் சித்தாந்தம்'', பதினான்காவது கருத்தரங்கு ஆய்வுக் கோவை, தொகுதி–3. பதி. ச. அகத்தியலிங்கம். ம.ப. அண்ணாமலை நகர் : இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்றம், 1982.

79. ஜெயா, P. ''சித்தர் கூறும் தெய்வங்கள்'', ஆறாவது கருத்தரங்கு ஆய்வுக்கோவை, பதி. ச. அகத்தியலிங்கம், ம.ப. அண்ணாமலை நகர் : இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்றம், 1974.

80. ------. "சித்தர் பாடல்களில் ஐம்புலன்கள்", ஏழவாது கருத்தரங்கு ஆய்வுக்கோவை, தொகுதி–1. பதி. ச. அகத்தியலிங்கம். ம.ப. அண்ணாமலை நகர் : இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்றம், 1975.

81. ------. "சித்தர் பாடல்களில் முன்னிலைக் கிளவி", எட்டாவது கருத்தரங்கு ஆய்வுக்கோவை, தொகுதி–2. பதி. ச. அகத்தியலிங்கம் & தா. ஏ. ஞானமூர்த்தி. அண்ணாமலை நகர் : இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்றம், 1976.

82. ஸ்ரீரங்கம் சித்தர். பதி. சித்தர்களின் ஞானப் பாடல்கள் (2 தொகுதிகள்). ஸ்ரீரங்கம் : 1990.

## ஆங்கிலம்

1. Advayananda Saraswati, Swami. Eighteen Siddhars and the Dark God with 18 Steps. Madurai : nd.

2. Arunachalam, M. "The poetry and philosophy of Siddhar Sivavakkiyar", Saiva Siddhata. VI. (1971), 8-21;85-94.

3. ________. "The Life and Philospy of Siddhar Pattinattar", Saiva Siddhata VIII. 2 (1973), 68-77.

4. _____. "The Siddha Cult in Tamilnad", Bulletin of the Institute of Traditional Culture. (1977), 85-117.

5. Buck, David C. "The Snake in the Song of a Sittar", Structuralism in South Indian Studies. Ed. C.Yocum and H. Buck.

6. ______. Dance Shake Dance ! : The Song of Pambatticcittar. Calcutta : Writers Workshop, 1976.

7. _____. "Siddhanta, Siddha and Saiva", Experiencing Siva : Encounters with a Hindu Deity. Ed. Fred W. Clothy and J. Bruce Long. Delhi : Manohar 1983.

8. Encyclopaedia of Britannica Vol. 12 and 17. London : 1979.

9. Ganapathy, T.N. The Philosophy of the Tamil Siddhas. New Delhi : Indian Council of Philosophical Research, 1993.

10. Gover, Charles E. The Folk Songs of Southern India. Rpt. Chennai : Kalkam, 1983.

11. Govindaswamy, M. A Survey of the Sources for the History of Tamil Literature. Annamalai Nagar: Annamalai University, 1977.

12. Kamaliah, K.C. "Sivavakkiyar and Vemana", இலக்கிய ஒப்பாய்வு (Studies in Comparative Literature). Ed. V.M. Gnanaprakasam and K.P. Aravanan. Chennai : 1974.

13. Kandaswamy Pillai, N. History of Siddha Medicine. Chennai : 1979.

14. Karai Siddhar. Golden Lay (காரைச் சித்தர் கனக வைப்பு). Chennai : Siddhars ramam, nd.

15. Lalitha Kameswaran. "A study of Reference to Medicine in Literature in Tamil Nadu", Proceedings of the Second International Conference Seminar of Tamil Studies Vol. I, Ed. R. E. Asher, Chennai: I. A.T. R., 1971.

16. Manickavasagam,R. "Siddhars Mystic Poetry", Literary Heritage of the Tamils. Ed., S.V. Subramanian and N. Ghadigachalam. Chennai : International Institute of Tamil Studies, 1981.

17. Raja, P. "Tamil Siddhas", Journal of the Institute of Asian Studies. VI. 2 (1989), 143-158.

18. ______. and M. Mathialagan. "The Cittar Movement in Tamil Literature". Encyclopaedia of Tamil Literature Vol. I. Chennai : Institute of Asian Studies, 1990.

19. Ramachandra Dikshitar, V.R. Studies in Tamil Literature and History. Chennai : Kalakam, 1930.

20. Ramachandran, C. The Siddha and our Heritage, Palani: 1988.

21. Rama Sastrai, U. V. "The Doctrinal Culture and Tradition of the Siddhas", The Cultural Heritage of India Vol.IV. Ed. Haridas Bhattachariya. Rpt. Calcutta : Sri Ramakrishna Mission, 1983.

22. Satchidanandamurty, K. Philosophy in India. New Delhi : Motilal Banarsidoss, 1985.

23. Shanmuga Velan, A. Siddhar's Science of Longevity and Kalpa Medicine of India. Chennai : 1963.

24. Srirangam Siddhar. The Essence of Siddhar's Poems. (Kakabusandar). Trichy : 1992.

25. Subramania Iyer, A.V. The Poetry and Philosphy of the Tamil Siddhars. Citamparam : Manivacakar Patippakam, 1969.

26. Subramnian, S.V. and V.R. Madavan. ed., Heritage of the Tamils - Siddha Medicine. Chennai : International Institute of Tamil Studies, 1984.

27. Venkatraman, R. A History of the Tamil Siddha Cult. Madurai: Ennes Publications, 1990.

28. Zvelebil, Kamil V. The Smile of Murugan on Tamil Literature of South India. Leiden : E.J. Bril, 1973.

29. _____. The poets of the Powers. London : 1973.

# 2

# மருத்துவ வரலாறு

மரு. ச. முத்தரசன்

## உயிர்த் தோற்றம்

அணுவிலிருந்து, நுண்திரள்களாய்க் கூடி, பல்கிப் பெருகி, திரண்டு, உருண்டு பருப்பொருளாய்த் தோன்றிய உயிரினங்கள், தம் பண்பிற்கும் செயலுக்கும் ஏற்றவாறு நாளடைவில், ஓரறிவு முதல் ஆறறிவு உயிர்கள் அனைத்தும் தோன்றி, நின்று நிலைத்து வருகின்றன.

## மொழி வரலாறு

ஆதியில் மனிதர்கள் தமது செய்கைகளாலும், உணர்ச்சிகளாலும், ஒலிக்குறிப்புகளாலும், மற்றவர்களுடன் தம் எண்ணங்களைப் பகிர்ந்து கொண்டனர். இன்றும் பறவை, விலங்கு மற்றும் ஈ, எறும்பு போன்றவையும் தமக்குள் ஏதோ பேசிக் கொண்டுதான் இருக்கின்றன. கால மாற்றங்களால் ஒலிக்குறிப்பிலிருந்து ஒலியும், ஒலியிலிருந்து மொழியும், மொழியின் குறியே எழுத்தாகவும் பரிணமித்தன. மொழியின் கரு ஒலியே. ஒலியின் சங்கமங்களின் தொகுதி சங்கீதமாகிறது. கீதத்தின் வித்து நாதமே. நாதமே அனைத்திற்கும் கரு என்பது மறுக்க முடியாத உண்மை. "ஓங்காரமாய் விளங்கும் நாதம்" என்பதால் இதனை அறியலாம். "ஓம்" எனும் சொல்லே உலகத் தோற்ற, ஒடுக்கத்துக்குக் காரணமாக இறைவனைக் குறிப்பது என்பர் அறிஞர்.

## உலகத் தோற்றம்

உலகமும் அதிலுள்ள பொருள்களும், ஐம்பெரும் பொருள்களால் ஆக்கப்பெற்று (ஆக்கல்), ஒருங்கே தோன்றி, நிலைத்து (நிலைபெற்று) (அளித்தல்–காத்தல்), ஒருங்கே அழியும் என்று கூறுவர். உலகில் உள்ள எவ்வுயிரும், எப்பொருளும் நிலைபெற்று இருப்பதில்லை. இவ்வொடுக்கமும் தோற்றமும், உயிரும், பொருளும் அழிவின்றி உருமாறி வருவதாகக் கொள்ளலாம்.

மருத்துவம் என்று தோன்றியது என்பதை அறியுமுன், இவ்வுலகம் என்று தோன்றியது என்பதை அறிதல் இன்றியமையாதது. இவ்வுலகம் பன்னெடுங் காலமாக உயிரினங்களின் தோற்றத்திற்கு முன்னதாகவே இயங்கி வருகிறது. எனவே உலக வரலாற்றை :

1. உயிரினம் தோன்றாத உலகம்
2. முதல் உயிரினம் தோன்றிய உலகம்
3. இரண்டாவது உயிரினம் தோன்றிய உலகம்
4. பல்வகை உயிரினம் தோன்றிய உலகம்
5. பறவை உயிரினம் தோன்றிய உலகம்
6. விலங்கு உயிரினம் தோன்றிய உலகம்
7. மனித உயிரினம் தோன்றிய உலகம்

என ஏழு வகைகளாகப் பிரிக்கலாம்.

### 1. உயிரினம் தோன்றாத உலகம்

சுமார் மூன்று ஆயிரங்கோடி ஆண்டுகளுக்கு முன்னர் இவ்வுலகத்தில் உயிரினங்களே தோன்றவில்லை. காரணம் என்னவென்றால் நிலத்தின் தட்ப வெப்ப நிலைகள் உயிரினத்தின் தோற்ற வளர்ச்சிக்குத் துணை புரிவதாக இல்லை.

### 2. முதல் உயிரினம் தோன்றிய உலகம்

சுமார் இரண்டு ஆயிரங்கோடி ஆண்டுகளுக்கு முன்னர் கடல்பாசி போன்ற தாவர இனங்கள் தோன்றின. அமீபா போன்ற உயிரினங்களே முதல் உயிரினம் தோன்றிய உலகத்தைச் சார்ந்தவையாகும்.

## 3. இரண்டாவது உயிரினம் தோன்றிய உலகம்

நாளடைவில் புழுப் பூச்சிகள் தோன்றலாயின. இவை யாவும் கடலில் தோன்றிய உயிரினங்களின் ஆரம்ப நிலைகளாகும். காலப் போக்கில் கடல் வாழ் உயிரினங்கள் பெருகலாயின. அவை காலப் போக்கில் இயற்கையின் மாறுபாடு களை அனுசரித்துத் தங்களது இருப்பிடத்தை நீரிலிருந்து நிலத்திற்கு மாற்றிக் கொண்டன. கடலிலும், நீரிலும், வாழும் தவளை இனமே இதற்குச் சான்றாகும். தொடக்க காலத்தில் மீன் போலவே நீரில் வாழ்ந்தவை வளர்ச்சியடைந்தவுடன் நிலத்தில் வாழ ஆரம்பித்தன. நண்டு இனத்தையும் இதனுடன் சேர்க்கலாம்.

## 4. பல்வகை உயிரினம் தோன்றிய உலகம்

500 கோடி ஆண்டுகளுக்கு முன்னர் கடலில் பல்வகை உயிரினங்கள் தோன்றலாயின. கடல்பாசி, புழுப் பூச்சிகளை உண்டு சிறிய மீன் வகைகளும், சிறிய மீன்களை உண்டு பெரிய மீன்களும், பெரிய மீன்களை உண்டு திமிங்கலம், முதலை இனங்களும் வாழ்ந்தன.

## 5. பறவை உயிரினம் தோன்றிய உலகம்

300 கோடி ஆண்டுகளுக்கு முன்னர், ஆதி காலத்தில் உயிரினங்கள் யாவும் பல்வேறு காலங்களில் படிப்படியாகத் தோன்றியது போலவே, முதலில் பறவை இனங்கள் கடலிலும், பின்னர் நிலத்திலும் தோன்றின எனலாம்.

## 6. விலங்கு உயிரினம் தோன்றிய உலகம்

200 கோடி ஆண்டுகளுக்கு முன்னர் காலத்தின் கோலத்தால், விலங்குகள் நிலவுலகில் தோன்றலாயின. அவைப் பூனை முதல் யானை வரை, மான் முதல் சிங்கம் வரை எனலாம்.

## 7. மனித உயிரினம் தோன்றிய உலகம்

100 கோடி ஆண்டுகளுக்கு முன்னர் மனிதர்கள் தோன்றி இருக்கக் கூடும் என்பது ஆராய்ச்சியாளர் துணிபு. குரங்கிலிருந்து பிறந்தவன் மனிதன் என்பதும் உறுதி ஆகியுள்ளது.

## கற்காலம்

கற்கால மனிதர்கள் குகைகளில் வாழத்தொடங்கி, மலையிலும், மலையடி வாரத்திலும் வாழ்ந்து வந்தனர். இவர்கள் கற்களாலான ஆயுதங்களைப் பயன்படுத்தி வேட்டையாடவும், தங்களது எதிரிகளை அழிக்கவும் கற்றிருந்தனர். பச்சை மாமிசம், காய்கறிகளே இவர்களது உணவு. மருத்துவம் இலக்கியங்களுக்கும் முற்பட்ட காலத்தில், ஆதிகாலத்திலேயே தோன்றியது என்பது உள்ளங்கை நெல்லிக் கனியைப் போன்றதாகும். உடலையும் உள்ளத்தையும் நல்வழிப்படுத்துவதே மருத்துவத்தின் தலையாய கடமையாகும். எவ்வாறு இலக்கணங்களுக்கு முற்பட்டது இலக்கியமோ, அவ்வாறே இலக்கியத்திற்கு முற்பட்டது மருத்துவமாகும். "இலக்கியத்திலிருந்து எடுபடுவது இலக்கணம்" எனும் விதி உண்மையானால், இயல், இசை, நாடக இலக்கியங்களுக்கு முற்பட்டு நிற்பது மருத்துவமேயாகும் என்று வரையறுக் கலாம். பசிப்பிணிக்கு முற்பட்டது உடல் பிணியும், உடற்பிணிக்கும் முற்பட்டது உள்ளப் பிணியுமாகும் எனலாம். உணவு எனும் மருந்தால் பசி எனும் பிணி தீர்வது போல், மருந்தெனும் உணவால் நோய் எனும் பிணி (உடல் அல்லது உள்ளத்தைப் பற்றியது) தீரும் என்பது உண்மை.

## இரும்புக் காலம்

நாகரிகம் வளரும் போது கற்களை விட்டு, இரும்புகளாலான ஈட்டி, வேல் போன்ற ஆயுதங்களைப் பயன்படுத்தி வேட்டையாடவும், எதிரிகளை அழிக்கவும் தொடங் கினர். நெருப்பின் பயனை அறிந்து மாமிசம், காய்கறிகளை வாட்டி உண்ணலாயினர்.

இக்காலத்தில் மனிதர் தமது ஆயுதங்களைப் பெருக்கி வாள், அம்பு, கேடயம் போன்றவற்றைப் பயன்படுத்திப் போரிடவும், வேட்டையாடவும் கற்கத் தொடங்கினர். சுவையான உணவுகளைச் சமைத்து உண்ணவும், தங்கள் தலைவனுக்கு அடங்கி நடக்கவும் கற்றனர்.

## தற்காலம்

இன்று நாகரிகம் எங்கோ போய்க் கொண்டிருக்கிறது. எங்கே போய் முடியும் என்பதை அறுதியிட்டு யாராலும் உறுதியாகக் கூறமுடியாது. மண்ணிலும், அதன் சூழல்களிலும், விண்ணிலும் அதில் வலம் வரும் கோள்களிலும் பலவகையான மாற்றங்களைக் காண்கிறோம்.

## மருத்துவ முறைகள்

அவிழ்தம் எனும் சொல் உணவாகிச் சோற்றைக் குறித்தலை, "குறமகள் ஆக்கிய வால் அவிழ் வல்சி" என்ற பத்துப்பாட்டினால் உணர்ந்து கொள்ள முடிகின்றது. அவிழ்தம் என்பதன் திரிபாகிய அமிழ்தம், அமுது ஆகிய இரு சொற்களும் உணவையே குறிக்கின்றன. எனினும் தொட்டிலில் தொடங்கி, கட்டிலில் முடியும் மானிட வாழ்க்கையில் பயன் தருகின்ற பாலை அமிழ்தம் என்பர். ஈண்டு அவிழ்தம் எனும் சொல்லானது உணவை மட்டுமின்றி, உணவோடு நெருங்கிய தொடர்புடைய மருந்தையும் குறித்தல் அறியற்பாலது. பண்டைத் தமிழர் உணவை மருந்தாகவும், மருந்தை உணவாகவும் உட்கொண்டனர். உணவின் முடிவே மருந்தின் தொடக்கமும் ஆகியது.

பிணி, மூப்பு, சாக்காடு என்னும் இடர்களைத் (துன்பங்களை) தவிர்த்து, உடலை வளர்க்கும் உபாயம் அறிந்து, உடலை வளர்த்து, உடலில் உயிர் நீடித்து நன்னிலையில் நிற்குமாறு செய்து, உயிர்/ஆன்மா எனப்படும் சீவாத்மாவை வளர்த்தலே இன்பம் பயப்பதாகும். உயிரோடு நன்னிலையில் நீண்ட காலம் வாழப் பிணிக்கப்பட்ட வளி (வாதம்), அழல் (பித்தம்), ஐயம் (கபம்) எனும் முக்குற்றங்களைத் தன்னிலைப் படுத்திச் சீராக்கலே பிணி நீக்கம், வைத்தியம், பரிகாரம், மருத்துவம் எனப்படுகிறது.

உணவு என்றதும் வயிறார உண்டு களிப்பதை நினைவில் கொள்வதையே நம்மில் பலர் அறிவோம். எல்லா உயிர்கட்கும் இன்றியமையாத முதல் உணவு காற்று. இரண்டாவது உணவு கனலாகிய வெப்பம். இதனை அனல் என்றும் கூறுவர். மூன்றாவது உணவு நீர். இயற்கையின் தட்ப வெப்ப நிலைகளுக்கு ஏற்ப, கால மாறுபாடுகளை ஒட்டியே இம்மூவகை உணவுகளின் தேவைகள் நிறைவு பெறுகின்றன. திரவ உணவு வகைகள் மற்றும் தண்ணீர், வெந்நீர் ஆகியனவும் மருத்துவத்தில் தலையாய இடம்பெற்றுள்ளன. மிக எளிதில், விரைவில் செரிமானமாகும் உணவு தண்ணீரே ஆகும். வெந்நீர் செரிப்பதற்குச் சற்று நேரம் தாமதம் ஆகிறது. உணவாகிய நீர், தண்ணீராகவோ, வெந்நீராகவோ அளவு அறிந்து, பயன் கருதி உட்கொள்ளும் காலத்தில், மருந்தாகவும் பயன் தருகிறது. சிலர் நீரை அதிகமாக உட்கொள்ளுவது தீமை என்றும் சிலர் நீரைக் குறைவாக உட்கொள்ளுவது நன்மை என்றும் கூறுவர். இருவரது கருத்தும் சரியன்று. அளவிற்கு மிஞ்சினால் அமுதமும் நஞ்சாகும். அளவோடு இருந்தால் நஞ்சும் அமுதாகும். பாம்பின் நஞ்சை முறிக்க அதன் நஞ்சே மருந்தாதலைப் பலரும் அறிவர். மருந்தின் வளர்ச்சியே மருத்துவத்தைத் தோற்றுவித்தது எனல் மிகையாகாது. "வாளால் அறுத்துச் சுடினும் மருத்துவன்பால் மாளாத காதல் நோயாளன் போல்" எனும் ஆழ்வார்

பாடலினால் (நாலாயிர திவ்வியப் பிரபந்தம்) மருத்துவனின் மாண்பும் இறைவனின் மாண்பும் வெளிப்படுகின்றன. அவை மட்டும் அன்றி பக்தனின் மாற்றுக் குறையாத பக்தியும், நோயாளனின் அளவிடற்கு அரிய பொறுமையும் வெளிப்படுகின்றன. மருந்தின்றி நோய் தீருமா எனில், தீரும் என்பதே வள்ளுவர் வாக்கு. இதனை "மருந்தென வேண்டாவாம் யாக்கைக்கு அருந்தியது அற்றது போற்றி உணின்" என்ற குறள் வெண்பாவால் உணரலாம்.

மருத்துவம் மனிதனது நலத்திற்கும், வாழ்விற்கும் முதன்மையாக விளங்கிய தோடு, நாகரிக வளர்ச்சியைத் தொடர்ந்து தானும் வளர்ந்து வந்த ஓர் மாபெரும் கலையாகும். நாகரிகத் தொட்டிலில் சமுதாயம் எனும் குழந்தைத் தாலாட்டப்படும் போது, மருத்துவம் பல்வேறு காலங்களில் தளிர்த்து வளர்ந்து, வாழ்ந்து வருகின்றது. அனைத்து மருத்துவ முறைகளும், தங்களுக்கே உரித்தானத் தனித்தன்மையைக் காத்து வருதல் கண்கூடு. உயிரினங்களின் பரிணாம வளர்ச்சியைப் போலவே, மருத்துவமும் பல்வேறு மாற்றங்களை, பல்வேறு கால கட்டங்களில் சந்திக்க வேண்டியிருந்தது என்பது முற்றிலும் உண்மையே.

## சித்த மருத்துவம்

'சித்' எனும் சொல் எளிமை, தனிமை, தொன்மை, வன்மை, வாய்மை, தூய்மை, முழுமை, மேன்மை எனப் பலவகையாகப் பிரிந்து பொருள் தருவதோடு இவை அனைத்தையும் தன்னுள் அடக்கி, தானே அவையாகி, அவையே தானாகி, தனக்கு ஒப்பனவும் மிக்கனவுமின்றித் தனித்தன்மைப் பெற்றமையைக் குறிக்கும் விழுமிய சொல்லாகும். சித்தியடைதல் யோக நிலையடைதலைக் குறிக்கும். சித்தர்கள் என்பவர்கள் யோகிகளே. யோகிகள் என்பவர்கள் சித்தர்களே. யோகிகளாகி, சித்தர்கள் வாழ்க்கையின் முழுமையைப் பெற்றவர்கள்.

சித்தியை மூவகையாகப் பிரிக்கலாம். அவையாவன: கரும சித்தி, காய சித்தி, யோக சித்தி என்பனவாகும்.

### 1. கரும சித்தி

நித்திய கருமங்களாகிய காலைக் கடன்களை முடித்தலில் தொடங்கி, உணவு, உழைப்பு, ஓய்வு, உறக்கம், ஆசை, பாசம், நேசங்களோடு நாள்தோறும் சிக்கித் தவித்து, பிறந்து, வளர்ந்து, வாழ்ந்து, தளர்ந்து முடியும் சாதாரண மானுட வாழ்க்கையே நாம் அனைவரும் காண்பதாகும். இதை அனைவரும் செய்தாலன்றி வாழ முடியாது. எனவே இதனை அறிஞர் கரும (காரியம்) சித்தி என்பர். மனிதர் மட்டுமின்றி, உயிர்

வாழும் ஈ, எறும்பு முதல் பறவைகளும், மிருகங்களும், நீர் வாழ் முதலை, திமிங்கலம் போன்றவைகளும் தமது கரும சித்தியைக் கடைப்பிடித்து ஒழுகி வருதல் இயற்கையின் நியதி.

## 2. காய சித்தி

இதனை உடற் சித்தி என்றும் கூறுவர். காயம் எனும் இவ்வுடம்பிற்கு வந்த, வரும் நோய்களை நீக்கி, உடலைக் கல் போலாக்கி, நீண்ட காலம் வாழ்வதற்கு ஏதுவாகிய மருந்துகளையும், உணவு வகைகளையும், உண்டு வாழ்தல் காய சித்திக்கு வழி கோலும், "மாறுபாடில்லாத உண்டி மறுத்துண்ணின் ஊறுபாடு இல்லை உயிர்க்கு", "மருந்தென வேண்டாவாம் யாக்கைக்கு அருந்தியது அற்றது போற்றி உணின்" எனும் குறட்பாக்கள் காய சித்திக்குப் பெரிதும் துணை புரிதலைக் காணலாம்.

## 3. யோக சித்தி

உயிருடன் நின்ற உடலை மரணத்திலிருந்து மீட்கத் தலைப்பட்டவர்கள் பலர். அவர்கள் அனைவரும் மணி, மந்திரம், மருந்துகளின் துணை கொண்டு, அமிர்த நிலையாகிய யோக நிலையைத் தொடங்கி, இறவா நிலையை அடையத் தலைப் பட்டனர்.

*தேகமியா தேனுமொரு சித்திபெறச்*
*சீவன்முத்தி யாகுநெறி நல்லநெறி*

எனத் தாயுமானவரும்,

*செத்திறந்து போய்க்கதியைப் பெற நினைந்தே*
*ஏமாந்த பேதையைப்போல் எனை நினையேன்*

என இராமலிங்க சுவாமிகளும் கூறியுள்ளனர். யோக சித்திக்கு மூலகாரணமானவர் இறையனார்–சிவனார்–சித்தனார் எனப்படுவர்.

சிவபெருமான், உமையவளுக்கும், உமையவள் நந்திக்கும் சொல்ல, நந்தியிட மிருந்து திருமூலர் கற்றுத் தம் சீடர்களுக்குச் சொல்ல, குரு–சீடர் வழியாகச் "சித்த மருத்துவம்" காலந்தோறும் வழிவழியாகப் பல்கி, பரவிச் செழித்து நிலைத்து நிற்பதாக நம்பப்படுகிறது.

சித்தர்கள் யோகிகளாகக் காடு மேடுகளில் அலைந்து, திரிந்து மானுடம்

தழைப்பதற்காகவும், அவர்தம் நோய் தீர்ப்பதற்காகவும், உடலைப் பேணிக் காப்பதற்காகவும் அரும்பாடுபட்டுள்ளனர்.

இந்தியத் துணைக்கண்டத்தில் தமிழர் மருத்துவமாகிய சித்த மருத்துவமும் ஆரியர் மருத்துவமாகிய ஆயுர் வேதமும், அரேபியர் மருத்துவமாகிய யுனானியும், ஆங்காங்கே நிலைபெற்று, இன்றும் மக்களிடையே செல்வாக்குப் பெற்று விளங்கி வருகின்றன. இம்மூவகை மருத்துவங்களும் தம்முடைய மொழி வரலாற்றைத் தொடர்பு கொண்டே தோன்றி, வளர்ந்து, வாழ்ந்து வருகின்றன.

தமிழர்தம் மருத்துவமாகிய சித்த மருத்துவம் காலத்தால் முற்பட்டது என்பது புராணக் கூற்றாகும். சிவன், உமைக்குக் கூற வழிவழியாக அவர்தம் சீடர்களுக்கு விளக்கப்பட்டுப் பரம்பரை பரம்பரையாகச் சித்த மருத்துவம் பரவி வளர்ந்து வந்ததாகத் தெரியவருகின்றது. சித்த மருத்துவம் 5000 ஆண்டுகளுக்கு முற்பட்டது என்றும், அன்றே மனிதன் தனது உடலுறுப்புகளையும், அவற்றின் பயன்களையும், அவ்வுடலுக்கு வரும் நோய்களையும் நீக்க மருத்துவமும் அறிந்திருக்கக்கூடும் என்பது தமிழ் அறிஞர்களின் கருத்தாகும்.

## சீன மருத்துவம்

இந்தியத் துணைக் கண்டத்தினைத் தொட்டுவரும் திபெத்தும், சீனாவும் அந்தக் காலத்தில் தமிழர் மருத்துவமாகிய சித்த மருத்துவம் போன்றே தமக்கென மருத்துவ முறைகளைக் கொண்டிருக்கக்கூடும் என்றும், இன்றைய அக்குபிரஸ்ஸர், அக்கு பஞ்சர் போன்றவை தமிழர் மருத்துவமாகிய வர்ம மருத்துவ முறையிலிருந்து தோன்றியிருக்கக் கூடும் என்றும் வரலாற்று அறிஞர்கள் கருதுகின்றனர்.

## ஆயுர்வேத மருத்துவம்

வேத காலத்திற்குப் பின்னரே ஆயுர்வேத மருத்துவம் தோன்றியது என்பது அதன் பெயராலேயே உறுதி செய்யப்படுகின்றது. இக்காலம் புராண, இதிகாச காலங்களுக்குப் பிற்பட்டது என்பது வெள்ளிடை மலை. ஆயுர்வேத மருத்துவம் பிரம்மாவின் மூலமாக பிரஜாபதிக்கும், அவர் மூலமாக அசுவினி தேவர்களுக்கும், ஆத்ரேயருக்கும் பாரம்பரியமாக வழங்கி வருவதாகக் கூறப்படுகிறது. ஆயுர்வேதம் என்னும் பெயரே வேத காலத்தைக் குறிக்கிறது. எனவே வேத காலத்திற்குப் பின்பே ஆயுர்வேதம் தோன்றியது எனும் கொள்கை சரியானதே.

கி.பி. இரண்டாம் நூற்றாண்டில் அரசன் கனிஷ்கர் காலத்தில் சரக்கா என்பவர் மருத்துவத்தில் பெயர்பெற்று விளங்கியதைப் புத்த பாரம்பரிய வரலாறு கூறுகிறது.

அறுவை மருத்துவத்தில் சுஸ்ருதா தலைசிறந்து விளங்கியதாகக் கூறுவர். இரசாயன சாஸ்திரத்தை நாகார்ஜுனர் பரப்பியதாகக் கூறுவர்.

## யுனானி மருத்துவம்

கிரேக்க மருத்துவம் மந்திரங்களையும், மூட நம்பிக்கைகளையும், மதச் சடங்குகளையும் அடிப்படையாகக் கொண்டிருந்தது, உலகின் எல்லா மருத்துவ முறைகளுக்கும் இது பொருந்துகிறது. கி.பி. 476–இல் ரோமானிய சாம்ராஜ்யம் வீழ்ச்சியுறவே, கிரேக்க, ரோமானிய மருத்துவ முறைகள் நலிவுற்றன. அதன் பின்னர் 7–ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் அராபிய மருத்துவம் என்னும் யுனானி மருத்துவம் தோன்றியது. அராபிய மருத்துவர்களில் புகழ் பெற்றவர்கள் அவிசென்னா (கி.பி. 980–1037) மற்றும் ராஸஸ் ( 18–ஆம் நூற்றாண்டு) முதலியோராவர்.

## யோக மருத்துவம்

அந்தக் காலத்தில் சித்தர்கள் யோக நிலைகளையும், அதன் பயன்களையும் அறிந்து மானுடம் பயன்பெறும் வகையில் அவற்றைக் கூறிச் சென்றனர். எனினும் காலப்போக்கில் யோக மருத்துவம் 'யோகா' எனும் பெயர்பெற்று, தன்னுடன் இயற்கை மருத்துவத்தையும் இணைத்துக் கொண்டுள்ளது. இது இன்று தனி மருத்துவமாக விளங்குகின்றது.

திருமூலர் யோகாசனங்களால் காலையில் பித்த நோய்களும், பகலில் வாத நோய்களும், மாலையில் கப நோய்களும் குணமடையும் என்று கூறியுள்ளதை நோக்க, சித்த மருத்துவத்தின் ஓர் அங்கமே யோகாசனம் என்பது வெள்ளிடை மலையன்றோ.

## இயற்கை மருத்துவம்

சித்த மருத்துவத்தை நன்கு கற்று ஆராய்வோர், அம்மருத்துவம் இயற்கையோடு இயைந்தது என்பதை நிச்சயம் மறுக்கமாட்டார். "அண்டத்தில் உள்ளதே பிண்டம், பிண்டத்தில் உள்ளதே அண்டம்" என்பதே இதற்குச் சான்று பகர்கின்றது. எனினும் இன்று சித்த மருத்துவமும், இயற்கை மருத்துவமும் ஒரே கோட்பாடு களைக் கொண்டிருந்த போதிலும் தனித்தனியாக இயங்கி வருகின்றன. யோகாவும் அப்படியே சித்த மருத்துவத்திலிருந்து பிரிந்துவிட்டது.

## அலோபதி மருத்துவம்

கிரேக்க மற்றும் ஆங்கிலேய மருத்துவத்தின் தொகுப்பே அலோபதி மருத்துவம் ஆகும். மூட நம்பிக்கைகளைத் தகர்த்தெறிந்த ஹிப்போகிரேட்டஸ் இதன் தந்தை எனப்படுகிறார். இன்றும் 'ஹிப்போகிரேட்டஸ் உறுதிமொழியை (Hippocrates Oath) (இதனை நாம் சத்தியப்பிரமாணம் என்றும் கூறலாம்) அலோபதி மருத்துவம் பயின்று தொழில் தொடங்குவோர் எடுத்துக் கொள்கின்றனர்.

## ஹோமியோபதி மருத்துவம்

இதனைக் கண்டுபிடித்தவர் டாக்டர். சாமுவேல் ஹானிமான் (Dr. Samuel Hahnemann, 1755-1843) என்ற ஜெர்மானியர் ஆவார். இவர், அலோபதி மருத்துவ முறையை நன்கு கற்றவர் என்பது இங்குக் குறிப்பிடத்தக்கது. மிகச்சிறிய அளவிலான மாத்திரை மற்றும் திரவ வடிவில் இம்மருந்து வழங்கப்படுகிறது. இதுவும் மக்களிடையே பிரபலமாக வழங்கிவருகிறது.

# 3

# சங்க இலக்கியத்தில் மருத்துவம்

மரு. ச. முத்தரசன்

## முன்னுரை

ஆதிகாலத்தில் மனிதன் நெருப்பை அறியவில்லை. கல்லாலான ஆயுதங் களாலும், பின்னர் வில், ஈட்டி போன்ற ஆயுதங்களாலும் விலங்குகளைக் கொன்று, அவற்றின் இறைச்சியைப் பச்சையாகவே உண்ணத் தொடங்கினான். இதை வரலாற்று அறிஞர்கள் உறுதி செய்கின்றனர். சிக்கி முக்கி கற்களைக் கொண்டு தீயை உண்டாக்கக் கற்ற பிறகு, மனிதன் விலங்குகளின் இறைச்சியை நெருப்பில் சுட்டு, நன்கு சுவைத்து உண்ணலானான். பின்னர் நிலத்தில் பயிர் செய்து வாழத் தலைப்பட்டான். ஆற்றங்கரைகளிலேயே வீடுகளை அமைத்து வாழலானான். காட்டு மிருகங்களை, வீட்டு மிருகங்களாகப் பழக்கப்படுத்தி வளர்க்கலானான். பாலும், தயிரும், மோரும், வெண்ணெயும், நெய்யும் உணவாயின. காலப்போக்கில் அறுசுவை உணவை, அமுதமாக உண்ணும் அரிய பேற்றினை மனிதன் பெற்று மகிழ்ந்தான்.

## மருந்தின் அடிப்படை உணவே

பழந்தமிழகத்தில் சீரகச் சம்பா என்னும் நெல் (சீரகம் போன்ற அமைப்புடைய சம்பா நெல் என்று பொருள்) பயிரிடப்பட்டன என்றும், கிரேக்க மன்னன் அலெக்சாண்டர் இந்தியப் படையெடுப்பை முடித்துத் திரும்பியபோது, தன் நாட்டிலும் இந்நெல்லைப் பயிரிடுமாறு செய்தான் என்றும் வரலாற்று ஆய்வாளர்கள் கூறுவர். "நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம்" என்பது முதுமொழி. "வீட்டுச் செல்வம்

மாடு" என்றால் "தோட்டச்செல்வம் கீரை" ஆகும். "ஆய கலைகள் அறுபத்து நான்கு" என்பர். இதில் சமையல் கலையும் அடங்கும்.

"உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே" என்பதாலும், "உடம்பார் அழியின் உயிரார் அழிவர்" என்பதாலும், உயிரைப் பேண உடம்பும், உடம்பைப் பேண உணவும் இன்றியமையாதவை என்பது தெளிவாகிறது. கருவறையிலிருந்து கல்லறை செல்லும்வரை, மானிட வாழ்வில் உணவு தலையாய இடத்தைப் பெறுகிறது.

பிறந்த குழந்தை வளருங் காலத்தில் நாட்டின் மரபிற்கும், தாய், தந்தையரின் பழக்க வழக்கங்களுக்கும் ஏற்ப, உணவு, உடை, உறையுள் முறைகளைத் தானும் கடைப்பிடிக்கிறது. உணவு நாட்டுக்கு நாடு, வீட்டுக்கு வீடு, ஆளுக்கு ஆள் என்ற அடிப்படையில் மாறுபட்டு மனிதனின் இயல்புகளையும், பண்புகளையும் மாற்றி அமைக்கிறது என்பது யாரும் மறுக்க முடியாத உண்மை.

உயிரைப் பேண உடம்பைப் பேணுகிறோம். உடம்பையும், உள்ளத்தையும் பேண உணவைப் பேணுகிறோம். எனவே மனிதனுக்கும் மருத்துவத்திற்கும் உள்ள தொடர்பு உணவிலிருந்தும், சுற்றுச் சூழலிலிருந்துமே தொடங்குகிறது என்பது வெளிப்படையான உண்மையாகும்.

## திணைப் பாகுபாட்டில் மருத்துவம்

சங்கப் பாடல்கள் பெரும்பாலும், இலக்கிய இன்பங்களோடு, நுண்ணிய அறிவியற் செய்திகளையும், சுவையுறக் கூறும் பான்மையால், இன்றும் நம் அகங்களைக் கவர்ந்து கொண்டே இருக்கின்றன. சங்க கால மக்கள் இயற்கையோடு, இயைந்து வாழ்ந்ததைச் சங்கப் பாடல்கள் பறை சாற்றுகின்றன. அவர்கள் வாழ்க்கையை அகம், புறம் என்று இரு கூறுகளாகப் பகுத்து, அக வாழ்க்கை எவ்வாறு புற வாழ்க்கையோடு மிக நெருக்கமாக ஒன்றி நிற்கின்றது என்பதைப் படம் பிடித்துக் காட்டியுள்ளனர். அவர்கள் நிலத்தை நானிலம் என்றனர். நன்னிலமாகியப் பழந்தமிழ் நாடு நானிலங்களில் அடங்கியது எனினும் ஐந்திணைகளாக உண்மைக் காதலைப் பேசுங்காலத்தில், பாலையையும், ஐந்தாவதாகச் சேர்த்து, ஐவகை நிலங்களாகப் பகுத்த பான்மையைக் கீழ்காணும் செய்யுளால் அறியலாம்:

*முல்லையும் குறிஞ்சியும் முறைமையிற் திரிந்து*
*நல்லியல் பிழந்து நடுங்குதுயர் உறுத்துப்*
*பாலை என்பதோர் படிவம் கொள்ளும்.*

ஐந்திணைக்கும் அவ்வந்நிலப் பகுதியில் சிறந்து விளங்கும் பூவின் பெயரை இட்டு மகிழலாயினர். அகத்திணையும், புறத்திணையும் தம்முள் பாகுபாடு கொண்டவை

என்பதால் புறத்திணைகட்கும் பூக்களின் பெயர்களைச் சூட்டலாயினர். ஒருதலைக் காமத்தைக் (வேட்கை) கைக்கிளை என்றும், ஒவ்வாக் காமத்தைப் பெருந்திணை என்றும், ஐந்திணைகளோடு இரு திணைகளையும் சேர்த்து ஏழு திணைகளாகக் கொண்டனர். ஒவ்வொரு திணைக்குரிய மரம், செடி, கொடி வகைகளையும், பொழுதையும், பொழுதுக்கு இயைந்த காதல் உணர்வுகளையும் அழகுறக் கூறலாயினர். சங்க காலப் புலவர்கள் மக்களின் மனப்பாங்கை நன்கறிந்த வராயிருந்தனர். மேலும் இயற்கையின் எழில் கூறுகளை, நுண்மான் நுழை புலன் கொண்டு ஆய்ந்தறிந்து தம் செய்யுட்களில் ஆங்காங்கே பயன்படுத்தியுள்ளனர்.

பச்சிலை மருந்தால் (மூலிகை மருந்து) பல்வகை நோய்களைத் தீர்க்கும் பான்மை ஈண்டு நினைவு கூறத்தக்கது. எனவே, மரம், செடி, கொடிகளைப் பற்றிய நுண் அறிவை சங்க காலத்திலேயே அவர்கள் கற்றறிந்து, தம் காலத்திலேயே மூலிகை களையும், மலர்களையும், கிழங்கு வகைகளையும், மருந்தாகப் பயன்படுத்தியதை அறிய முடிகிறது. சங்கப் பாடல்களில் காணும் மரம், செடி, கொடிகள், பறவை, விலங்கினங்களில் பெரும்பாலானவை இன்றும் தமிழ்நாட்டில் காணப்படுகின்றன.

## ஐம்பூதக் கூட்டே உலகம்

**அகத்தியம், தொல்காப்பியம், பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, பதினெண்கீழ்க் கணக்கு** என்னும் நூல்களால் பண்டைத் தமிழரின் வீரம், தீரம், பராக்கிரமம், ஆண்மை, பெண்மை, சான்றாண்மை, கொடைவன்மை, கலை, நாகரிகம், காதல், பண்பாடு, மதம், தத்துவம், ஆட்சி முறை ஆகியவற்றை அறிய முடிகிறது.

சோதிடமும், பறவை சாத்திரமும், பிராணாயாமமும், இரசவாத வித்தையும், மருத்துவ விஞ்ஞானத்திற்கு அடிப்படையாக உள்ளன. இவற்றை விஞ்ஞான அறிவோடு, மெய்ஞ்ஞானப் புலமையையும் கொண்டு, மனித உடலின் அமைப்பு, உடலில் தத்துவங்களை ஆராய்தல் இன்றியமையாதது. அடிப்படைத் தத்துவங்களை அறிந்து, ஆய்ந்து கற்றோர் மட்டுமே மருத்துவத்தின் பெருமையை உணரவும், உணர்த்தவும் வல்லார் ஆவர். ஐம்பூதக் கூட்டே உலகத்தின் அந்தமும் ஆதியுமாகும்.

*மண்டிணிந்த நிலனும்*
*நிலனேந்திய விசும்பும்*
*விசும்புதைவரு வளியும்*
*வளித் தலைஇய தீயும்*
*தீமுரணிய நீரும் என்றாங்கு*
*ஐம்பெரும் பூதத் தியற்கை* (புறநானூறு 2)

உடம்பொடு நின்ற உயிர்க்கும், ஏனையவற்றிற்கும் இக்கொள்கை பொருந்தும், மரங்களன்றி, மலைகளும் வளர்கின்றன என்பது அறிவியலார் கண்ட உண்மை. இனி

*நெடுங் கடலுந் தன்நீர்மை குன்றும் தடிந்தெழிலி*
*தான்நல்கா தாகி விடின்.*

எனும் குறளை நோக்குங்கால், நீரின் பயனும், அந்நீரைப் பொழியும் மழையின் சிறப்பும் "வான் சிறப்பில்" காணலாம். மேலும்

*"நீரின் றமையா யாக்கைக் கெல்லாம்"*
*"உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே".*
*"உண்டி முதற்றே உணவின் பிண்டம்".*

என்பவை நீர் மற்றும் உணவின் இன்றியமையாமையைத் தெற்றெனப் புலப்படுத்து கின்றன. உணவின்றி எவ்வுயிரும் தோன்றா, வளரா, வாழா என்பதால், அவைப் பிண்டம் எனப்பட்டன. நீரின் அருமை, பெருமையை இன்றைய விஞ்ஞானமும் ஒப்புக்கொள்கிறது.

நிலத்தைச் சூழ்ந்துள்ள நீரும், உடலைச் சார்ந்துள்ள நீரும் உலகப் பரப்பில் முக்கால் பகுதிக்கும் மேலாக உள்ளன. நீருக்கு அடுத்தபடியாக உணவு தேவைப் படுகிறது. நீரும் ஓர் உணவாகிறது என்பதை இன்றைய மேலைநாட்டு மருத்துவர்கள் கூறுவதை அன்றே திருவள்ளுவர்,

*துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கித் துப்பார்க்குத்*
*துப்பாய தூஉம் மழை.*

என்று மிக அழகாக, "வான் சிறப்பு" என்னும் அதிகாரத்தில் கூறியுள்ளார்.

*விசும்பின் துளிவீழி னல்லால்மற் றாங்கே*
*பசும்புல் தலைகாண் பரிது.*

என்பதும் அவரது குறளே. எனவே நீரின்றி நிலமும் நிலமின்றி நீரும் இல்லை என்பது கண்கூடு. இதனைக் கீழ்காணும் புறநானூறும் (18) உறுதி செய்கின்றது:

*உணவெனப் படுவது நிலத்தொடு நீரே*
*நீரும் நிலனும் புணரியோ ரீண்டு*
*உடம்பும் உயிரும் படைத்திசி னோரே.*

## உயிரினப் பாகுபாடு

ஓரறிவு முதல் ஆறறிவு வரை உள்ள அனைத்தையும் தொல்காப்பியர் வகைப்படுத்தியுள்ளார்.

*ஒன்றறி வதுவே உற்றறி வதுவே*
*இரண்டறி வதுவே அதனொடு நாவே*
*மூன்றறி வதுவே அவற்றொடு மூக்கே*
*நான்கறி வதுவே அவற்றொடு கண்ணே*
*ஐந்தறி வதுவே அவற்றொடு செவியே*
*ஆறறி வதுவே அவற்றொடு மனனே*
*நேரிதி னுணர்ந்தோர் நெறிப்படுத் தினரே*

– தொல்காப்பியம், மரபியல் 27

*புல்லும் மரனும் ஓரறி வினவே*
*பிறவு முளவே யக்கிளைப் பிறப்பே*

*நந்து முரளு மீரறி வினவே*
*பிறவு முளவே யக்கிளைப் பிறப்பே*

*சிதலும் எறும்பும் மூவறி வினவே*
*பிறவு முளவே யக்கிளைப் பிறப்பே*

*நண்டுந் தும்பியும் நான்கறி வினவே*
*பிறவு முளவே யக்கிளைப் பிறப்பே*

*மாவும் புள்ளும் ஐயறி வினவே*
*பிறவு முளவே யக்கிளைப் பிறப்பே*

*மக்கள் தாமே யாறறி வுயிரே*
*பிறவு முளவே யக்கிளைப் பிறப்பே.*

– தொல்காப்பியம், மரபியல் 28–33

| | | |
|---|---|---|
| கல், புல், பூண்டு, செடி, கொடி, மரம் | – | ஓரறிவு |
| புழு, நத்தை, சங்கு | – | ஈரறிவு |

| | | |
|---|---|---|
| எறும்பு, கரையான் | – | மூவறிவு |
| நண்டு, வண்டு | – | நாலறிவு |
| விலங்கு, பறவை | – | ஐயறிவு |
| மானிடர் | – | ஆறறிவு |

பசியைப் பிணியாகவே அன்றும், இன்றும் கருதுகின்றனர். "பசி வந்திடப் பத்தும் பறந்து போகும்" என்பது பழமொழி. இனி அன்றே தன் பசியைப் போக்குவார் யார் என்று அறிந்துகொள்ள விரும்பிய புலவர், மற்றொரு புலவரிடம்,

*பசிப்பிணி மருத்துவ னில்லம் அணித்தோ*
*சேய்த்தோ கூறுமின் எமக்கே*

– புறநானூறு 360

என வினவுவதால் அறியலாம்.

கண்ணப்பர், முக்கண் முதல்வனுக்குத் தம் கண்களையே ஒவ்வொன்றாக எடுத்து அப்பியதால் (பொருத்தியதால்) கண்ணப்பர் எனப் பெயர் பெற்றதாலும்,

*வாளா லறுத்துச் சுடினும் மருத்துவன்பால்*
*மாளா தகாதல் நோயாளன் போல*

எனும் நாலாயிர திவ்வியப் பிரபந்தத்தாலும்,

*உடலிடைத் தோன்றிற் றொன்றை அறுத்ததன் உதிரமூற்றிச்*
*சுடலுறச் சுட்டு வேறோர் மருந்தினாற் றுயரந் தீர்வர்*

என்ற கம்பராமாயணத்தாலும் அன்றே அறுவை மருத்துவத்தைப் பழந்தமிழர் அறிந்திருந்தனர் என்பதை உணரலாம்.

மேலும்,

*வேலுக்குப் பல்லிறுகும் வேம்புக்குப் பல்துலங்கும்*
*பூலுக்குப் போகம்பொழியுங்காண் – ஆலுக்குத்*
*தண்டா மரையாளுஞ் சாருவளே நாயுருவி*
*கண்டால் வசீகரமாங் காண்*

எனும் பதார்த்த குண சிந்தாமணிப் பாடல் பல்வகை மூலிகைகளின் பயன்களை விளக்கமாகக் கூறுவதை அறியலாம்.

*நிலந்தீ நீர்வளி விசும்போ டைந்துங்*
*கலந்த மயக்கம் உலகம் ஆதலின்*

– தொல்காப்பியம் 635

## ஐம்பூதக் கூட்டே உடல்

உடலின் அமைப்பு பஞ்ச பூதங்களை அடிப்படையாகக் கொண்டது. அவ்வுடலின் இயக்கமும், பஞ்ச பூதங்களான அறுசுவைகளைக் கொண்டே இயங்கி வருகின்றது. பெறற்கரிய கருநெல்லிக் கனியை, அதியமான் ஔவையாருக்குக் கொடுத்து, தமிழுக்குத் தொண்டு செய்யச் சொன்னது, தமிழ் உள்ளவரை ஔவையும் வாழவேண்டும் என்ற ஆசையால் மட்டுமின்றி, தமிழ் மூதாட்டியின்பால் கொண்ட அன்பின் பெருக்கத்தாலேயே என்று கூறல் மிகையாகாது. ஆல், அரசு, அத்தி போன்ற மரவகைகள் பண்டைக்காலங்களில் இருந்தன என்பதற்குச் சான்றுகள் உள்ளன.

*தெள்ளிய ஆலின் சிறுபழத் தொருவிதை*
*தெண்ணீர் கயத்தின் சிறுமீன் சினையினும்*
*நுண்ணிதே ஆயினும் அண்ணல்யானை ஆட்பெரும் படையொடு*
*மன்னர்க் கிருக்க நிழலா கும்மே*

"ஆலும் வேலும் பல்லுக்குறுதி" என்பது பழமொழி. ஆலம் பழத்தைக் காயவைத்து சூரணம் செய்து சாப்பிட்டால், ஆண்களுக்கு வன்மையும், பொலிவும் உண்டாகும். பெண்களுக்கு மென்மை அழகுத் தோற்றமும் ஏற்படும். கருப்பைக் கோளாறுகளும் தீரும்.

*நன்னீரை வாழி அனிச்சமே நின்னினும்*
*மென்னீரள் யாம்வீழ் பவள்.*

## உயிரியல் வழி மருத்துவம்

*அனிச்சமும் அன்னத்தின் தூவியும், மாதர்*
*அடிக்கு நெருஞ்சிப் பழம்.*

மென்மைக்கு இலக்கணமாகக் கூறப்பட்டப் பெண்களின் பாதங்களுக்கு, மிக மென்மையான அனிச்ச மலரும், அன்னப் பறவையின் சிறகும் நெருஞ்சி முள் போன்று வருத்தம் தரத்தக்கன. அனிச்ச மலரும், அன்னப் பறவையின் சிறகும், நெருஞ்சி முள்ளும் மருத்துவப் பயனுடையவை. இதைத் திருவள்ளுவர் முதலானோர் அக்காலத்திலேயே அறிந்திருந்தனர்.

*காணின் குவளை கவிழ்ந்து, நிலன்நோக்கும்*
*மானிழை கண்ணொவ்வோம் என்று.*

குவளை மலர்களுக்குக் காணும் தன்மை இருந்தால், சிறந்த கண்களையுடைய இவளுக்கு யாம் ஒப்பாக மாட்டோம் என்று, வெட்கித் தலைகுனிந்து நிலத்தை நோக்கும். குவளை மலர்கள் அக்காலத்தில் இருந்தமைக்கு இது சான்றாகும்.

## மருத்துவ நோக்கில் கள்ளும் காமமும்

வெட்சி, கரந்தை, வஞ்சி, காஞ்சி, நொச்சி, உழிஞை, தும்பை, வாகை, பாடாண், பொதுவியல், கைக்கிளை, பெருந்திணை என்னும் திணைகளும், அவற்றின் துறைகளும் அவற்றிற்கேற்ற மலர்களும் புறநானூற்றின் படைப்புகளே. இனி வீரக் கழலுடைய மறவர் தாம்பெற்ற வெற்றியைக் கள்ளுண்டு களித்ததோடு, மகிழ்ச்சியோடுப் பிறருடன் ஆடியதைக் குறிப்பிடும் வகையில் 'கள்ளுண்டு ஆடியது' எனும் பொருள் கொண்ட புறநானூற்றுப் பாடல்கள் பல உள. அவற்றில் காணப்படும் பாடல்கள் பலவும் வெட்சித் திணையைப் பற்றியே பேசுகின்றன. அக்காலத்தில் வெற்றி பெற்றோர், தமது வெற்றியைக் கொண்டாடும் காலத்தில், கள்ளுண்பதை வழக்கமாகக் கொண்டிருந்தனர் என்று இதனால் தெளிவடையலாம். கள்ளானது (மதுவானது) அன்றும், இன்றும் வெற்றி பெற்றோரின் விளையாட்டுகளில் / விருந்துகளில் ஓர் அங்கமாகி, மாறாத வழக்கத்தை ஏற்படுத்தியுள்ளதை நாம் ஏற்றுக்கொள்ளுதலே ஏற்புடையதாகும். கள் (மது) அளவாக உண்ணும் காலத்தில் மருந்தாகவும், அதையே விருந்தாக்கினால் மருத்துவ குணம் மாறி நஞ்சாகவும், தனது பேராற்றலைக் காட்டிவிடும் என்பதை அறிதல் இன்றியமையாதது. இனி வள்ளுவர் தமது குறட்பாவில், 'கள் உண்ணாமை' என்னும் ஓர் அதிகாரத்தைப் படைத்து, அதில் வரும் பத்துக் குறட்பாக்களிலும் கள்ளுண்ணாமை சிறந்தது என்று வலியுறுத்திக் கூறுகின்றார். அதில் ஓர் குறள் மிக இன்றியமையாதது. அக்குறள் வருமாறு:

*துஞ்சினார் செத்தாரின் வேறல்லர் எஞ்ஞான்றும்*
*நஞ்சுண்பார் கள்ளுண் பவர்.*

உறங்கினவர் செத்தவரோடு ஒப்புடையவரே, ஏனெனில் அக்காலத்தில் அவரது அறிவு, செயல் குன்றியதாகிவிடுகிறது. அது போலவே கள்ளுண்பாரும் எக்காலத் திலும் அறிவின்றியே செயல் புரிவராதலின், நஞ்சுண்பவர்களுக்கு இணையாகத் தம் நிலையிலும் தாழ்ந்து விடுவர். இனி நஞ்சு உண்பவர் உடனடியாக மரணத்தைத் தழுவ, கள் உண்பவர் படிப்படியாக மரணத்தைத் தழுவுவர் எனவும் கொள்ளலாம்.

ஈண்டு "நஞ்சுண்பார் கள்ளுண்பவர்" என்னும் வள்ளுவர் வாக்கு சிந்தனைக் குரியது. கள் உண்பதையே தமது தொழிலாகக் கொண்டு, தமது வாழ் நாள் களுக்கு வளந்தரும் அரிய தொழிலாகிய ஊதியம் ஈட்டும் தொழிலை மறந்து போவதையே, வள்ளுவர் சாடுகின்றார். சங்க நூலான "மதுரைக் காஞ்சியில்" கள்ளைப் பற்றிய குறிப்பைக் காணலாம். நாம் அறிய வேண்டுவன யாதெனில், அந்நாளில் வெட்சி, கரந்தை, வஞ்சி, காஞ்சி, நொச்சி, உழிஞை, தும்பை, வாகை எனும் பூக்களில் யாதேனும் ஒன்றை, அவ்வவற்றின் திணை, துறைகளுக்கு ஏற்ப, தங்களது வெற்றிக்கு அடையாளமாக வீரர்கள் சூட்டி மகிழந்தனர் என்பதாம். இம்மலர்களில் சில சங்கத் தமிழர்களின் வாழ்வில் மட்டுமின்றி, இன்றும் ஆங்காங்கே நிலைத்து நின்று மருத்துவப் பயன்களைத் தந்தவண்ணம் இருக்கின்றன என்பது உண்மையாகும்.

**மதுரைக்காஞ்சியின்** ஆசிரியராகிய மாங்குடி மருதனார், பாண்டிய மன்னன் நெடுஞ்செழியனைப் போற்றிப் பாடும் காலத்தே, அவனை மது உண்டு நீண்ட காலம் வாழ வாழ்த்துகின்றார். இதோ அப்பாடல்:

*பொற்பு விளங்கு புகழ்அவை நிற் புகழ்ந்து ஏத்த,*
*இலங்கு இழை மகளிர் பொலங் கலத்து ஏந்திய*
*மணங் கமழ் தேறல் மடுப்ப, நாளும்*
*மகிழ்ந்து இனிது உறைமதி, பெரும !*
*வரைந்து நீ பெற்ற நல் ஊழி யையே !*

காத்திருக்கும் ஊழியை நினைவூட்டுகின்றப் புலவர், வாழ்வு நிரந்தரமற்றது என்பதை வெளிப்படையாகக் கூறாது, அரசன் காலத்தை வீணாக்காது, பொன்னகை அணிந்து, புன்னகை புரியும் நல்லார் தரும் பொன் கோப்பையில் உள்ள புத்தம் புதிய மதுவை உண்டு, மனம் மகிழ்ந்து, அவரோடு நீண்ட காலம் வாழ வேண்டும் என்று வாழ்த்துகின்றார். இதனால் மன்னரும் மகிழ்ச்சியிலும், வெற்றியிலும் மது உண்ணல் வழக்கம் என்பது புலனாகிறது.

திருவள்ளுவரின் குறட்பாக்களை ஒப்பு நோக்கியே நாம் சங்க காலத்தைத் தெள்ளத் தெளிவாக அறிந்து கொள்ளலாம்.

*உள்ளக் களித்தலும் காண மகிழ்தலும்*
*கள்ளுக்கில் காமத்திற்கு உண்டு.*

*உண்டார்கள் அல்லது அடுநறாக் காமம்போல்*
*கண்டார் மகிழ்செய்தல் இன்று.*

இவ்விரு குறள்களும், கள்ளின் பயனையும், காமத்தின் பயனையும் வள்ளுவர் கையாண்ட முறையைப் புலப்படுத்துகின்றன. நினைத்தாலும், பார்த்தாலும் கனவிலும் கூட மகிழ்ச்சியைத் தர வல்லது காமம். முன்னது மனதால் துய்க்கும் இன்பம்: பின்னது உடலால் (சுவையால் / சுவை தரும் பயனால்) துய்க்கும் இன்பம். மனதால் துய்க்கும் இன்பம் நிலையானது; எனவே நினைக்கும் தோறும் இன்பம் தருகின்றது. உடலின்பம் துய்க்கும் காலத்திலே மட்டும் இன்பம் தருவதால் நிலையற்றதாகி விடுகின்றது. மனதால் பெறும் இன்பமே சாலச் சிறந்தது என்பது இனிதே விளங்கும். மனம் என்பது உடலையும், உயிரையும் இணைக்கும் ஓர் அற்புதப் பாலமாகும். மனமென்னும் பாலம் பழுதுபடுமானால், உடல் நடைப் பிணமாகி, செயல் புரியும் ஆற்றலை இழந்து விடுகிறது. காதல் வயப்பட்டோர், காதலில் அங்கீகாரம் பெற முடியாதோர், பேரதிர்ச்சிகளைக் கண்டோர், பெரும்பொருளை இழந்தோர், பெரும் விபத்துகளைக் கண்டோர், பெரும் விபத்துகளுக்கு உள்ளானோர், ஏமாற்றங்களைத் தாங்க இயலாதோர், மண முறிவுகளைச் சந்தித்தோர், துணைவரை/ துணைவியை உறவினரை இழந்தோர் இப்படி எண்ணற்ற காரணங்களால் மனம் தன்னிலை கெட்டு, செயல் புரியும் திறனை இழந்து, மக்களை மாக்களாக்கி விடுகின்றது. பிறவிப் பைத்தியங்களும் இவரோடு அடங்குவர். மன நோய்க்குப் பல வகை மருத்துவ முறைகள் பரிந்துரைக்கப்பட்ட போதிலும், முற்றிலும் நோய் நீக்கல் அரிதினும் அரிது. மனநோயாளியின் ஆரம்ப கால வாழ்க்கை முறையை அறிந்து, தெளிந்து, அவரோடு ஒன்றிப் பழகியே நோயைப் படிப்படியாகத் தீர்க்க முயல வேண்டும். மன நோய்க்குக் காரண காரியங்களே அடிப்படையாக (நிலைக்களனாக) உள்ளன. இதனை இன்பத்துப்பாலில் (காமத்துப்பால்) வள்ளுவர் அழகுற எடுத்துக் காட்டுகின்றார்.

செங்காந்தள், ஆம்பல், அனிச்சம், குவளை, குறிஞ்சி, வெட்சி, கூவிளம், வாகை, குடசம், குரவம், மருதம், கோங்கம், பாதிரி, சண்பகம், கரந்தை, முல்லை, வாழை, வள்ளி, நெய்தல், தாழை, காஞ்சி, கொன்றை, அவரை, நந்தி, நாகம், வேங்கை முதலியன சங்க கால மலர்கள். கபிலர் பூக்களை வகைப்படுத்திக் காட்டுதல், கண்டு இன்புறத்தக்கது. மரம், செடி, கொடி வகைகளில் அவருக்குள்ள பரந்து, விரிந்த அறிவையே இது பறை சாற்றுகிது. இம்மலர்களில் சில அதே பெயரிலும், சில பெயர் மாற்றம் அடைந்தும் சித்த மருத்துவத்திற்குச் சீரிய பயனை அளித்து வருகின்றன. தொன்றுதொட்டு வந்த சித்த மருத்துவ இலக்கியங்களில் இவற்றின் அருமை, பெருமைகளைக் காணலாம்.

## மழையின் மருத்துவ குணம்

கடையெழு வள்ளல்களில் ஒருவனாகிய பாரியை, மாரியோடு ஒப்பிட்டுக் கபிலர் பாடியுள்ளார். பாரி, அறிவும் நற்பண்பும் இல்லாதவர்களாயினும், தன்னை நம்பி,

நாடி வந்தோருக்கு, மாரியைப் போலவே, வாரி வழங்கினான் என்கிறார் கபிலர். வாரி வழங்குவதில் மாரியை ஒத்த பாரி, எல்லோரையும் ஒன்றாகவே மதித்ததினால் கடவுளுக்கு நிகரானவன் என்கிறார் கபிலர்.

தமக்கு நீர் தந்துதவும் மேகங்களுக்கு இவ்வுலகம் என்ன கைம்மாறு செய்கின்றது? மேகங்களைப் போன்றவர் செய்யும் உதவிகளும் கைம்மாறு எதிர்ப்பார்க்காதவையே. எனவே உயிர் காக்கும் அமுதமாகிய மழை நீர் சங்க காலத்தில் கபிலரால் பாடப் பெற்றமை நினைவு கூறத்தக்கதாகும்.

மழை நீர் உயிர்களைக் காத்து, அவற்றை நிலைபெறச் செய்வதால் அமுத மாகிறது. உண்பவருக்கு வேண்டிய உணவுகளையும், அவர்தம் பிணி தீர்க்கும் மருந்துகளையும் உண்டாக்கும் மழையானது, தானும் எல்லா உயிர்களுக்கும் உணவாகிறது. மழையின்றேல் கடல் வளம் குறையும். அப்போது கடலில் இருக்கும் உயிரினங்கள் அழிய நேரும். எனவே கடலுக்கும் மழை தேவையாகிறது. இவை அன்றி, ஒழுக்கத்திற்கும் மழை மிக மிக இன்றியமையாததாகிறது. உயிர்களுக்கு அமுதாகவும், கடலைக் காக்கும் வள்ளலாகவும், ஒழுக்கத்திற்கு வித்தாகவும் மழை விளங்குகின்றது.

## மனவளமே உடல் நலத்திற்கு அடிப்படை

தலைவன்/தலைவி மார்பில் சந்தனம் பூசிக்கொள்ளுதல், மகளிர் தம் கூந்தலுக்கு அகிற் புகையூட்டுதல், தலைக்கு மணம் வீசும் நெய் பூசுதல், தலைவி தாழை மடலிற் கட்டிய கண்ணியைச் சூடுதல், தலைவன் பிச்சி மலரால் தொடுத்த மாலையைச் சூடுதல் அக்காலத்தே வழக்கமாக இருந்தது என்பதை பண்டைத் தமிழர் நன்கு அறிந்திருந்தனர். "மாமழை போற்றுதும் மாமழை போற்றுதும்" என்ற சிலப்பதிகார அடியும் இதற்குச் சான்றாகும்.

இவை மனிதனின் தட்பவெப்பத்தைச் சமன்படுத்தும் மருத்துவ நடவடிக்கை யாகவும் அமைந்தன.

"பழுத்த மிளகு சிந்திக்கிடக்கின்ற பாறையிடத்தே தோன்றுகின்ற நீண்ட சுனையிலே, நெகிழ்ந்து உதிர்ந்த மா, பலா, வாழைப் பழங்களால் விளைந்த தேறலில் உள்ள ஈக்களைத் தள்ளிப் புகுந்து வந்து, திரண்ட தேறலை நீரென்று எண்ணி உண்ட மயிலானது, கூத்தாட்டு அவையிலே கயிற்றில் ஏறியாடுகின்ற ஆடல் மகள் போலத் தள்ளாடுகின்ற சாரலையுடையவனும், வானளாவிய உச்சியிலே கிளைத்த செங்காந்தள் பூக்கள், நல்ல பல கச்சு விரித்த களம் போல, அழகு பெற்ற நிலப்பரப்பை

உடையவனும் ஆகிய மலைநாடன், தலைவிக்கு வாய்த்தமை பெறற்கரிய பேறு என்று கூறி, தோழி செவிலியின் வாயிலாக, தலைவியின் தாய், தந்தையர்க்கு களவை அறிவித்தல் மகிழற்பாலது. தலைமகன் அறிவாலும், ஆற்றலாலும், வளத்தாலும், வாய்மையாலும், தம்மின் மிக்கான் என்று கூறுவதாலும், அவனுறவு நமக்கு எய்துதற்கு அரியது என்று கூறுவதாலும், இவையாவும் நல்வினைப் பயனாலேயே நிகழ்வதாகக் கபிலர் காட்டுவது, சங்க காலத்தில் மானுடம் தழைக்க, மன நலம் எவ்வாறு தலைசிறந்து விளங்கித் துணைபுரிந்தது என்பதற்கு ஓர் சிறந்த எடுத்துக்காட்டாகும். இனி வள்ளுவரும் கபிலரது கருத்தினையே ஒத்திருந்தார் என்பது அவரது குறளால் விளக்கமாகிறது.

*மனநலம் மன்னுயிர்க்கு ஆக்கம்; இனநலம்*
*எல்லாப் புகழும் தரும்.*

மேற்கூறியவற்றின் மூலம் சங்கத் தமிழர் உடல் நலத்தையும் மன வளத்தையும் பேணுவதில் மருத்துவப் பயிற்சி உடையோராய்த் திகழ்ந்தனர் என்பதை அறிந்து கொள்ளலாம். ஆனால் பண்டைக் காலந்தொட்டே தமிழகத்தில் வழங்கி வந்த மருத்துவ முறையானது ‘சித்த மருத்துவம்’ என்ற பெயரில்தான் வழங்கி வந்தது என்று கூறுவதற்கில்லை. ‘சித்த மருத்துவம்’ என்ற பெயரால் பிற்காலத்தில் அமைந்த மருத்துவ முறையின் முன்னோடி முயற்சிகளாக அவை அமைந்தன என்பதில் ஐயமில்லை.

# 4

# திருவள்ளுவரின் மருத்துவக் கோட்பாடு

மரு. கு. கணபதி

## முன்னுரை

திருவள்ளுவர் இயற்றிய நூல் தமிழ் மறையாகிய **திருக்குறள்**. திருவள்ளுவர் பற்றிய உண்மையான வரலாறு சரியாக கிடைக்காவிட்டாலும் 2000 ஆண்டுகட்டு முன் வாழந்து, திருக்குறளை எழுதியுள்ள திருவள்ளுவரையே நாம் முக்கியமான வராகக் கொள்ள வேண்டும்.

**திருக்குறளில்** *மருந்து* என்னும் அதிகாரத்தில் இவர் இயற்றியுள்ள பத்துத் திருக்குறள்களே மருத்துவத்தின் பெரிய விளக்கமாக அமைந்துள்ளன. இவர் நெசவுத் தொழில் செய்து வாழ்ந்தார் என்பர்.

மெய்யுணர்வாளர்கள் பலவும் அறிந்த நல்லறிவாளர்களாக இருப்பதோடு, மனக்கட்டுப்பாடும் நிறைந்தவர்களாக விளங்குவார்கள். அவர்கள் உள்ளத்தில் சாதி, மதம், இனம், மொழி நாடு போன்ற எத்தகைய வேறுபாட்டு உணர்வுக்கும் அணுவளவும் இடம் இருக்காது, இருக்கக் கூடாது. இத்தகையப் பெரியவர் களைத்தான் நிறைமொழி மாந்தர் என்கிறார் திருவள்ளுவர் பெருந்தகை. இத்தகைய நிறைமொழி மாந்தர்களின் பெருமையை அவர்கள் கூறிய, எழுதிய வாழ்வியல் உண்மைகளே காட்டிவிடும் என்பதை:

*நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து*
*மறைமொழி காட்டி விடும்* (குறள்–28)

என்னும் குறள்வழித் தெளிவு செய்துள்ளார்.

"யாதானும் நாடாமால் ஊராமால்" (குறள் – 397) என்னும் உணர்வோடு, தாம் சொல்லும் கருத்துகள் எல்லா மாந்தர்க்கும் பொதுவானவைகளாக அமைய வேண்டும் என்ற விரிந்து பரந்த மன உணர்வோடு திருவள்ளுவப் பெருந்தகை தம் நூலைப் படைத்ததனால்தான், திருக்குறள் நேற்றைக்கு, இன்றைக்கு நாளைக்கு என்றில் லாமல், என்றைக்கும் வழிகாட்டும் பேரொளியாக, பொதுமறையாகத் திகழ்ந்து வருகிறது.

திருக்குறளில் எல்லாத்துறைக் கருத்துகளும் கூறப்பட்டுளன. திருவள்ளுவரின் உள்ளத்தில் மருத்துவம் தொடர்பான கருத்துகளும் ஊடுருவி நின்றுள்ளதைக் காண முடிகின்றது.

மருந்து எனப் பார்க்கும் போது, சாவா மருந்து, எவ்வ நோய் (குருதி அழுத்தத்தின் காரணமாக மனச்சோர்வு முதலியன) தீர்க்கும் மருந்து, உறுதுயர் தீர்க்கும் மருந்து, பிணிக்கு மருந்து எனக் குறிப்புகள் வருவதோடு, 'தன் நோய்க்குத் தானே மருந்து' ஆகும் என்ற கருத்தும் உயிரினங்கள் பற்றிய குறிப்பும், மருந்து மரம் பற்றிய குறிப்பும், தேனோடு பால் கலந்து மருந்தாகும் என்ற குறிப்பும் இடம் பெற்றுள்ளன.

நோயாளியை உற்றான் (949), உற்றவன் (950) எனக் குறிப்பிடும் திருவள்ளுவர், அவரை மருத்துவத்தின் ஒரு பகுப்பாகவே குறிப்பிடுகின்றார். அத்துடன், தொழு நோயாளி, நோய் பரப்பும் பரத்தையர், மன நோயாளிகள், ஊனமுற்றோர் பற்றிய குறிப்புகள் குறளில் இடம் பெற்றுள்ளன. நோய் எனப் பார்க்கும் போது, ஏறத்தாழ 44 இடங்களில் 'நோய்' என்னும் சொல்லும், 6 இடங்களில் 'பிணி' என்னும் சொல்லும் இடம் பெற்றுள்ளன. நோய்க்கான காரணங்கள் எனப் பார்க்கும்போது, காற்று, பித்தம், சளி மிகல்–குறைதல், உணவின் மிகுதி–குறைபாடு, பசிக் கொடுமை, ஒவ்வாமை, புலால், சோம்பல், நீண்ட தூக்கம், மரபுவழி, தனக்குத்தானே நோய் செய்தல், மனநலம் குன்றல் முதலியவைத் தொடர்பாகக் குறிப்புகள் கிடைக்கின்றன. மேலும் சுற்றுச் சூழல் மாசுகள் தொடர்பாக நிலம், நீர், காற்று, மனிதரின் குறைபாடுகள் தொடர்பான மாசுகள் பற்றிய செய்திகள் கிடைக்கின்றன.

தீப்புண், விழுப்புண், செவிப்புண், ஊமைப்புண் பருசீழ்பிடித்தல், தாடை எலும்பு முறிவு போன்ற குறிப்புகளும் குறளில் இடம்பெற்றுள்ளன.

விபத்துகள் என்று பார்க்கும்போது 40 வகையான வெவ்வேறு விபத்துகள் பற்றியும், ஊனங்கள் எனப் பார்க்கும் போது, உடலால் ஊனமுற்றோர், உறுப்பிருந்தும் ஊனமுற்றோர், உள்ளத்தால் ஊனமுற்றோர் என்போரைப் பற்றிய குறிப்புகள் கிடைக்கின்றன. ஊனமுற்றோர் மேம்பாட்டுக்கான வழிவகை பற்றிய ஒரு சில குறிப்புகளும் இடம் பெற்றுள்ளன. மனநோய் பற்றிய அளவில் மனநோயரைச் சுட்டும்

பெயர்களும், பல்வேறு தீய செயல்களாலும், தீய பண்புகளாலும் மனிதர்கள் மனநோயர் ஆவது பற்றிய குறிப்புகளும், அந்த மனநோய்களிலிருந்து விடுபடுவதற்கான வழிமுறைகளும் திருக்குறளில் காணப்படுகின்றன. காமத்துப்பாலைப் பொறுத்த வரை, ஊடல், கூடல் பிரிதல் ஆகிய சூழல்களில் ஆடவர் மகளிர் மனநிலைகள் எவ்வெவ்வாறு அமையும் என்பதை உளவியல் பாங்கில் மிக நுட்பமாக வெளிப் படுத்தியுள்ளார்.

மருந்து, உணவு, சுற்றுச் சூழல் மாசு, மனநலம் ஆகிய நோக்கில் வருமுன் காப்பதற்கான வழிமுறைகளைச் சுட்டியுள்ளார். வருமுன் எச்சரிக்கை எடுக்கப் படுமானால், மரபுவழி நோய்களையும் முடங்கச் செய்துவிட முடியும் என்றும் வழிகாட்டியுள்ளார்.

உணவுக் கட்டுப்பாட்டினாலேயே உடலுக்கு நோய்கள் வராமல் பாதுகாத்துக் கொள்ள முடியும் என்பனவற்றைத் தெளிவாக விளக்கியுள்ளார்.

*நோய் நாடி நோய் முதல் நாடி அதுதணிக்கும்*
*வாய்நாடி வாய்ப்பச் செயல்* (948)

*உற்றான் அளவும் பிணியளவும் காலமும்*
*கற்றான் கருதிச் செயல்.* (949)

என்னும் குறள்கள் மூலம் நோய் அறியும் வழிமுறைகளைத் தெளிவாகக் கூறி யுள்ளார்.

உறுப்புக் கொடை, மூப்பியல், உடற்கூற்றியல், உடல் இயங்கியல், உயிர் வேதியியல், ஐம்புலக் கட்டுப்பாடு, ஒரு செயல் கூர்மைப்பட பிற செயல்களை முடக்கும் வகை, 'புலன்களின் கட்டுப்பாட்டால் பெறும் தனி ஆற்றல்கள், குருதி ஓட்ட இயக்கம், உணவு செரிமான இயக்கம், மூச்சுப் பாதை இயக்கம், கழிவு அகற்று இயக்கம், இனப் பெருக்க உறுப்புகள், தசை நரம்பு எலும்புத் தொகுதி இயக்கங்கள் முதலியன பற்றிய கருத்துகள் திருக்குறளில் ஓரளவு இடம் பெற்றுள்ளன.

மரபணுக்கள் பற்றிய சில தொடக்ககால "முளை" களைத் திருக்குறளில் காணலாம். முன்னோரின் பண்பு நலன்கள் குழந்தைகளுக்கும் இருக்கும் என்பது தெளிவு. உடல்அமைப்பு, உள்ள எண்ணம், பிற பழக்கங்கள் எல்லாம் கருவில் அமைந்தவாறே எனப் பிற சித்தர் நூல்களிலும் கூறப்பட்டுள்ளன.

திருக்குறள் ஒரு வாழ்வியல் பொது நூல், இந்நூலில் நிறைய மருத்துவக் கருத்துகள் பொதிந்துள்ளன. இவை பெரிதும் உவமைகள் வழியாகவும் உருவகங்கள்

வழியாகவும், வேறொரு பொருண்மைக்குரிய நிலையிலும் வெளிப்பட்டுள்ளன. ஒரு மருத்துவராக இல்லாத யார் ஒருவரும், இவ்வளவு மருத்துவம் சார்ந்த கருத்துகளை வெளிப்படுத்துவது இயலாத ஒன்று.

சித்தர் வரிசையில் திருவள்ளுவரைக் குறிப்பிடாவிட்டாலும், அவருடைய மருத்துவக் கருத்துகளைப் பார்க்கும் போது அவர் ஒரு "மருத்துவரல்லாத சித்த மருத்துவர்" எனக் கூறினால் அது மிகையாகாது.

திருவள்ளுவர் *மருந்து* என்ற அதிகாரத்தில் கூறியுள்ள 10 பாடல்களில், கீழ்க்கண்ட இரண்டு குறள்களுக்கு மட்டும் மருத்துவ ரீதியாக, விரிவான விளக்கத்தைப் பார்ப்போம்.

*நோய்நாடி நோய் முதல் நாடி அது தணிக்கும்*
*வாய்நாடி வாய்ப்பச் செயல்* (948)

நோயை இன்னதென்று கணிக்காமலோ, நோயின் காரணத்தை இன்னதுதான் என்றறியாமலோ செய்யக்கூடிய மருத்துவத்தை, "மருந்தாளுநர் மருத்துவம்" (Compounder Treatment) என்று கூறுவர். சித்த மருத்துவமும் அவ்வாறுதான் மருத்துவர்களால் கையாளப்பட்டு வருகிறதோ என்ற ஐயம் பலருக்கு உண்டு. ஆனால் மேல் குறிப்பிட்டக் குறள் ஒன்றே போதும், சித்த மருத்துவம் எவ்வளவு முழுமை யான மருத்துவம் என்பதனை அறிய. எந்தக் கருத்தையும் சுருங்கக்கூறி விளங்க வைப்பதில் வள்ளுவருக்கு நிகர் வள்ளுவரே என்றால் அதில் மாற்றுக் கருத்து இருக்க முடியாது. பலரும் குறளுக்கு விளக்கத்தை எழுதும் நிலையில், மருத்து வர்களால் உணரக்கூடிய விளக்கம் இந்தப் பாடலுக்கு என்ன என்பதனைப் பார்ப்போம்.

நம்மை இயற்கை வழியில் செல்லவிடாமல் தடுக்கும் சக்தி எதுவோ அதுவே நோயாகும். அது உள்ளத்தைப் பற்றியதாகவும் இருக்கலாம், உடலைப் பற்றிய தாகவும் இருக்கலாம்.

## நோய் நாடி

'நோய்நாடி' என்பது நோயைக் கணித்தல் ஆகும். அதாவது எந்த நோயினால் அவதியுறுகின்றார் என்பதை அறிவதாகும். நோயை எவ்வாறு அறியலாம் என்று பார்க்கும் பொழுது எண்வகைத் தேர்வை நினைவுகூர்தல் வேண்டும். அதாவது நா, நிறம், மொழி, விழி, ஸ்பரிசம், மலம், மூத்திரம், நாடி என்ற எட்டுவகைப் பரிசோதனைகளாகும்.

## 1. நா

நாவை மூன்று வழிகளில் பரிசோதிக்க வேண்டும். அவை:

### 1.1. நாவின் நிறம்

| | | |
|---|---|---|
| வாத நிறம் | – | கறுமை |
| பித்த நிறம் | – | மஞ்சள், சிவப்பு |
| கப நிறம் | – | வெள்ளை |
| தொந்த நிறம் | – | ஒன்றோடென்று கலந்த நிறம் |
| முக்குற்ற நிறம் | – | வாத, பித்த, கப நிறங்களில் தோன்றல் |

### 1.2. நாவின் குணம் அல்லது நாவின் தன்மை

மாப்படிந்துள்ளதா, புண்பட்டுள்ளதா, வளைந்து காணப்படுகிறதா, வழவழத்துக் காணப்படுகிறதா, நா வறட்சி அல்லது அதிகமாக நீர் ஊறல் உள்ளதா, நாவெடிப் புற்றுக் காணப்படுகிறதா, இலசுனவளர்ச்சி, பற்களின் நிலை போன்ற இன்னும் பல குணங்களை அறிதல் வேண்டும்.

### 1.3. நாவின் புலன்

சுவை நன்றாக இருக்கிறதா, சுவையின்றி இருக்கிறதா, சுவை மாறுபட்டுக் காணப்படுகிறதா (நச்சுத் தன்மைகளில் இவ்வாறு காணப்படுவது உண்டு என அறிதல் வேண்டும்).

## 2. நிறம் (மெய் நிறம்)

| | | |
|---|---|---|
| வாத நோயினன் உடல் | – | கறுத்தும் |
| பித்த நோயினன் உடல் | – | மஞ்சளித்தும் அல்லது சிவந்தும் |
| கப நோயினன் உடல் | – | வெளுத்தும் |
| தொந்ததோட நோயினன் (இரு குற்றக்கலப்பு உடல்) | – | கேடு அடைந்த குற்றத்திற்கு ஏற்ப இரு கலப்பு நிறத்துடனும் |

உதாரணமாக:

வாத, பித்த நோயினன் உடல் – கறுத்து மஞ்சளித்தும் அல்லது கறுத்துச் சிவந்தும் இருத்தலாகும்.

வாதம், பித்தம், கபம் ஆகிய மூன்றும் சேர்ந்த நோயினன் உடல் (சன்னிபாதம் அல்லது முக்குற்றம்) – பல நிறங்களையுடையதாயிருக்கும்.

உடலின் நிறத்தை வைத்துச் சாதலை அறியும் குறிப்புகளும் பிற சித்தர்களால் கூறப்பட்டுள்ளன.

## 3. மொழி

உரத்தஒலி, சமஒலி, குரற்கம்மல், சிரித்தல், பிதற்றல், சம்பந்தமில்லாத பேச்சு, பெருங்கூச்சல், வருந்திப்பேசல், கபத்தோடுடைய பேச்சு, மூச்சுத்திணறலுடன் பேசல் போன்றன.

## 4. விழி

விழியின் நிறம் – தோட நிறம்

விழியின் குணம் – 96 வகையான கண்ணோய்களில் ஏதேனும் உள்ளதா என அறிதல்.

புலன் – பார்வையறிதல்

## 5. ஸ்பரிசம்

மெய்யின் நிலை – தொட்டுப் பார்த்தல் முதலியன.

சூடாயிருத்தல், கொதித்தல், குளிர்ந்திருத்தல், சில இடங்களில் இரண்டும் இல்லாதிருத்தல், முழுவதும் சில்லிட்டிருத்தல், வியர்த்தல், மறத்திருத்தல், பிசுபிசுத்தல், தோலில் வெடிப்பு, மயிர்த்தடித்தல், உதிர்த்தல், சிலிர்த்தல், மூக்கு சில்லிடல், உடல் சுரசுரத்தல், தடித்தல், புடைகளுண்டாதல், பற்று ப்படைகள், கட்டிகள், சொறி, சிரங்கு, புண், புரை, வீக்கம் தேகம் இளைத்தல் அல்லது பருத்திருத்தல் முதலியவற்றை ஆராய்தலாகும்.

உடலின் நிலையை வைத்து அதாவது, குறிப்பிட்ட இடங்களில் வியர்வை உண்டாதல், துடித்தல் இது போன்ற குறி குணங்களால் சாதலையும் அறியலாம்.

## 6. மலம்

நிறம் சிவந்து (குருதி கலந்து) இருத்தல், வெளுத்துச் சலம் கலந்து இருத்தல்.

| | | |
|---|---|---|
| அளவு | – | மலக்கட்டு முதலியன |
| மணம் | – | நாற்றம் |
| பித்த குணம் | – | புளிப்பு மணம் |
| கப குணம் | – | துர்நாற்றம் |
| நுரை | – | நுரையுடன் மலம் கழிதல் (உஷ்ணம் – வாயு) |

## 7. மூத்திரம்

நீர்க்குறி நிறம், அளவு, மணம், நுரை, எஞ்சல் இவற்றை அறிய வேண்டும்.

| | | |
|---|---|---|
| நீர்க்குறி | – | வாதம் – அரவென நீளுதல் |
| பித்தம் | – | ஆழிபோல் பரவல் |
| கபம் | – | முத்தொத்து நிற்றல் |

## 8. நாடி

நோயைக் கணித்தலை உறுதிப் படுத்துவது நாடி முறையாகும்.

| | | |
|---|---|---|
| வாத நாடி | – | வாதத்தில் வாயு<br>உஷ்ணம்<br>சீதம் |
| பித்த நாடி | – | பித்தத்தில் வாயு<br>உஷ்ணம்<br>சீதம் |
| கப நாடி | – | கபத்தில் வாயு<br>உஷ்ணம்<br>சீதம் |

தொந்த நாடி, முக்குற்ற நாடி முதலியவற்றை அறிதல்.

## நோய் முதல் நாடி

நோயின் காரணத்தை அறிதலாகும்.

1. புறக்காரணம் தன் செயல்
   பிற செயல்
   தன்பிற செயல்
   செயல் மாறுதலால் உண்டாதல்
2. அகக்காரணம்
   உணவு வகைகள் – அறுசுவை அடிப்படையில்.

எல்லாச் சுவைகளும் ஐம்பூதச் சேர்க்கையால் உண்டாகின்றன.

| | | | | |
|---|---|---|---|---|
| மண் | + | நீர் | – | இனிப்பு |
| மண் | + | தீ | – | புளிப்பு |
| நீர் | + | தீ | – | உவர்ப்பு |
| வளி | + | தீ | – | கார்ப்பு |
| மண் | + | வளி | – | துவர்ப்பு |
| வளி | + | வெளி | – | கைப்பு |

*புளி துவர் மிஞ்சுங் கறியால்*
*பூரிக்கும் வாதம் செறி உவர் கைப்பேறில்*
*பித்து சீறும் கிளிமொழியே*
*கார்ப்பு இனிப்பு மிஞ்சில் கபம் மிகும்*
*சட்டிரத சேர்ப்புணரில் நோயணுகாதே*

என்பது பதார்த்த குண சிந்தாமணிப் பாடல்.

**வாத (வளி) நோயை உண்டாக்கும் சுவைகள் :**
கைப்பு, துவர்ப்பு, கார்ப்பு.

**பித்த நோயை உண்டாக்கும் சுவைகள்:**
கார்ப்பு, புளிப்பு, உவர்ப்பு.

**கப நோயை உண்டாக்கும் சுவைகள்:**
இனிப்பு, புளிப்பு, துவர்ப்பு, உவர்ப்பு.

உதாரணமாக

*வாத பந்தமலாது மூலம் வராது*
*குடல் தனிலே சீதமலாது சுரம் வராது*

போன்ற மூலக்குற்றங்களும் இதனுள்ளே அடங்கிவிடும்.

## வாய் நாடி

நோயைக் கணித்தபின் அதன் மூலகாரணத்தையும் அறிந்து, பின் நோயாளி அந்நிலையில் இருந்து குணம் பெறுவதற்கும், மருத்துவம் செய்வித்தலுக்கும் முன் மருத்துவம் செய்யப்போகும் முறையை முடிவு செய்தல் வேண்டும்.

| | | |
|---|---|---|
| விரேசனத்தால் | – | வாதம் தாழும் |
| வமனத்தால் | – | பித்தம் தாழும் |
| நசியம், ஆக்கிராணத்தால் | – | கபம் தாழும் |

என்ற அடிப்படைத் தத்துவத்தின் கீழ்த் தொடங்கல் வேண்டும்.

அதன் பின் தோன்றியுள்ள குறி குணங்களுக்கு, அதன் கேடுற்றக் குற்றத் தினைப் பொறுத்து என்ன மருத்துவம் செய்ய வேண்டும் எனத் தீர்மானித்தல் வேண்டும். அதன் பின் ஏழு உடற்கட்டுகளில் எந்தெந்த உடற்கட்டுகள் பாதிப்பு அடைந்துள்ளன என்பதை உணர்ந்து, அவற்றை நன்னிலைப்படுத்த, மருத்துவம் செய்விக்க முடிவெடுக்க வேண்டும் என்பதாகும். பொதுவாக மருத்துவ முறையை எதிர் உரை, ஒப்புரை, கலப்புரை என்ற ரீதியில் அமைக்கின்றோம். உதாரணமாக கழிச்சல் இருக்கிறதென்றால் எதிர் உரையில் கழிச்சலை நிறுத்துவதற்கான மருத்துவம் செய்தலாகும்.

ஒப்புரையில் கழிச்சலுக்கான காரணத்தை உணர்ந்து செரியாமையின் பொருட்டு உண்டாகியிருக்குமாயின், நன்றாகச் செரிப்பித்து மலத்தைக் கழிக்கக் கூடிய மருந்துகள் கொடுக்க வேண்டும்.

கலப்புரையில் நேர் மருந்தையும், ஒப்பு மருந்தையும் கொடுத்து மருத்துவம் செய்ய முடிவெடுத்தல் ஆகும்.

நோயளவு, நோயாளி அளவைப் பொறுத்து, மருத்துவர் மிகவும் கவனமாக இவ்வழிகளில் எதனைத் தேர்ந்தெடுக்க வேண்டும் என்பதனை முடிவு செய்ய வேண்டும்.

## வாய்ப்பச் செயல்

நோயைப் பொறுத்தும் நோயாளியைப் பொறுத்தும் மருத்துகளை நிர்ணயித்து மருத்துவம் செய்தலாகும்.

*வேர்பாரு தழைபாரு மிஞ்சினக்கால்*
*பற்ப செந்தூரம் பாரே*

என்ற அடிப்படையில் முதலில் மூலிகைகளினால் மருத்துவம் செய்விக்க முயல வேண்டும். இன்று மக்கள் உலோக, பாடாண மருந்துகளைச் சாப்படுவதில் பயமும், மூலிகை மருந்துகளைச் சாப்பிடுவதில் மகிழ்ச்சியும் கொண்டுள்ளார்கள். அக் காலத்திலும் இது வலியுறுத்தப்பட்டுள்ளது. மூலிகை மருந்துகளில் குணம் முழுமையும் ஏற்பட வழி இல்லை என்ற நிலையில் உலோக, பாடாண மருந்துகளை மருத்துவரின் எண்ணத்திற்கு ஏற்பப் பயன்படுத்த வேண்டும்.

மருத்துவ முறையில் மலத்தைத் கழிக்க முதலில் மருத்துவம் செய்விக்க வேண்டும் என்ற நிலையில், நோயாளியைப் பொருத்தும் (உடல் இலக்கணம்), காலத்தைப் பொறுத்தும், நோயைப் பொறுத்தும் (குற்ற அடிப்படையில்) என்ன வகையான மருத்துவத்தைக் கையாளலாம் என்பதை உணர வேண்டும். ஏனென்றால் மலத்தைக் கழிக்கக் குடிநீர், மாத்திரை, தைலங்கள் போன்ற மருந்துகள் உள்ளன. அடுத்து நோய்க்கான நேர் மருந்தைத் தேர்வு செய்தல் வேண்டும். அதற்குத் துணை மருந்து ஏதேனும் சேர்க்க வேண்டுமானாலும் சேர்க்க வேண்டும். உதாரணமாக வெளுப்பு நோயால் பாதிக்கப்பட்டவருக்கு மருத்துவம் செய்விக்கும் போது அயச்செந்தூரமோ அல்லது அன்னபேதிச் செந்தூரமோ கொடுக்கும் போது ஏதேனும் சூரணத்தைத் துணை மருந்தாகத் தேவைப்பட்ட குணத்திற்குத் தகுந்தாற்போல் கொடுத்தல் வேண்டும். மருந்துகளின் அளவு, நோயளவையும், நோயாளியின் அளவையும் பொறுத்துப் பொது அளவில் இருந்து தேர்வு செய்தல் வேண்டும்.

பத்தியம் நோய்க்காகவும், மருந்திற்காகவும் தேவைப்படுவதற்கு இணங்க நோயாளிகளுக்கு அறிவித்தல் வேண்டும். உணவில் நோய்க்குக் காரணமான சுவையுள்ள உணவுப் பதார்த்தங்களை நீக்கச் சொல்ல வேண்டும். உதாரணமாக கப நோயினால் பாதிக்கபட்ட நோயாளிகளுக்கு இனிப்பை (மண்+ நீர் = இனிப்பு, கபம்) நீக்கச் சொல்ல வேண்டும். அதுபோல் சேர்க்க வேண்டியவற்றைச் சேர்க்க வேண்டும்.

நோய் முதல் நாடலின் புறக் காரணத்தில், தன்செயல், பிறசெயல், தன்பிற செயல்களைப் பிரித்ந்தறிது பார்ப்பதினால் இவற்றைத் தவிர்த்து நோய் வராமலும்

தடுக்கலாம் என்பது அறியப்படுகிறது. எனவே இக்குறளின் மூலம் மருத்துவம் (இந்திய மருத்துவம் – தமிழர் மருத்துவம்) எவ்வளவு முழுமை பெற்ற மருத்துவமாக, வழக்கத்தில் மக்களுக்குப் பயன்படுத்தப்பட்டு வருகிறது என்பது தெளிவாகிறது.

இனி மருத்துவ முறையின் அடிப்படையைக் கூறுதலில் மணிமுடியாய்த் திகழும் மற்றொரு குறளைக் காண்போம்.

*உற்றான் அளவும் பிணியளவும் காலமும்*
*கற்றான் கருதிச் செயல்.*

## உற்றான் அளவு

### 1. உடலின் இலக்கணம் (Constitution of body)

உற்றான் – நோயுற்றான் முக்குற்றங்களை அடிப்படையாகக் கொண்ட உடலில், உணவு செயல்களால் இக்குற்றங்களுள் எது மிகுதிப்பட்டு வெண்ணீர் (சுக்கிலம்) சுரோணிதத்துடன் கலக்கின்றதோ அக்குற்றமே முதல் காரணமாய் இருந்து யாக்கையை அமைக்கும். அவ்வாறு அமைக்கப்பட்ட உடல், குற்ற மிகுதியின் பெயரால் வழங்கப்படும். எவ்வாறெனின் வளி மிகுதியால் உண்டான உடலை வளி உடல் என்றும் அழல் மிகுதியாலுண்டான யாக்கையை அழல் உடல் என்றும் ஐய மிகுதியால் உண்டான உடலை ஐய உடல் என்றும் கூறுகின்றோம். இம்மூன்று உடலும் முறையே அதம, மத்திம, உத்தம உடல் என்று வழங்கப்படும்.

எனவே நோய்க்கு மருத்துவம் செய்யும் முன் நோயாளி எந்த உடலினன் என்பதை உணர்ந்து அதற்குத் தகுந்தாற்போல் மருத்துவ முறையை அமைத்து மருத்துவம் செய்தல் வேண்டும்.

### 2. வயது

ஒருவரின் ஆயுட்காலம் 120 ஆண்டுகளாக நிர்ணயிக்கப்பட்டுள்ளது. இதனில் முதல் 40 ஆண்டுகள் வாத (வளி) காலம் (வளரும் நாட்கள்). அடுத்த 40 ஆண்டுகள் பித்த (அழல்) காலம் (தொடர்ந்து இருக்கும் நிலை). அடுத்த 40 ஆண்டுகள் ஐய (கப) காலம் (அனைத்தும் குறையும் காலம்) ஆகும். எனவே நோயாளி எந்தக் காலத்தில் இருக்கிறார் என்பதை மருத்துவம் செய்யுமுன் வயதை வைத்துக் கணித்து மருத்துவம் அமைத்தல் வேண்டும்.

## 3. உடல் வன்மை

உடல் வன்மை மூன்று வகைப்படும். அவை: இயற்கை வன்மை, கால வன்மை, செய்கை வன்மை என்பன ஆகும்.

### 3.1. இயற்கை வன்மை

தாய், தந்தையின் சுரோணித சுக்கிலத்தின் தன்மையில் கருவிலேயே இயற்கையில் அமைந்த வன்மையாகும் (Natural Immunity).

### 3.2. கால வன்மை

இது ஆண்டாலும் (வயது), பருவ காலங்களின் மூலமாகவும் உண்டாவதாகும்.

### 3.3. செய்கை வன்மை

முக்குணங்களின் (தமோ ரசோ, சத்வ) சேர்க்கையால் இயற்கையாக உண்டான உடலை, அந்தந்தக் குணத்தன்மைக்கு உரிய உணவுச் செயல்களாலும், உடற் கட்டுகளின் தன்மை கெடாவண்ணம் நிலை நிறுத்தக் கூடிய மருந்துகளாலும் காத்து, வளர்த்துக் கொள்ளுதலாகும் (Aquired Immunity). எனவே நோயினன் நோய்வாய்ப்பட்ட நிலையில் உடல் வன்மையின் நிலை என்ன என்பதை உணர்ந்து அதனை, வன்மைப் படுத்தக் கூடிய மருத்துவம் செய்வித்தல் வேண்டும்.

## 4. தொழில்

நோயினைக் கணிப்பதற்கும், மருத்துவம் செய்வதற்கும் நோயுற்றவனின் தொழிலை உணர்தல் வேண்டும். வெப்பம் சம்பந்தப்பட்ட தொழிற்சாலை போன்றவற்றில் பணிபுரிகின்றாரா ? அல்லது குளிர்ச்சித் தன்மை தரக்கூடிய அல்லது தூசி மற்றும் மணல் இருக்கக்கூடிய இடங்களில் பணிபுரிகின்றாரா ? என்பதை உணர வேண்டும்.

## 5. பண வரவு

பண வரவிற்கும் உடல் வன்மையைப் பெருக்குவதற்கும் சம்பந்தம் உண்டு. எனவே அவரின் வரவு நிலை என்ன என்பதை உணர்தல் வேண்டும்.

## 6. மதம் மற்றும் பண்பாடு

மதம் சார்பான பண்பாட்டை அல்லது பழக்கவழக்கங்களை உணர்ந்து மருத்துவர் செயல்பட வேண்டும். உதாரணமாக முஸ்லிம் மதத்தினர் ஆண் குறியின் முன் தோலை அறுவை மூலம் நீக்கிடும் பழக்கம் இருப்பதனால் அவர்களுக்குச் சிறுநீர் நோய்கள், ஆண்குறி நோய்கள் தவிர்க்கப்படுகின்றன. எனவே அதனையும் மருத்துவர் அறிதல் வேண்டும்.

## 7. உணவுப் பழக்கவழக்கம்

வளி, அழல், ஐய நோய்கள் உண்டாதற்குரிய காரணங்கள் உணவுதான். ஐம்பூதத்தின் அடிப்படையில் அழல், ஐயம் ஆகிய இவற்றில் ஏதேனும் ஒன்றையோ அல்லது இரண்டையோ கூட்டுவதற்கோ, அடுத்த குற்றத்தைக் குறைப்பதற்கோ வழியுண்டு. சில நோயாளிகள் சில குறிப்பிட்டச் சுவையை விரும்பி உண்பார்கள். அப்படி இருக்கக்கூடிய நிலையை மருத்துவர் உணர வேண்டும். அதனை அறிந்து அந்தக் குறிப்பிட்ட சுவை பொருந்திய உணவுப் பதார்த்தங்களை நீக்கச் சொல்லி அறிவுறுத்த வேண்டும்.

## 8. முக்குற்றம்

| | | | | |
|---|---|---|---|---|
| மண் | + | நீர் | – | ஐயம் (கபம்) |
| தீ | – | அழல் (பித்தம்) | | |
| வளி | + | வெளி | – | வளி (வாதம்) |

## 9. அறுசுவை

| | | | | |
|---|---|---|---|---|
| மண் (பிருதிவி) | + | நீர் (அப்பு) | – | இனிப்பு |
| மண் | + | தீ (தேயு) | – | புளிப்பு |
| நீர் | + | தீ | – | உவர்ப்பு |
| வளி (வாயு) | + | தீ | – | கார்ப்பு |
| மண் | + | வளி | – | துவர்ப்பு |
| வளி | + | வெளி (ஆகாயம்) | – | கைப்பு |

எனவே நோயுற்றவனின் உணவுப் பழக்க வழக்கங்களைக் கண்டறிதல் முக்கியமாகும். இன்னும் பல உறவினர் நிலை, நோயாளியின் உணர்வு நிலை போன்றவற்றை உணர்தல் வேண்டும்.

## பிணி அளவு

நோயைக் கணித்து, அந்நோயின் நிலையை ஆரம்ப நிலை, இடை நிலை, நாள்பட்ட நிலை, தீவிர நிலை ஆகியவற்றைப் பிரித்துணர வேண்டும். இவற்றிற்கு நோயாளி தனி நோயால் பாதிக்கப்பட்டுள்ளாரா அல்லது தொடர் நோயினால் பாதிக்கப்பட்டுள்ளாரா (தனிக் குற்ற நிலை அல்லது இரு குற்றக் கலப்பு நிலை அல்லது முக்குற்றக் கலப்பு நிலை) எனக் கணிக்க வேண்டும்.

இதுவன்றி நோயின் நிலையைப் பொறுத்துத் தீரும் நிலை, தீரா நிலை அல்லது அரிதில் தீரும் நிலை ஆகியவற்றை அறிந்து கொள்ள வேண்டும். ஏனென்றால் நோயின் இந்நிலை ஒவ்வொன்றுக்கும் தக்கவாறு தீவிர சிகிச்சை மற்றும் தேர்வு செய்யும் மருந்துகள் ஆகியவை மாறுபட்டு அமைகின்றன.

பிணியாளியின் நிலையை நா, நிறம், மொழி, விழி, ஸ்பரிசம், மலம், மூத்திரம், நாடி ஆகிய எண்வகைத் தேர்வினால் கண்டறிய வேண்டும். உதாரணமாக நாடியில் தீராக் குறியைக் குறிப்பிடும் போது வளி, அழல், ஐய நாடிகள் ஒன்று சேர்ந்து விட்டிலைப் போலத் துடிக்கும் எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. எனவே பிணியின் அளவை நன்குணர்ந்து மருத்துவ முறையை அமைத்தல் வேண்டும்.

## 1. காலம்

சிறுபொழுது, பெரும்பொழுது எனக் காலத்தை இரண்டு பெரும் பிரிவுகளாகப் பிரிக்கலாம்.

சிறுபொழுது : ஒரு நாள் ஆகிய 24 மணி நேரத்தைக் குறிப்பதாகும். காலை 6 மணி முதல் மாலை 6 மணி வரை உள்ள காலத்தில், காலையில் – வளி (வாதம்) மிகும் எனவும், மதியம் – அழல் (பித்தம்), மாலையில் – ஐயம் (கபம்) ஆகியன கூடும் எனவும் கூறப்பட்டுள்ளது.

பெரும்பொழுது : பன்னிரண்டு திங்கள் கொண்ட ஓர் ஆண்டு 6 பருவ காலங்களைக் கொண்டது. பருவ காலங்கள் ஒவ்வொன்றிலும் மூன்று குற்றங் களின் நிலை என்னென்ன என்பதை உணர்ந்து செயல்பட வேண்டும்.

## 2. முக்குற்ற நிலை

| | | |
|---|---|---|
| கார் காலம் | – | வளி வேற்றுநிலை வளர்ச்சி – அழல் தன்னிலை வளர்ச்சி |

| | | |
|---|---|---|
| கூதிர் காலம் | – | வளி தன்னிலையடைதல் – அழல் வேற்றுநிலை வளர்ச்சி |
| முன்பனி | – | அழல் தன்னிலையாதல் |
| பின்பனி | – | ஐயம் தன்னிலை வளர்ச்சி |
| இளவேனில் | – | ஐயம் வேற்றுநிலை வளர்ச்சி |
| முதுவேனில் | – | வளி தன்னிலை வளர்ச்சி – ஐயம் தன்னிலையடைதல் |

மேற்கூறியவாறு வளி முதலிய குற்றங்கள் கால இயல்பால் தன்னிலை வளர்ச்சி, வேற்றுநிலை வளர்ச்சி ஆகியவற்றை அடையக் கூடியவையாயிருப்பினும் அவை உணவு முதலிய காரணங்களால், அக்காலங்களில் அங்ஙனம் அடையாமல் வேற்றுமைப்படவுங்கூடும்.

இருந்தாலும் பருவ காலத்தின் அடிப்படையில், முக்குற்றங்களின் நிலை அறிந்து மருந்தினைத் தேர்வு செய்ய வேண்டும். உதாரணமாக வளியின் நிலைக்கு எண்ணெய் வடிவ மருந்துகளும், அழல் நிலைக்குக் குடிநீர் வடிவ மருந்துகளும் ஐய நிலைக்குச் சூரணம் (பொடி), மாத்திரை வடிவ மருந்துகளும் சிறப்பானவையாகும்.

இதுவன்றி மருந்துண்ணும் காலம் சாப்பாட்டிற்கு முன்பா, பின்பா, அதி காலையில் சாப்பிட வேண்டுமா அல்லது இரவு படுக்குமுன் சாப்பிட வேண்டுமா என்ற காலத்தையும் நிர்ணயிக்க வேண்டும். ஏனென்றால், மலம் கழிப்பதற்கான மருந்துகளைப் பொதுவாக இரவில் படுக்கும் முன்போ அல்லது அதிகாலையிலோ வழங்க வேண்டியது அவசியமாகும், மேலும் கொடுக்கக் கூடிய மருந்தின் கால அளவு எவ்வளவு நாட்களுக்குக் கொடுக்கப்படவேண்டும் என்பதை அறிந்து கொடுக்க வேண்டும். அடுத்ததாக மருந்தின் கால அளவு அதாவது மருந்தின் ஆயுள் நாட்களுக்கு மேல் பயன்படுத்தக்கூடாது.

எனவே மேற்குறிப்பிட்டக் காலத்தை உணர்ந்து மருந்துவம் செய்வித்தல் மிக முக்கியமானதாகும்.

## கற்றான் கருதிச் செயல்

கற்றான் என்றால் இங்கு மருத்துவத் துறைக்குக் கற்றவர்களையும் பரம்பரை மருந்துவர்களையும் மட்டுமே வள்ளுவர் குறிப்பிடுவதைப் போல் இருக்கிறது. அது

மட்டுமன்று அவ்வாறு கற்ற மருத்துவர்களாலேதான் உற்றான் அளவு, பிணி அளவு, காலம் ஆகியவற்றை நன்கு அறிந்து மருத்துவம் செய்ய முடியும் என அறிவுறுத்துகின்றார். ஒரு மருத்துவ மாணவனுக்கு, ஒரு மருத்துவப் பேராசிரியர் பயிற்றுவிப்பதைப் போல.

ஆனாலும் நடைமுறையில் படித்தவர், படிக்காத்வர், அறிந்தவர், அறியாதவர் எல்லோருமே மருத்துவம் செய்கிறார்கள். இது தவிர்க்கப்பட வேண்டும்.

திருவள்ளுவர் மருத்துவத் துறைக்குரிய நோயின் வகை, நோய்க்குரிய மருந்துகள், மருந்தின் சேர்மானங்கள், மருந்து செய்முறை முதலிய செய்திகளை விவரிக்கவில்லை. ஆனால் எக்காலத்திற்கும் உரிய வகையில் மருத்துவத் துறைக்கான அடிப்படை அறக்கோட்பாட்டை வகுத்து, மருத்துவ உலகிற்கு வழிகாட்டியாய்த் திகழ்கின்றார் என்பதில் ஐயமில்லை.

5

# சித்தர் அறிவியல்

மரு. கி. நடராசன்

## முன்னுரை

அறிவியல் அல்லது விஞ்ஞானம் என்ற சொல் சயன்ஸ் (Science) என்ற ஆங்கிலச் சொல்லின் தமிழாக்கம். ஒரு பொருளைப் பற்றி ஆராய்ந்து, முறைப் படுத்தி, மற்றோர் ஒப்புக்கொள்ளும் வண்ணம் செப்பனிடப்பட்ட எத்துறையைச் சார்ந்த செய்திகளும் அறிவியலின் பாற்பட்டதேயாகும்.

எடுத்துக்காட்டாக, அளவை நூல் (Logic) என்பதும் அறிவியலாகவே கருதப் படுகிறது. அதைப் போலவே, அலோபதி மருத்துவம், சித்த மருத்துவம் ஆகிய மருத்துவங்களும் அறிவியலின் பாற்பாட்டவையே ஆகும்.

தற்போது "ரேஷனல்" (Rational) என்ற சொல்லாட்சி முறைப்படுத்தப்பட்ட எல்லாத்துறைகளுக்கும் பயன்படுத்தப்படுகிறது. "ரேஷனல்" என்ற ஆங்கிலச் சொல்லுக்குக் காரணத்தோடு விளக்கும் சக்தி கொண்ட (having the power of reasoning) என்பது பொருள்.

ஒவ்வொரு மருத்துவத் துறையும் அதனதன் அடிப்படைத் தத்துவங்களைக் கொண்டு, காரணத்தோடு விளக்கும் சக்தி கொண்டவையாகும். எல்லா அறிவியல் நூல்களையும் நவீன அறிவியல் அடிப்படையில் மட்டுமே விளக்க வேண்டும் என்பது நடைமுறையில் இயலாத காரியம். எடுத்துக்காட்டாக, உயிரைப் பற்றித் திருமூலர் சொல்லும் கருத்துகளை நவீன அறிவியல்படி நிரூபிக்க முடியாது. உயிரை நேரடியாக நவீன அறிவியலும் பார்க்க முடியாது. எனவே பார்க்க முடியாவிட்டாலும், ஊகித்தறிய முடிகின்றவற்றையும் ஒப்புக் கொள்வது சித்த அறிவியல். கொடுக்கப்பட்ட சித்த

மருந்துகளின் பலனை, நோயாளியின் நோய் தீர்ந்த நிலையைக் கொண்டும், நாடி, குறி குணங்களைக் கொண்டும் ஊகித்தறிவது சித்த அறிவியலாகும்.

அறிவு, இயல் என்ற இரண்டு சொற்களின் கூட்டு அறிவியல் எனப்பட்டது. இயல் என்ற சொல்லுக்கு ஒத்திருத்தல் என்ற பொருளுண்டு. எனவே அறிவோடு ஒத்திருத்தல் அறிவியலாகும். சித்தாந்தத்தில் அறிவு என்ற சொல் ஆன்மா அல்லது உயிரைக் குறிக்கும். ஏனெனில், உடம்பில் உள்ள கருவிகளையும், தத்துவங்களை யும் துணையாகக் கொண்டு எல்லாவற்றையும் அறிந்து செயல்படும் ஆற்றல் மிக்கது ஆன்மாவாதலால், ஆன்மா அறிவு என்ற சொல்லால் சித்தர்களால் குறிக்கப்பட்டது.

இவ்வுலகிலுள்ள பொருள்களை இறைவன் படைத்தது ஆன்மாவுக்காகத்தான். உலகில் உள்ள பொருள்களைத் துணையாகக் கொண்டு அனுபவம் பெறும் பொருட்டே உலகில் உள்ள பொருள்கள் படைக்கப்பட்டன. உணவு, உடைகள் முதல் மற்ற நவீன அறிவியல் கண்டுபிடிப்புகள் வரை அனைத்தும் உயிர்களின் அனுபவத் திற்காகத்தான் இருக்கின்றன. எனவே அறிவாகிய ஆன்மாவின் இயல்தான் அறிவியல். ஆன்மாவாகிய உயிர் அறிந்து கொள்ளும் எல்லாமே அறிவியல்தான்.

## தமிழர் அறிவியல்

“ஆயகலைகள் அறுபத்து நான்கினையும் ஏய உணர்விக்கும் என்னம்மை” என்ற பாடல் வரிகளுக்கிணங்க, தமிழ் அறிஞர் அறுபத்து நான்கு கலைகளை உண்டாக்கி, ஒழுங்குபடுத்தி உலகுக்குக் கொடுத்திருக்கின்றனர். அவையாவன : 1) எழுத்தியல்பு, 2) எழுது ஞானம், 3) கணிதம், 4) முதனூல், 5) பூர்வ கதை (புராணம்), 6) இலக்கணம், 7) நீதி நூல், 8) சோதிடம், 9) அறநூல், 10) யோக நூல், 11) மந்திர நூல், 12) நிமித்த நூல், 13) சிற்ப நூல், 14) மருத்துவ நூல், 15) உருவ நூல் (சாமுத்திரிகம்), 16) பழங்கதை (இதிகாசம்), 17) காப்பியங்கள், 18) அணியிலக்கணம், 19) சொற்பொழிவு, 20) நாடகம், 21) நடனம், 22) ஒலிக்குறி நூல், 23) வீணை நூல், 24) குழல் நூல், 25) பறை முழக்கம் (மிருதங்கம்), 26) தாள நூல், 27) வில்வித்தை, 28) பொன்னின் தேர்வு, 29) இரதப் பயிற்சி, 30) யானைத் தேர்வு, 31) குதிரைத் தேர்வு, 32) நவரத்தினத் தேர்வு, 33) நிலக் கூறு (Geology), 34) போர் இலக்கணம், 35) மற்போர், 36) ஆவிகளை அழைத்தல், 37) ஆவிகளை அகற்றல் மற்றும் ஏவல், 38) மந்திரத் தின் மூலம் பகை மூட்டல், 39) கொக்கோக நூல், 40) மயக்குதல், 41) வசியம் செய்தல், 42) இரசவாதம், 43) கந்தர்வ வாதம், 44) பிராணிகளின் மொழி, 45) கவுத்தக வாதம், 46) நாடி நூல், 47) நஞ்சு போக்கும் மந்திரங்கள், 48) நட்டத்தை சோதிடத்தால் சொல்வது, 49) கைரேகை நூல், 50) ஆகாயத்தில் மறைதல், 51) ஆகாயத்தில் பறத்தல், 52) கூடுவிட்டுக் கூடு பாய்தல், 53) தன்னை மறைத்தல், 54) சாலவித்தைகள்,

55) விண்ணிலும் மண்ணிலும் அதிசயம் காட்டல், 56) தீயைக் கட்டல், தீ மேல் நடத்தல், 57) நீர்மேல் நடத்தல், 58) காற்றை நிறுத்தல், 59) கண்கட்டு வித்தை, 60) வாயைக் கட்டல், 61) விந்துவைக் கட்டல், 62) பொருள்களை மறையச் செய்தல், 63) ஆயுதங்களால் காயம் உண்டாகாதபடி செய்தல், 64) ஆன்மாவை எந்த அவத்தையிலும் நிறுத்தல்.

மேற்சொன்ன அறுபத்து நான்கு வகைக் கலை சார்ந்த நூல்களும் தமிழகத்தில் இருந்தன. ஆனால் காலப்போக்கில் பெரும்பாலான நூல்கள் அழிந்துவிட்டன. ஆடிப்பெருக்கில் விடப்பட்டவை, நெருப்பிற்கும், மண்ணிற்கும் இரையானவை. வேற்று நாட்டினர் படையெடுப்பால் கொள்ளை போனவை எனப் பல்லாயிரக்கணக்கான ஏடுகள் மறைந்தன.

தற்போது, ஜெர்மனி, இங்கிலாந்து முதலிய வெளிநாடுகளில் பல்லாயிரக் கணக்கான ஏடுகள் இருப்பதாக அறிகிறோம். தற்போது நம் கைவசமிருக்கும் ஏடுகளையும், நூல்களையும் வைத்துத்தான் ஆய்வுகள் நடத்தப்படுகின்றன. மேற்கூறிய அறுபத்து நான்கு கலைகளும் முறைப்படுத்தப்பட்டு, அவற்றால் மக்களுக்கு பயன் உண்டு என நிரூபிக்கப்பட்டதால்தான் அவற்றை அறிவியலின் பாற்பட்டன எனக் கூற முடிகிறது.

## சித்த மருத்துவம்

சித்த மருத்துவம் என்றால் என்ன? என்ற கேள்வி பல்லாண்டுகளாகக் கேட்கப்பட்டு வரும் கேள்வி. 'சித்' என்றால் அறிவு. 'சித்தம்' என்றால் மனம். அலைபாயும் தன்மையுடைய மனத்தை அறிவின் துணைகொண்டு நிலை நிறுத்தி, பேரறிவாகிய பதியைக் காணுகின்ற சக்தி 'சித்து' எனப்படும். அந்தச் சித்தியை அடைந்தவர் 'சித்தர்' ஆவர். அவர்களால் கண்டுபிடிக்கப்பட்ட மருத்துவ முறை 'சித்த மருத்துவம்' என அழைக்கப்படுகின்றது.

சித்தர்களின் கூற்றுப்படி, பிறவியின் நோக்கமே வீடுபேறு அடைவதாகும். அதற்காகச் சித்தர்கள் யோகங்களைச் செய்கின்ற போது ஆரம்பத்தில் உடலுக்குச் சில உபாதைகள் தோன்றக் கூடும். அவற்றிற்காகவும், மனித இனத்தின் நன்மைக் காகவும், இயற்கையை நன்கு ஆராய்ந்து மருத்துவ முறை ஒன்றை மக்களுக்குத் தந்திருக்கின்றார்கள். எல்லாமே, அறிவாகிய உயிரின் மேம்பாட்டுக்காகத்தான் என்பதைச் சித்தர்களின் நூல்களைப் படித்தால் நன்கு உணர முடியும்.

## அறிவு

அறிவு என்பது ஆன்மாவாகிய உயிருக்குச் சித்தர்கள் வைத்த பெயராகும். உடம்பிலுள்ள கருவிகளையும் தத்துவங்களையும் கருவியாகக் கொண்டு அனைத்தையும் அறிவது ஆன்மாவாதலால் இதற்கு அறிவு எனச் சித்தர்கள் பெயர் சூட்டினார்கள். அறிவாகிய ஆன்மாவை மையமாகக் கொண்டே சித்தர்களின் தத்துவமும், மருத்துவமும் உருவாக்கப்பட்டுள்ளன.

## மனம்

சித்தர்கள் கூறிய 96 தத்துவங்களில் மனமும் ஒன்று. மனம் என்று எதனைக் கூறுவது ? உடலிலுள்ள கருவிகளில் மூளையையும் புலன்களையும் சார்ந்து, அறிவாகிய உயிர் உண்டாக்கும் ஒரு தத்துவமே மனம் எனக் கொள்ளப்படுகிறது. ஏனெனில், அறிவுக்கும் நினைவுக்கும் மூளையும் புலன்களுமே கருவிகளாகுமென எடுத்துக்கொள்வோம்.

யோகப் பயிற்சிகள் பற்றிய நிலையங்கள் உலகம் முழுவதும் பரவிக் கிடக்கின்றன. யோகப் பயிற்சிகளைச் செய்யும்போது உடலிலும், மனத்திலும் உண்டாகும் மாற்றங்களை நவீன அறிவியலின் துணைகொண்டு நிரூபித்து வருகிறார்கள்.

## சித்தர் அணுக்கொள்கை

"டால்ட்டன்" என்ற மேனாட்டறிஞர் அணுவைப் பற்றிய நவீன அறிவியல் கருத்துகளைக் கூறியுள்ளார். தமிழ்ச் சான்றோர்களும் அணுவைப் பற்றிச் சொல்லி இருக்கிறார்கள். திருக்குறளுக்குச் சாற்றுக்கவி பாடிய ஔவையார் :

*அணுவைத் துளைத் தேழ் கடலைப் புகட்டிக்*
*குறுகத்தறித்த குறள்*

எனக் கூறியிருப்பதால், அணுவைத் துளைக்க முடியும் என்ற அறிவு தமிழ்நாட்டில் நிலவி வந்துள்ளது.

## திருமூலரின் அணுக்கொள்கை

**திருமந்திரத்தில்** அணுக்கொள்கை பற்றிப் பல பாடல்கள் உள்ளன. இவ்வுலகிலுள்ள பொருள்களில் ஏதாவதொன்றை இறுதிவரைப் பிளந்து கொண்டே போனால், இனிமேல் பிளக்க முடியாத நிலைக்கு வந்து நிற்கும் மிக நுண்ணிய

துணுக்கே அணுவாகும். அணுவுக்குள் பல கோடி மெய்கள் உள்ளதாகச் சித்தர்கள் கண்டறிந்து கூறியிருக்கிறார்கள். அவற்றில் நாம் அறிந்து கொள்ள வேண்டியவை பதி, பசு, பாசம் என்ற மூன்றாகும். சித்தர் அணுக்கொள்கைப்படி பதிக்கும், பசுவுக்கும் இடையில் இடையறாது பாசம் சுற்றிக் கொண்டிருக்கிறது. இதனையே நவீன அணுக் கொள்கையில், நியூட்ரான் (Neutron) மற்றும் புரோட்டான் (Proton) என்ற இரண்டுக்குமிடையில் எலக்ட்ரான் (Electron) என்பது இடையறாது சுற்றிக் கொண்டிருப்பதாகக் கூறப்படுகிறது. எனவே அணுக்கொள்கை என்பது சித்தர்களால் நன்கு அறியப்பட்டதாகும்.

## சித்தர்கள் தத்துவம் 96

அணுவிற்குள்ளே இருக்கின்ற பசு எனப்படும் ஆன்மா, பாசம் எனப்படும் அறிவற்ற சடப்பொருள் ஆகிய இரண்டையும் மேலாண்மை செய்கின்ற தத்துவங்கள் 96 எனச் சித்தர்கள் கூறியிருக்கிறார்கள். அவற்றில் முதல் தத்துவமாகிய பூதங்களைப் பற்றி முதலில் ஆராய்வோம்.

## பஞ்ச பூதங்கள்

மிகப் பழமை வாய்ந்த தொல்காப்பியம் என்ற நூலிலும், புறநானூறு என்ற நூலிலும் ஐந்து பூதங்கள் பற்றிக் கூறப்பட்டுள்ளன. உலகிலுள்ள எந்தப் பொருளும் கீழ்க்கண்ட நான்கு உருவத்தில்தான் காணப்படுகின்றன. அவை :

1. பருப் பொருள் (மண்)
2. நீர்ப் பொருள் (நீர்)
3. சூடு, சக்தி, ஒளி (தீ)
4. வாயுப் பொருள் (வளி, காற்று)

மேற்சொன்ன நான்கு வகைப் பொருள்களுக்கும் இடம் தருவது ஆகாயம் அல்லது விண் என்ற இடைவெளியாகும். எனவே, பூதங்கள் மொத்தம் ஐந்து. இந்த ஐந்து பூதங்களும் அண்டமாகிய பெருவெளியிலும், பிண்டம் எனப்படும் உடம்பிலும் இருக்கின்றன.

## தொல்காப்பியத்தில் பஞ்ச பூதங்கள்

"நிலம், நீர், தீ, வளி விசும் போடைந்தும் கலந்த மயக்கம் உலகம் ஆதலின்" என்ற தொல்காப்பியச் சூத்திர வரிகளால், ஐந்து பூதங்கள் பற்றிய அறிவும் தொல்காப்பியர் காலத்துக்கு முன்பே தமிழர்களுக்கு இருந்தது என்பது புலனாகிறது.

இந்த உலகம், மேற்கூறிய மண், நீர், தீ, காற்று, ஆகாயம், ஆகிய ஐந்து பொருள்களின் கூட்டால் உண்டானது என்பதே சித்தர் கொள்கை "ஐந்தும் கலந்த மயக்கம்'' எனக் கூறப்பட்டிருப்பதால், எந்தப் பொருளிலும் மேற்கூறிய ஐந்து பூதங்களையும் தனித்தனியாகக் காண இயலாது. மயக்கம் என்பது தெளிவற்ற நிலை. ஐந்து பூதங்களால் ஆன பொருள்கள் எதிலும் ஐந்து பூதங்களையும் தனித் தனியாகக் காண இயலாது. ஆனால் பொருள்கள் அனைத்திலும் ஐந்து பூதங் களும் கலந்திருக்கின்றன என்பது உண்மை. இதனை ஒரு எடுத்துக் காட்டின் மூலம் விளக்க முடியும்.

சாதாரணமான ஒரு கல்லை எடுத்துக் கொள்வோம். அந்தக் கல் பருமையும், எடையும் உடையதால் அதற்கு மண்ணின் தன்மை உண்டு. பல அணுக்கள் சேர்ந்துதான் அக்கல் உண்டாகியிருக்கிறது. அந்த அணுக்களை ஒன்று சேர்த்துப் பிடித்து வைப்பதற்கு ஒரு பற்று–பசை அல்லது நீர்த்தலம் அதனுள் இருக்க வேண்டும். இல்லையெனில், அந்த அணுக்கள் ஒன்று சேர்ந்து இருக்க முடியாது. எனவே, நீரின் தன்மையும் அக்கல்லினுள் உள்ளது.

ஒவ்வொரு அணுவுக்குள்ளும் இடைவெளி இருக்கிறது. ஒவ்வொரு அணுவுக்கு இடையிலும் இடைவெளி இருக்கிறது. எனவே, ஆகாயம் என்ற பூதமும் அக்கல்லினுள் உள்ளது.

இடைவெளியில் காற்றும் கொஞ்சம் இருக்க வேண்டும். அதனால் அக்கல்லினுள் வாயுவும் உள்ளது.

அக்கல்லினுள் இயற்கையாகவே உள்ளுறை வெப்பம் (Latent heat) இக்கின்றதென்று நவீன அறிவியலும் ஒப்புக் கொள்கிறது. எனவே அக்கல் ஐந்து பூதங்களால் ஆனது என்பதில் ஐயமில்லை. ஆனால் ஏதாவது ஒரு பூதம் மிகுதியாகவும் மற்றவைக் குறைவாகவும் இருக்கும்.

இனி புறநானூற்றுப் பாடலிலுள்ள ஐம்பூதக் கருத்துக்களின் அறிவியலைப் பார்ப்போம்.

*மண்டிணிந்த நிலனும்*
*நிலனேந்திய விசும்பும்*
*விசும்புதை வருவளியும்*
*வளித்தலையிய தீயும்*
*தீ முரணிய நீருமென்றாங்கு*
*ஐம்பெரும் பூதத்து இயற்கைபோல.*

நிலன் என்பது பூமியைக் குறிக்கும். மண்டுதல் ஏன்றால் மேலும் சேர்வது எனப் பொருள்படும். மேலும் மேலும் பொருள்களைத் திணித்தால் அது பகுத்துவிடும். அதைப்போல் பருமையடைந்தது இந்த பூமி. எனவே பருப்பொருள்கள் யாவும் மண்ணின் தன்மையைக் கொண்டவை எனக் கொள்ளப்படுகின்றன.

இம்மண்ணுலகின் மேல் விரிந்து, பரந்து கிடப்பது விசும்பு எனப்படும் ஆகாயமாகும். பூமி, அவ்வெளியைத் தாங்கிக் கொண்டிருப்பது போல் ஒரு தோற்றம் தென்படுகிறது.

விசும்பாகிய ஆகாயத்தில்தான் காலப்போக்கில் காற்று உண்டானது என்பது அறிவியலார் கொள்கை. அவ்வாறு உண்டான காற்று அங்குமிங்கும் அலையும் தன்மையுடையதாகவுள்ளது. எனவே ஆகாயம் உதைத்துக் காற்று நகர்வது போல் தோன்றும்.

“வளித்தலையிய தீயும்” என்ற தொடருக்குக் காற்றினின்றும் கொடுக்கப்பட்ட நெருப்பு என்று பொருள். அறிவியல் கருத்துகளின்படி நெருப்பு எரிவதற்கு ஆதாரமான உயிர்க்காற்றும் (Oxygen), பட்டென்ற ஒலியுடன் எரியக் கூடிய நீர்வாயுவும் (Hydrogen) நெருப்பின் தன்மை கொண்டவை எனக் கூறலாம்.

“தீ முரணிய நீரு மென்றாங்கு” என்ற தொடருக்கு நெருப்பு மாறிய நீர் எனப் பொருள் கொள்ளலாம்.

அதாவது நெருப்பிற்கு ஆதாரமான பிராண வாயுவும் (Oxygen), நீர் வாயுவும் (Hydrogen) மாறுபட்ட விகிதங்களில் ஒன்று சேர்ந்து நீர் உண்டாகிறது என்பதை மேற்சுட்டிய அடி சுட்டிக் காட்டுகிறது. அறிவியல் அடிப்படையில் $H_2O$ என்பது நீருக்குரிய குறியீடு. எனவே, தமிழர்கள் ஐம்பூதக் கொள்கையிலேயே அறிவியலை உணர்த்தி இருக்கிறார்கள்.

மேலும் உலகிலுள்ள எந்தப் பொருளும் கீழ்க்கண்ட ஐந்து நிலைகளில்தான் காணப்படுகின்றன. அவையாவன :

1. பருப்பொருள் (மண்)
2. நீர்ப்பொருள் (நீர்)
3. சூடு, ஒளி, சக்தி (தீ)
4. வாயுப்பொருள் (வாயு)
5. இடைவெளி (ஆகாயம்)

ஆகாயம் என்ற இடைவெளி ஒவ்வொரு அணுவிலும், பொருளிலும் இருக்கிறது. எனவே மேற்கூறிய பூதங்கள் அனைத்தும் அண்டத்தில் இருக்கின்ற அத்தனைப் பொருட்களிலும் இருக்கின்றன என்பது தெளிவு.

மேற்கூறிய ஐந்து பூதங்களும் பிண்டம் எனப்படும் உடம்பிலும் இருக்கின்றன. இதன் விரிவைப் பின்னர் காண்போம்.

## உயிரின் சக்திகள் மூன்று

உயிரானது உடலில் செயல்புரிய, இயற்கை அதற்கு அளித்துள்ள சக்திகள் மூன்று. அவையாவன : 1) படைத்தல், 2) காத்தல் 3) அழித்தல் என்பனவாகும்.

மேற்குறித்தத் தொழில்களைச் செய்யும் உயிரின் சக்திகளுக்குச் சித்தர்கள் இட்ட பெயர் வளி, அழல் மற்றும் ஐயம் என்பன. இவற்றையே வாதம், பித்தம், கபம் எனவும் கூறுவர்.

இதனைத் தேரையர் என்ற சித்தர் "வாதமாய்ப் படைத்து, பித்த வன்னியாய்க் காத்து, சேட்ப சீதமாய்த் துடைத்து" எனக் கூறுவார்.

## வாதமாய்ப் படைத்து

சித்த மருத்துவக் கொள்கைப்படி, ஐந்து பூதங்களில், ஆகாயமும், வாயுவும் சேர்ந்துதான் வளி அல்லது வாதம் என்ற தத்துவம் உண்டாகிறது. இந்த வாதம் என்ற தத்துவம் படைத்தலுக்கும், வளர்ச்சிக்கும் காரணமாகியுள்ளது. இதனை அறிவியல் அடிப்படையில் பார்ப்போம்.

நவீன அறிவியல் கொள்கைப்படி ஒரு அமீபா (Amoeba) (one celled) தோன்ற வேண்டுமாயினும் அதற்கு இன்றியமையாத் தேவை உயிர்க்கால் (Oxygen), நீர்க்கால் (Hydrogen), வெடியம் (Nitrogen) மற்றும் கரியமில வாயு (Carbondioxide) என்பவையாகும். மேற்கூறிய நான்கு வாயுக்களின் கூட்டு இல்லாமல் எந்த உயிரினமும் தோன்ற வாய்ப்பில்லை.

மேற்கூறிய நான்கு வாயுக்களும் அண்ட வெளியிலே காற்றாகவுள்ளன. எனவே ஆகாயம் + வாயு = வளி அல்லது வாதம் என்ற சித்தர்கள் கொள்கை நிலை நாட்டப்படுகிறது. அண்ட வெளியிலுள்ள அனைத்து ஆக்கப் பாடுகளுக்கும் இந்த வாதம் என்ற தத்துவம் காரணமாகிறது. அதாவது, ஆகாயமாகிய இடைவெளியில் செயல்படும் வாயுவானது வளி அல்லது வாதம் என்ற தத்துவமாகக்

கொள்ளப்படுகிறது. எனவே அறிவியல் அடிப்படையிலும் சித்தர் தத்துவமாகிய வளி அல்லது வாதம் என்ற தத்துவம் தெளிவாக அறிந்து கொள்ளப்படுகிறது.

அண்ட வெளியிலிருக்கின்ற இந்த வாதம் என்ற தத்துவமே பிண்டமாகிய உடம்பிலும் செயல்படுகிறது. அதாவது, அசைவுக்குள் அணுவாக இருக்கின்ற உயிர், ஓர் உடம்பிற்குள் செயல்படும் நிலை உருவாகும் போது, அவ்வுயிர் மூன்று சக்திகளையும் பெறுகிறது.

மனித உடம்பிற்குள் உள்ள வெளியாகிய ஆகாயத்தில் வாயுவானது செயல்பட்டு, வாதம் என்ற தத்துவமாகப் பரிணமிக்கிறது. இதனைத்தான் சித்தர்கள்:

*அண்டத்தி லுள்ளதே பிண்டம்*
*பிண்டத்தி லுள்ளதே அண்டம்*
*அண்டமும் பிண்டமும் ஒன்றே*
*அறிந்து தான் பார்க்கும் போதே*

எனக் கூறியிருக்கிறார்கள்.

## முதல் இயக்கத்திற்குக் காரணம் வாயு

ஒரு குழந்தை பிறந்து தரையில் விழுந்த பின் அதன் தொப்பூழ்க் கொடி அறுக்கப்படுகிறது. அக்குழந்தை தன் வாயைத் திறந்து அழ வேண்டும். இல்லையெனில் அக்குழந்தை இறந்துவிடும். அழாத குழந்தைகளைக் கிள்ளிவிட்டு அழவைப்பார்கள். ஏன் ? காரணம், இதுவரைக் குழந்தை தன் தாயின் வாயிலாகப் பெற்றுவந்த பிராண வாயுவை, இனித் தன் வாயின் வாயிலாகப் பெற்றாக வேண்டியது அவசியம். குழந்தை வாய் திறந்து அழ ஆரம்பித்தவுடன், வெளிக் காற்று அதன் வாயில் வேகமாய் நுழைந்து உட்சென்று நுரையீரலை நிரப்புகிறது. விதானம் தூண்டப்படுகிறது. இதயமும் தூண்டப்பட்டுச் செயல்பட ஆரம்பிக்கிறது. இதிலிருந்து நாம் அறிந்து கொள்வது, மனிதனின் முதல் இயக்கத்திற்குக் காரணமே வாயு என்பதாகும்.

நாம் உண்ணும் உணவு செரிமானமாகிப் பெறப்பட்ட இரசம் குருதியின் வாயிலாக உடம்பிலுள்ள எல்லா உயிரணுக்களுக்கும் (Cells) செல்கிறது. அங்கே பிராண வாயுவின் துணையுடன் உயிர் வெளியேற்றம் (Oxidation) என்ற செயல் நடைபெறுகிறது. இதனால் வெப்பமும், சக்தியும் உடலுக்குக் கிடைக்கின்றன. அதேபோல் அவ்வுணவின் சக்தியால் புதிய உயிரணுக்கள் (new cells) உண்டாக்கப் படுகின்றன. இச்செயல்களைச் செய்வது உயிராகும். அதாவது, உயிரின் சக்திகளில் ஒன்றான வாதம் என்ற தத்துவமாகும்.

## பித்த வன்னியாய்க் காத்து

உயிர் வெளியேற்றம் (Oxidation) என்ற செய்கையால் வெப்பமும், சக்தியும் உண்டாகின்றன எனப் பார்த்தோம். அந்த வெப்பமும், சக்தியும்தான், ஏற்கனவே உள்ள உயிரணுக்களையும் (Cells) புதிதாக உண்டாக்கப்பட்ட உயிரணுக்களையும் குறிப்பிட்ட காலம் வரை காக்கின்றன. மனித உடம்பிலுள்ள சூடு முழுவதும் குறைந்து போனால் அம்மனிதனுக்கு மரணம் நிச்சயம். மீண்டும் அச்சூட்டை உண்டாக்கினால்தான் அவன் பிழைப்பான். இல்லையேல் உடல் குளிர்ந்து இறந்து விடுவான். இவ்வாறு உடம்பைக் காக்கின்ற உயிரின் சக்திகளில் ஒன்றான அழல் அல்லது பித்தம்தான் உடம்பை எப்பொழுதும் காத்து வருகிறது. இதனையே சித்தர்கள் “பித்தம் அடங்கினால் பேசாமல் போய்விடு” என்றும், “பித்த வன்னியாய்க் காத்து” என்றும் கூறியிருக்கிறார்கள்.

## சேட்ப சீதமாய்த் துடைத்து

குறிப்பிட்ட காலம்வரை காக்கப்பட்ட திசுக்கள் (Tissues) பழயவையான வுடன் அவை வெளியேற்றப்படுகின்றன. அத்துடன் நமது உணவுகளில் உள்ளத் தேவையற்ற கழிவுப் பொருள்கள் அனைத்தும் அவ்வப்போது வெளியேற்றப் படுகின்றன. இவ்வாறு உடம்பிலுள்ள கழிவு மண்டலத்தின் அழித்தலும் வெளி யேற்றுதலுமாகியப் பணிகளைத்தான் ஐயம் அல்லது கபம் என்ற தத்துவம் செய்வதாகச் சித்தர்கள் கூறுகின்றனர். இதனையே தேரையர் “சேட்ப சீதமாய்த் துடைத்து” எனக் கூறியிருக்கிறார். இன்னும் விளக்கமாக இதைப்பற்றிப் பார்ப்போம்.

நமது உடலில் கழிவு மண்டலம் (Excretory system) என ஒன்று உண்டு. மலம், சிறுநீர், வியர்வை ஆகியவைக் கழிவு மண்டலத்தைச் சார்ந்தவை. கழித்த லுக்கு ஆதாரமாகக் கருதப்படுகிற ஐயம் அல்லது கபம், நீராக நின்று உடம்பி லுள்ள தேவையற்ற பொருள்களைச் சிறுநீர் வழியாக வெளியேற்றுகிறது. அதே போல் நீராக நின்று வியர்வையின் வாயிலாகவும் கழிவுப் பொருள்களை வெளியேற்றுகிறது.

வயிற்றில் செரிமானத்திற்கு நீர், வாயு, வெப்பம் ஆகிய மூன்றும் நன்கு செரிமானமான பின்பு, வெளியேற்றப்படவேண்டிய கழிவுப் பொருள்களைப் பிரிப்பதற்கும் வெளியேற்றுவதற்கும் நீரே முக்கியப்பங்கு வகிக்கிறது. உண்ட உணவு செரித்து, அதிலுள்ள சத்துகள் ஆங்காங்கே கிரகிக்கப்பட்ட பின், பெருங் குடலில் கழிவுப் பொருளாகிய மலம் பிரிக்கப்படுகிறது. இம்மலம் வெளியே தள்ளப்படுவதற்கு ஏதுவாக அது நீர்த்துவம் பெற்றதாக இருக்க வேண்டும்.

மலத்திலுள்ள அத்தனை நீரும் உறிஞ்சப்பட்டுவிட்டால், அதைப் பொடியாக வெளியேற்ற இயலாது. எனவே, சேட்ப சீதமாய்த் துடைப்பதற்கு நீரின் துணை வேண்டும். நீர் என்பது கபம் என்ற தத்துவத்தின் பாற்பட்டதால், சேட்ப சீதமாய்த் துடைக்க, கபத்தின் கூறாகிய நீர் பயன்படுகிறது.

மொத்தத்தில் உடலில் அழித்தல் என்பது, தேவையற்றவற்றை வெளியேற்று வதேயாகும்.

மூக்கின் வழியாக உள்ளிழுக்கப்பட்ட காற்றிலுள்ள பிராண வாயு, குருதியைச் சுத்தம் செய்யவும், உயிர் வெளியேற்றச் செய்கைக்கும் பயன்படுகிறது. இழுக்கப்பட்டக் காற்றிலுள்ள கரியமில வாயு மூக்கின் வழியாக வெளியேற்றப் படுகிறது. கரியமில வாயுவிலும் சிறிது நீர்த்துவம் உள்ளது சிந்திக்கத்தக்கது.

எனவே வளி, அழல், ஐயம் என்ற தத்துவங்கள் அறிவியலுக்கு உட்பட்டு, அறிவியலால் விளக்கப்படக் கூடியவை என்பது மேற்சொன்னவற்றால் விளங்கும்.

## உள்ளது போகாது இல்லது வாராது

"உள்ளது போகாது இல்லது வாராது" என்பது சித்தர் கொள்கை. இதே கருத்தைத்தான் நவீன அறிவியலும் சொல்கிறது.

Matter and energy can neither be created nor be destroyed.
என்றும்

"No loss, No gain" எனவும் கூறப்படுகிறது. அதாவது பொருளும் சக்தியும் புதிதாக உண்டாக்கப்படுவதுமில்லை; அவை அழிக்கப்படுவதுமில்லை. இலாபமும் இல்லை, நட்டமும் இல்லை. இதனைத்தான் சித்தர்கள் கூறியிருக்கின்றனர்.

சித்தர்கள் கொள்கைப்படி இந்தப் பேரண்டமும் (Cosmos) அதிலுள்ள அனைத்தும் எப்போது படைக்கப்பட்டது என்று அறுதியிட்டுக் கூற இயலாது. அதிலுள்ள பொருள்கள்அழிந்து போவது கிடையாது. ஆனால் இடையறாது மாறிக் கொண்டேயிருக்கின்றன. எவ்வாறு ?

ஒரு பொருளை இறுதிவரை அழித்துக் கொண்டே போனால், இறுதியில் அழிக்க முடியாத நிலையில் இருக்கும் மிக நுண்ணிய துணுக்கே அணுவாகும். இந்த அணுக்கள் பல கோடி ஒன்று சேர்ந்து பொருள்களாகவும், தாவரங்களாகவும், பறவைகளாகவும், பிற உயிரினங்களாகவும் பிறப்பெடுக்கின்றன. இவற்றைச் செய்வது மனிதனல்ல. அனைத்து அண்டங்களிலும், எல்லா ஆக்கப்பாடுகளையும்

மாறி மாறிச் செய்து கொண்டிருப்பது அனைத்துக்கும் மேலான ஒரு சக்தி. அதனையே சித்தர்கள் 'அணுவுக்குள் அணுவாயிருக்கும் பதி' எனவும் 'பேரறிவு' எனவும் குறிப்பிட்டார்கள். இந்தப் பதிதான், அணுவுக்குள் இருக்கும் 'பசு' என்னும் உயிருக்குப் 'பாசம்' என்ற அறிவற்ற சடப் பொருளைக் கொண்டு ஒரு உடம்பைத் தருகிறது. அந்த உடம்பிலிருந்து அப் பசுவாகிய உயிர் செயல்படுகிறது. அந்த உடலுக்கு அளிக்கப்பட்ட காலம் வரை அவ்வுயிர் அந்த உடம்பிலிருந்து செயல்பட்டு வருகிறது. காலம் முடிந்த பின் அந்த உடம்பு மீண்டும் அணுக்களாகப் பிரிந்து விடுகிறது. இந்த மாற்றம் தொடர்ந்து நடைபெறுகிறது. இது அழிவில்லை. வெறும் மாற்றம் மட்டுமே.

## மூலிகை மருந்துகளின் சிறப்பு

மனிதன் காட்டுவாசியாக இருந்த காலத்திலிருந்தே காய்கறிகள், பழங்கள், கிழங்குகள், கீரைகள், மிருகங்கள் மற்றும் பறவைகளின் மாமிசங்களை உணவாக உண்டு பழக்கப்பட்டவன்.

காலப்போக்கில் மனிதன் உலோகங்கள், பிற தாதுப் பொருள்களைக் கண்டுபிடித்தாலும், அவற்றை அவன் உணவாகக் கொள்ள இயலவில்லை. காரணம் பல லட்சம் ஆண்டுகளாக, மனிதனின் உடல் அங்ககப் பொருள்களையே (Organic substances) உணவாக ஏற்கும் தன்மையைப் பெற்றிருக்கின்றது.

## உலோக, தாதுப்பொருள் மருந்துகளின் அறிவியல் அடிப்படை

மனித உடல், அங்ககப் பொருள்களையே (Organic substances) ஏற்றுக் கொள்ளும் இயற்கைத் தன்மை உடையது. என்பதால் உலோகங்கள், பாடாணங் கள், உப்புக்கள். உபரசங்கள், சங்கமப்பொருள்கள் (Animal substances) ஆகியவை மருந்தாக்கப்படும்போது மனித உடலில் பொருந்தும் வகையில் அங்கக (Organic nature) நிலை பெறும்படியாக அவற்றைப் பக்குவப்படுத்துதலே சித்தர் அறிவியலின் சிறப்பாகும்.

## உலோகங்கள்

ஒவ்வொரு உலோகத்திற்கும், அதற்கென்று தனியான களிம்பு ஒன்று உண்டு. அக்களிம்பு இருப்பதாலேயே அவ்வுலோகங்களைச் சுத்தியலால் அடிக்கும் போது நெகிழ்ச்சித் தன்மையோடு காணப்படுகின்றன. அந்த நெகிழ்ச்சித் தன்மையை மாற்றினால்தான் அவ்வுலோகங்கள் வெட்டை (Brittle) ஆகும். அப்படி வெட்டை ஆனால்தான் அவற்றை நொறுக்கித் தூளாக்க முடியும். இது தவிர, உலோகங்களின்

களிம்புகளுக்கு நச்சுத் தன்மையும் உண்டு. அந்த நச்சுத் தன்மைகளைப் போக்கவும், அவற்றை வெட்டையாக்கவும் தான் உலோகங்கள் தூய்மை செய்யப்படுகின்றன.

## அயம் (இரும்பு)

கொள் என்ற தானியத்தை எடுத்து நீர் விட்டுக் கொதிக்க வைத்துக் கஷாயம் செய்து கொள்ள வேண்டும். இரும்பையோ, இரும்புத்தூளையோ பழுக்கக் காய்ச்சி, அந்தக் கஷாயத்தில் பலமுறை தோய்க்க வேண்டும். ஒவ்வொரு முறையும் புதிய கஷாயத்தில் தோய்க்க வேண்டும்.

## இரும்பைத் தூய்மை செய்யும் முறை

இரும்பைப் பழுக்கக் காய்ச்சும்போது அதன் அணுக்கள் விரிவடைகின்றன. பழுக்கக் காய்ச்சப்பட்ட இரும்பைக் கஷாயத்தில் மூழ்கத் தோய்த்தால், இரும்பின் சூடு கஷாயத்தை உள்ளே இழுத்துக்கொள்ளும். இதனால் இரும்பின் சூடு தணிகிறது. இரும்பின் சூடு தணியும்போது, விரிந்த இரும்பின் அணுக்கள் சுருங்குகின்றன. அப்படிச் சுருங்கும்போது, உள்ளிழுக்கப்பட்ட கஷாயம், இரும்பி லுள்ள களிம்பைக் கரைத்துக் கொண்டு வெளியேறுகிறது. இவ்வாறு பல முறை தோய்த்தெடுப்பதால் களிம்பு முழுவதும் வெளியாக, இரும்பு வெட்டையாவதுடன் இரும்பின் அணுக்கள் ஒருவிதப் பக்குவத்தை அடைகின்றன. இவ்வாறு தூய்மை செய்த இரும்புப் பொடியைக் கல்வத்தில் (குழி அம்மியில்) போட்டு அரைத்தால் எளிதில் பொடியாகும்.

## இரும்பு அங்ககத் தன்மை அடைதல்

தூய்மை செய்யப்பட்ட அயப்பொடியோடு மூலிகைச் சாறுகளை விட்டுப் பல மணி நேரம், பல நாட்கள் அரைக்கப்படுகிறது. இதனால், விடப்படும் மூலிகையின் சாரம் இரும்பின் ஒவ்வொரு அணுவிலும் பாய்ந்து, அதனைப் பக்குவப்படுத்து கிறது. இவ்வாறு பல மூலிகைகளைக் கொண்டு இரும்புத்தூளை அரைக்கும்போது அந்த மூலிகைகளின் சாரத்தினால் இரும்பின் தூள் பக்குவத்தை அடைகிறது.

இவ்வாறு பக்குவப்படுத்தப்பட்ட அயத்தூளை மூலிகைச் சாறுகளாலேயே அரைத்து வில்லைகள் போல் அடைகட்டி, அவற்றை மண் அகல்களில் வைத்து மூடிச் சீலை மண் செய்து புடம் செய்யப்படுகிறது. அதாவது, பசுவின் சாணத்தால் செய்யப்பட்ட வறட்டிகளின் மத்தியில் வைத்து நெருப்பு மூட்டப்படுகிறது. இவ்வாறு பல புடங்கள் போடப்படுகின்றன. இதனால் இரும்பு வில்லைகள் சிவந்து, அணுக்கள் பிரிந்து லேசாகிச் செந்தூரமாகின்றன. இவற்றைக் கல்வத்தில் அரைத்தால் மிக மென்மையானப் பொடியாகும்.

மேற்சொன்னபடி செய்த செந்தூரம், மூலிகைச் சாறுகளினால் அரைக்கப் படுவதாலும், புடம் போடப்படுவதாலும், கொஞ்சங் கொஞ்சமாக அங்ககத் தன்மையை (Organic nature) அடைகின்றது. இவற்றை மிகக் குறைந்த அளவில் துணை மருந்துகளுடன் கொடுப்பதால், இவை உடலில் எந்தக் கெடுதலையும் உண்டாக் காமல், உடம்பில் எளிதில் சேர்ந்து செரிமானமாகி, அதற்குரிய பலனை உடம்புக்குத் தந்து, நோய்களைப் போக்குகின்றன.

இரும்பைப் போலவே தங்கம், வெள்ளி, செம்பு, எஃகு, வெள்ளீயம், காரீயம், துத்தநாகம் போன்ற எல்லா உலோகங்களையம், அவற்றிற்குரிய முறைகளின்படித் தூய்மை செய்யப்பட்டு, முறைப்படி புடம் போடப்பட்டுப் பற்பமாகவோ செந்தூரமாகவோ செய்யப்பட்டு நோய்களுக்கு மருந்தாக வழங்கப்படுகின்றன.

## கட்டு, பற்ப, செந்தூரங்களின் பரிசோதனை

### 1. கட்டு

கட்டு என்பது பாடாணங்கள், உப்புகள், பஞ்ச சூதம் (பாதரசக் கட்டுப் பொருள்கள்) முதலியவற்றைக் கொண்டு செய்யப்படுகின்ற மருந்து. இது சித்த மருந்துகளில் தலையாயது.

எந்தப் பொருளைக் கொண்டு கட்டுச் செய்யப்படுகிறதோ, அந்தப் பொருளின் இயற்கைத் தோற்றத்தை இழந்திருக்கும், எளிதில் உடையாது. ஆனால் எவ்வளவு எடை எடுத்து கட்டுச் செய்கின்றோமோ, அந்த எடையில் குறையாது. எத்தனை ஆயிரம் சென்டிகிரேடு வெப்பம் கொடுத்தாலும், உருகி நிற்குமேயொழிய, புகையாகப் புகைந்து போகாது.

அதிகப்படியான வெப்பமே இதனை ஒன்றும் செய்ய இயலாதபோது, மனித உடலுக்குள் இருக்கின்ற அமிலம், நொதிப்பி (Enzyme), இயக்கு நீர் (Harmone) போன்ற எந்த வேதியியல் பொருளும் கட்டு என்ற மருந்தின் தன்மையை மாற்ற இயலாது. எனவே இது கிரியா ஊக்கி போல் (Catalystic agent) செயல்பட்டு, நோய்களை விரைவில் குணப்படுத்தும் வல்லமை கொண்டு திகழ்கின்றது.

### 2. சுண்ணம்

இதன் நிறம் வெண்மையாக இருக்கும். மஞ்சளில் சுண்ணாம்பைச் சேர்த்தால் எப்படிச் சிவந்த நிறம் உண்டாகுமோ, அதைப் போல், சுண்ணம் என்ற மருந்தும் மஞ்சளோடு சேர்க்கப்பட்டால் சிவந்த நிறம் உண்டாகும்.

### 3. பற்பம்

தங்கத்தைக் கொண்டு செய்யப்படுகிற பற்பத்தைத் தவிர மற்ற பொருள் களைக் கொண்டு செய்யப்படும் பற்பங்கள் தூய வெண்மை நிறமாகவும் மென்மை யானப் பொடியாகவும் இருக்க வேண்டும்.

### 4. செந்தூரம்

இது சிவந்த நிறமுடைய மென்மையான பொடியாகும். சிவந்த நிறத்தில் பல வகைகள் இருப்பது போல் எந்தப் பொருளைக் கொண்டு எந்த முறையில் செந்தூரம் செய்யப்படுகிறதோ, அதற்குத் தகுந்த சிவந்த நிறம் உண்டாகும்.

### சிறப்புச் சோதனை

சுண்ணம், பற்பம், செந்தூரம் ஆகியப் பொடி மருந்துகளைத் தண்ணீரில் கொஞ்சம் தூவி, அதன் மேல் ஒரு முழு உளுந்தை வைத்தால், அந்தப் பொடி நீருக்குள் அமிழாமல், அந்த உளுந்தையும் தாங்கி நிற்க வேண்டும். அப்படிப்பட்ட மருந்துதான் உடம்பில் எளிதில் சார்ந்து, பக்க விளைவுகள் இல்லாமல் நோய்களைப் போக்கும்.

தாமிரம் மற்றும் தாமிரத்தின் உப்பாகிய துருசு (மயில்துத்தம்) ஆகியவற்றைக் கொண்டு செய்யப்படுகின்ற சுண்ணம், பற்பம், செந்தூரம் ஆகிய மருந்துகளைக் கீழ்க்கண்டவாறு சோதனை செய்ய வேண்டும்.

தாமிரம் மற்றும் துருசினால் செய்யப்பட்ட சுண்ண, பற்ப, செந்தூரத்தில் கொஞ்சம் எலுமிச்சம் பழச்சாறு விட்டுக் கலக்கிப் பார்த்தால் அவற்றில் நீல நிறம் தோன்றாமல் இருக்க வேண்டும். அப்படி நீல நிறம் தோன்றினால் அவற்றிலுள்ள களிம்பு இன்னும் நீங்கவில்லை என்பது பொருள். எனவே, அம்மருந்து சரியாக முடிக்கப்படவில்லை என அறிந்து கொள்ளலாம்.

### உணவே மருந்து

நாம் உணவு உண்பது நமது வளர்ச்சிக்காகவும், சக்திக்காகவும், நோய்களை எதிர்க்கும் ஆற்றலுக்காகவுமே ஆகும். மேற்சொன்னவை யாவும் சரியாக இருந்தால், உடம்பிற்குள் செயல்படும் உயிரும் நல்ல நிலையில் இருக்கும். இதனையே திருமூலர்:

*உடம்பாரழியின் உயிராரழிவர்*
*திடம்பட மெய்ஞானம் சேரவு மாட்டார்*
*உடம்பை வளர்க்கும் உபாயம் அறிந்தே*
*உடம்பை வளர்த்தேன் உயிர் வளர்த்தேனே*

எனக் கூறுகிறார்.

தமிழ் நாட்டின் உணவு முறை ஆறு சுவைகளை அடிப்படையாகக் கொண்டது. இந்த ஆறு சுவைகளும், ஐந்து பூதங்களின் கூட்டுறவால் ஆனவை. அதே ஐந்து பூதங்களின் கூட்டுறவால்தான் வளி(வாதம்), அழல் (பித்தம்), ஐயம் (கபம்), என்ற உயிரின் மூன்று சக்திகளில் உருவாகின்றன.

அந்த வளி, அழல், ஐயம் ஆகிய மூன்றும் பல காரணங்களால் தங்கள் இயற்கை நிலையிலிருந்து மாறுபட்டால், உடலில் நோய்கள் உண்டாகின்றன. ஆறு சுவைகளின் அடிப்படையில், மேற்சொன்ன வளி, அழல், ஐயம் ஆகிய மூன்று சக்திகளையும் தன்னிலைக்குக் கொண்டு வரும் சக்தி வாய்ந்ததுதான் சிறந்த உணவு முறையாகும். அதனால்தான் உணவே மருந்து எனக் கூறினர்.

நாம் அன்றாடம் உணவில் சேர்த்துக்கொள்ளும் யாவும் மருத்துவ குணம் பெற்றவை. அவற்றை நாம் நோயின்றி வாழப் பயன்படுத்துகிறோம். அவற்றை மேனாட்டார் அறிவியல் அடிப்படையில் ஆராய்ந்து பலவற்றைக் கூறியிருக்கிறார்கள். அவற்றில் சிலவற்றைப் பார்ப்போம்.

## பூண்டு

தொன்றுதொட்டு நமது உணவில் சேர்க்கப்படும் பொருள்களில் பூண்டும் ஒன்று. இந்தப் பூண்டைப் பற்றி ஆராய்ந்த மேனாட்டறிஞர்கள், தற்காலத்தில் பயன்படுத்தப்படும் கிருமி கொல்லி (Antibiotics) மருந்துகள் எல்லாவற்றைக் காட்டிலும் 360 மடங்கு சக்தி வாய்ந்தது எனக் கூறியுள்ளனர்.

## வெங்காயம்

வெங்காயத்திலிருந்து வருகின்ற நெடியானது, எந்தக் கிருமியையும் கொல்லவல்லது என மேனாட்டறிவியலார் கூறியிருக்கின்றனர்.

## கீழாநெல்லி

உயிர்க்கொல்லி நோய்களில் ஒன்றான மஞ்சள் காமாலை நோயை

உண்டாக்கும் நுண் கிருமிகளை (Hepatitis B virus) அழிக்கவல்ல மருந்து, நாம் தொன்றுதொட்டுப் பயன்படுத்தி வரும் கீழாநெல்லி மூலிகையாகும். இம் மூலிகையைப் பற்றி தற்போது அறிவியல் அடிப்படையில் ஆராய்ந்து கூறியிருக் கிறார்கள்.

மேற்சொன்னவைபோல் நிறையக் கீரைகளைப் பற்றியும் உணவுப் பொருள் களைப் பற்றியும் ஆய்வுகள் நடந்து கொண்டிருக்கின்றன.

## தாய்ப்பால்

அண்மைக் காலம் வரைத் தாய்ப்பாலின் சிறப்பு உணரப்படாமலிருந்தது. இப்போது குழந்தைகளுக்குத் தாய்ப்பால்தான் சிறந்த உணவு என்று அறிவியல் பூர்வமாக அங்கீகரிக்கப்பட்டுள்ளது.

தமிழர் பாரம்பரியத்தில், குழந்தை பிறந்தது முதல் சுமார் 1½ ஆண்டுகள் வரைத் தாய்ப்பால் கொடுக்கும் வழக்கம் இருந்தது. ஆனால் எவ்வாறோ புட்டிப்பால் கொடுக்கும் பழக்கம் ஏற்பட்டுவிட்டது.

தாய்ப்பால் இயற்கை கொடுத்த ஒரு வரப்பிரசாதம். தாய்ப்பாலை அதிக நாள் பருகிய குழந்தைகளுக்கு நோய் எதிர்ப்புச் சக்தி (Immunity) அதிகமாகும்.

சில தாய்மார்களுக்குத் தாய்ப்பால் மிகக் குறைவாகச் சுரக்கும். தாய்ப்பாலை அதிகம் சுரக்கவைப்பதற்கு உணவு முறைகளிலேயே மருத்துவம் கூறப்பட்டுள்ளது. அவற்றில் சில பப்பாளி, எள், சுறாமீன் முதலியனவாகும்.

எனவே சித்தர்களின் முறை தமிழரின் வாழ்க்கை முறையாகவே தொன்று தொட்டு இருந்து வந்திருக்கின்றது.

## மூலிகைகளுக்குப் பெயர் வைத்த முறைமை

தமிழ் இலக்கணத்தில் பெயர்கள், இடுகுறிப் பெயர், காரணப் பெயர் என இருவகையாகக் கூறப்பட்டுள்ளன. பல காரணப் பெயர்கள் காலப் போக்கில் உருமாறி வந்திருக்கலாம். அதே போல் மூலிகைகளின் காரணப் பெயர்களும் மருவி வந்திருக்கலாம். ஆனால் இன்னும் பல மூலிகைகள் காரணப் பெயர்களோடு விளங்குவதுமல்லாமல் அறிவியல் அடிப்படையைக் கொண்டவையாகவும் இருக் கின்றன.

## நஞ்சறுப்பான்

இம்மூலிகைப் பெரும்பாலும் இரைப்பு நோய்க்குக் (ஆஸ்த்துமா) கொடுக்கப்படுவதாகும். இதன் தாவர இயல் பெயர் "டைலோ போரா ஆஸ்திமாடிகா" என்பதாகும். இதற்கு நஞ்சு முறிச்சான், ஏங்கல் தழை என்ற பெயர்களும் உள்ளன.

இரைப்பு நோய்ப் பெரும்பாலும் ஒவ்வாமையினால் (Allergy) ஏற்படுவதாகக் கூறப்படுகிறது. மனித உடலில் இந்த ஒவ்வாமையை உண்டாக்குகின்ற பொருள் திசுநீர்த் தேக்கி (Histamine) எனக் கூறப்படுகிறது. இந்தத் திசுநீர்த் தேக்கி என்ற பொருள் உற்பத்தியானால் ஒவ்வாமை உண்டாகிறது. இந்த ஒவ்வாமை பல காரணங்களால் ஏற்படுகிறது.

சிற்சில நச்சுப் பூச்சிகளின் கடியினால் குருதியில் சேரும் நஞ்சு, உணவுப் பொருள்களில் உள்ள நஞ்சு, காற்றின் தூய்மையற்ற தன்மையால் தூசும், தும்பும், புகையும் மற்ற நஞ்சுப் பொருள்களும் மூச்சின் வழியாக உடம்பில் சேருதல் போன்ற காரணங்களால் ஒவ்வாமை உண்டாக வாய்ப்புகள் உள்ளன. இந்த ஒவ்வாமையை உண்டாக்கும் நச்சுப் பொருளான திசுநீர்த் தேக்கியைச் சமன் செய்ய, திசுநீர்த் தேக்கி எதிர்ப்பி (Anti histamine) எனக் கூறப்படும் பொருள்களை மருந்தாகக் கொடுக்கிறார்கள்.

நஞ்சறுப்பான் என்ற மூலிகை முன் சொன்ன திசுநீர்த் தேக்கி என்ற நச்சுப்பொருளை முறிக்கும் சக்தி வாய்ந்தது. எனவே நஞ்சறுப்பான் என்று மிகப் பொருத்தமாகவும், அறிவியல் அடிப்படை கொண்டதுமான பெயர் வைக்கப்பட்டுள்ளது.

## பாடாண பேதி

பாடாணம் என்ற சொல்லுக்குக் கல் என்ற பொருள் உண்டு. பேதி என்ற சொல்லுக்குக் கரைத்து வெளியேற்றுதல் என்ற பொருள் உண்டு. எனவே, கல்லைக் கரைக்கும் மூலிகைக்குப் பாடாண பேதி என்றும் கற்கரைச்சி என்றும் பெயர் வைக்கப்பட்டுள்ளது. இது மருத்துவ அறிவியல் அடிப்படையைக் கொண்டது என்பது தெளிவாகிறதல்லவா ?

## சர்க்கரை கொல்லி

சிறு குறிஞ்சான் என்ற மூலிகைக்குச் சர்க்கரை கொல்லி என்னும் பொதுப் பெயரும் உண்டு. இதன் இலையை வாயிலிட்டு மென்றபின், சர்க்கரையை வாயிலிட்டு

மென்றால் சர்க்கரையின் இனிப்பு மாறி, மண்ணை மெல்வது போல் தெரியும். இம்மூலிகையின் இலைகளை முறைப்படி மருந்தாக உண்டு வந்தால் இரத்தத்திலுள்ள சர்க்கரையின் அளவு குறையும். இந்தப் பெயரும் மருத்துவ அடிப்படையில் வைக்கப்பட்டப் பெயராகும்.

## முடக்கத்தான்

முடக்கற்றான் – முடக்கத்தான் என வழங்கப்படும் இந்தக் கொடிக்கு வாத நோயினால் கை கால்கள் முடங்கிய தன்மையை மாற்றும் வல்லமையுள்ளதால் இப்பெயர் வழங்கப்பட்டுள்ளது. கிராமங்களில் பொதுவாக இதன் இலைகளைத் தோசைமாவில் கூட்டிப் பிசைந்து தோசை சுட்டுச் சாப்பிடும் வழக்கம் உண்டு. மேற்சொன்ன முடக்கு நோய் வராமல் தடுப்பதற்காக, இக்கீரை பயன்படுத்தப் படுகிறது. இதன் பெயரும் மருத்துவ அடிப்படையில் வைக்கப்பட்டப் பெயரேயாகும்.

## சித்தர் வேதியியல்

வேதை, வேதித்தல் என்ற சொற்கள் சித்த மருத்துவத்தில் அதிகம் பயன்படுத்தப்படும் சொற்களாகும். வேதித்தல் என்றால், ஒரு பொருளை வெப்பத்திற்கு உட்படுத்தி, அதனால் சில மாற்றங்களை உண்டாக்கி, மருந்தாகச் செய்வது. சித்தர்கள் மருந்து செய்யியலிலும், இரசவாதம் (அடிமட்ட உலோகங்களைப் பொன்னாக்குவது) செய்யும் இயலிலும் வல்லவர்கள்.

## மருந்துப் பொருள்களின் தூய்மை

சித்த மருத்துவத்தில் ஒரு மருந்தைச் செய்வதற்கு முன், அம்மருந்தில் சேரும் பொருட்களை முறைப்படித் தூய்மை செய்யவேண்டும் என்பது விதி. இத்தூய்மை முறைகளில் வேதியியல் அடங்கியிருக்கிறது. தூய்மை முறைகளை இரண்டாகப் பகுக்கலாம். அவை:

1. பார்வைத் தூய்மை (Physical Purification)
2. வேதியியல் தூய்மை (Chemical Purification)

என்பனவாகும்.

## பார்வைத் தூய்மை

மருந்து செய்வதற்காக வாங்கப்படும் பொருள்களைக் கலப்படமில்லாதவாறு தூய்மை செய்யவேண்டும். மூலிகைகள் என்றால், அதன் எந்த உறுப்பு மருந்துக்குத்

தேவையோ அதனை மட்டும் தேர்ந்தெடுத்துக் கொள்ளவேண்டும். மற்ற எந்தப் பொருள் கலந்திருந்தாலும் நீக்கி விட வேண்டும். அதைப்போலவே, உலோகங்கள், உப்புகள், பாடாணங்கள், பஞ்ச சூதம், உபரசங்கள் ஆகிய பொருள்களில் அந்நியப் பொருள்கள் இருந்தால் அவற்றை நீக்கிவிட வேண்டும்.

இதுதான் இன்ன மூலிகை என்றும், இதுதான் இன்ன பாடாணம் என்றும், இதுதான் இன்ன உப்பு என்றும் தெளிவாகத் தெரிந்து, தேர்ந்தெடுக்க வேண்டும்.

## வேதியியல் தூய்மை

ஒரு பொருளை வேறு பொருள்களுடன் சேர்த்தோ தனியாகவோ, வெப்பத்திற்கு உட்படுத்தினால் சில மாற்றங்கள் உண்டாகும். அம்மாற்றங்களின் போது அம்மருந்துப் பொருள்களின் சன்ன மலினங்களும், நச்சுப் பொருள்களும் வெளியேறுவதால் அவை தூய்மையாகின்றன. வெப்பத்தினால் சில மாற்றங் களை அப்பொருள்கள் அடைவதால் இத்தூய்மை முறை வேதியியல் தூய்மை எனக் கூறப்படுகிறது.

## செம்பின் தூய்மை முறை

''இடையறாக் களிம்பால் கொல்லுவதததுவே'' என்ற சித்தர் வாக்குக் கிணங்க கடுமையான நச்சுத்தன்மை கொண்ட களிம்பைத் தன்னுள் அடக்கி வைத்திருப்பது செம்பு என்ற உலோகமாகும். செம்பிலுள்ளக் களிம்பின் நச்சுத் தன்மை நீங்கிய நிலையில், அக்களிம்பும் செம்போடு சேர்ந்து மருந்தாகும் தூய்மை முறைகளைச் சித்தர்கள் கண்டுபிடித்திருக்கிறார்கள்.

செந்தரா என்ற மூலிகையின் இலையை அரைத்து, அதற்குள் செம்புத் தகட்டின் துண்டுகளைப் பொதிந்து, அதன்மேலே சீலைமண் செய்து புடமிடுவதால் செம்பிலுள்ளக் களிம்பின் நச்சுத் தன்மை மாறிச் செம்பும் வெட்டையாகும் (It becomes brittle). இது மிக உயர்ந்த வேதியியல் முறையாகும். இதனைப் போல் எண்ணற்ற முறைகள் சித்த மருத்துவத்தில் உள்ளன.

இவ்வாறு தூய்மை செய்யப்பட்ட செம்பைச் சிவந்த நிறமுடைய செந்தூர மாகவோ, வெண்மை நிறமுடைய சுண்ணமாகவோ, பற்பமாகவோ செய்து, பல கடுமையான நோய்களுக்கு மருந்தாக வழங்கும் முறைகள் யாவும் சித்த மருத்து வத்தில் உள்ளன. இம்முறைகள் யாவும் வேதியியல் அடிப்படையைக் கொண்டவை.

## பாதரசம்

பாதரசத்தையும் கந்தகத்தையும் ஒன்று சேர்த்துக் கல்வத்தில் அரைத்தால், இரண்டும் சேர்ந்து கருப்பு நிறமுள்ளப் பொடியாகும். இந்தப் பொடி பல மருந்துகள் செய்வதற்கு ஆதாரமானது. இந்தத் தூளை நவீன் வேதியியல் அடிப்படையில் "Sulphide of Mercury" எனச் சொல்கிறார்கள். இந்த ரச கந்தகக் கூட்டுப் பொருள்கள் நெடுங்காலமாக சித்த மருத்துவத்தில் பயன்படுத்தப்பட்டு வருகின்றன.

பாதரசத்தைச் சித்த மருத்துவ முறைப்படி வெண்மை நிறமான சுண்ண மாகவோ, பற்பமாகவோ, சிவப்பு நிறமான செந்தூரமாகவோ, பதங்கமாகவோ, கட்டாகவோ செய்ய இயலும். இதைப் போலவே எல்லா உலோகங்களையும், உப்புகளையும், பாடாணங்களையும் உபரசங்களையும் சுண்ணம், பற்பம் மற்றும் செந்தூரங்களாக செய்து பல கடும் நோய்களுக்குச் சித்த மருத்துவர்கள் கொடுத்து வருகிறார்கள்.

''விரி விந்த சுத்திக் கெதிரில்லை காண் இந்த மேதினியில்'' என்று ஞானவெட்டியான் நூலில் வள்ளுவர் கூறியுள்ளபடி காரசார செயநீரில் உலோ கங்களை உருக்கிச் சாய்ப்பதும், பாடாணங்களைக் கிழிகட்டி எரிப்பதும், பாதரசத்தைச் செப்புப் பாத்திரத்தில் வைத்து, செயநீரில் சுருக்கிட்டு எடுப்பதும் சிறந்த சுத்தி முறைகளாகும்.

## இரசவாதம்

இரசவாதம் என்பது சாதாரண உலோகங்களான செம்பு, ஈயம் போன்ற வற்றைத் தங்கமாக மாற்றும் வேதியியல் கலையாகும். இதற்காகத் தனி நூல்கள் இருக்கின்றன. தமிழில் "வாதி கெட்டு வைத்தியனானான்" என்ற ஒரு பழமொழி உண்டு. அதற்குக் காரணம், இரசவாதத்தில் ஈடுபட்டு, அதில் தோல்வியுற்ற வர்கள், அந்த இரசவாதத்தில் கிடைத்த வேதியியல் அனுபவங்களைக் கொண்டு அம்முறைகளை மருத்துவத்திற்குப் பயன்படுத்தினார்கள். ஏனெனில் மண்ணாசை, பெண்ணாசை, பொன்னாசை என்ற முப்பற்றும் அற்றார்க்கே இரசவாதம் வாய்க்கும் எனச் சித்தர் நூல்களில் கூறியிருப்பதே காரணமாகும்.*

* வாதம் பொய் என்றால் மருத்துவமும் பொய் என்றும் 'லோக வேதமே தேக வேதம்' என்றும் சித்த மருத்துவ நூல்கள் இதற்கு மறுதலையாகக் கூறுகின்றன.

## முப்பு

முப்பு என்ற ஓர் அரிய வேதியியல் பொருள்பற்றி சித்த மருத்துவத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. முப்பு என்பது நான்கு வகைப்படுவதாகக் கூறப்பட்டுள்ளது. அவையாவன : 1) வைத்திய முப்பு, 2) வாத முப்பு, 3) யோக முப்பு 4) ஞான முப்பு என்பனவாகும்.

வைத்திய முப்பு என்ற வேதியியல் பொருளைப் பற்றிப் பல சித்தர்கள் பல வகையாகச் சொல்லி இருக்கிறார்கள். வைத்திய முப்புச் செய்பவர்கள் தமிழ்நாட்டில் இன்னும் இருக்கிறார்கள். வைத்திய முப்பு, வாத முப்பு ஆகிய முப்பு இரண்டையும் எளிதில் செய்ய முடியும். ஆனால் முன்பு கூறியது போல், வாத முப்புப் பற்றற்றார்க்கே வாய்க்கும்.

வைத்திய முப்புவை எந்த மருந்து செய்யும்போதும், அதனுடன் கொஞ்சம் சேர்த்து மருந்து செய்தால், அம்மருந்து நல்ல மருந்தாக அமையும். ஏற்கனவே செய்யப்பட்ட மருந்துகளுடன் கொஞ்சம் கலந்து கொடுத்தால், அம்மருந்துகளுக்குச் சக்தி அதிகமாகும். இப்படிப்பட்ட உயர்ந்த வேதியியல் பொருள்கள் நிறைய சித்த மருத்துவத்தில் உள்ளன.

யோக முப்பு, ஞான முப்பு ஆகிய இரண்டும் யோகிகளுக்கும், ஞானிகளுக்கும் அவர்களின் யோகப் பயிற்சியினால் இயற்கையாகவே உடம்பில் தோன்றுவனவாகும். இவற்றை "மாருத மதி அமுதம்" என்றும் "சிவ குடிலை நீர்" என்றும் பல பெயர்களால் சித்தர்கள் அழைத்தனர். இவற்றால் அழிந்து போகும் உடம்பு, அழியாமல் பாதுகாக்கப்படும். ஆறாவது அறிவானது மிகுந்த சக்தி பெற்று, இருந்த இடத்தி லிருந்தே எதனையும் அறியும் சக்தியைப் பெறும். இப்படிப்பட்ட உயர்ந்த சக்தி யால்தான் சித்தர்கள் இவ்வுலகின் நுணுக்கங்களையும், இவ்வுலகில் காணப்படும் பொருள்களின் நுணுக்கங்களையும் கண்டுபிடித்தார்கள் என்று கூறினால் மிகை யாகாது.

## சித்த மருந்து செய் இயல்

சித்த மருந்து செய் இயல் மிக நுட்பமான வேதியியல் முறைகளைக் கொண்டதாகும். முன்பே கூறியபடி, மருந்துப் பொருட்களைத் தூய்மை செய்தல், அவற்றைப் பல மூலிகைச் சாறுகளால் பல நாட்கள் அரைத்தல், பல புடங்கள் போடுதல் ஆகிய பல வேதியியல் முறைகளை உள்ளடக்கியது சித்த மருந்து செய் இயலாகும்.

மேற்கூறியவாறு செய்யப்படும் மருந்துகள் பல வேதியியல் மாற்றங்களை அடைந்து மருந்தாகின்றன. எடுத்துக்காட்டாக, வேதியியல் முறையில் தூய்மை செய்யப்பட்ட ஒரு மருந்துப் பொருள் சில மாற்றங்களை அடைகிறது. ஆனால், அதற்கென்று தனியாகப் பெயர் வைக்கப்படுவதில்லை. "சுத்தி செய்த" என்ற அடைமொழி மட்டுமே கொடுக்கப்படுகிறது. இந்த அடைமொழி லிங்கம், ரசம், வீரம், பூரம், பாடாணம், உலோகங்கள் முதலிய எல்லா மருந்துப் பொருள்களுக்கும் பொருந்தும்.

அதேபோல் செய்யப்படும் மருந்து, சிவப்பு நிறமாக இருந்தால் செந்தூரம் என்றும், வெண்ணிறமும், மஞ்சளிடச் சிவக்கும் தன்மையும் கொண்டிருந்தால் சுண்ணம் என்றும், வெண்மையாக மட்டும் இருந்தால் பற்பம் என்றும் பெயர்கள் வைக்கப்படுகின்றன. எதனால் அந்த மருந்து செய்யப்பட்டதோ, அந்தப் பொருளின் பெயரைக் கொண்டு லிங்கச் செந்தூரம், தாளகப் பற்பம், கந்தகக் கட்டு, வீரச் சுண்ணம் எனப் பெயரிடப்படுகின்றது.

## அகமருந்து 32

உள்ளுக்குச் சாப்பிடுகின்ற மருந்துகள் அக மருந்துகள் எனப்படும். அவை மொத்தம் 32 வகைகளாகும். உலோகங்கள் 11, பாடாணங்கள் 64, உப்பு வகைகள் 25, உபரசங்கள் 120, பஞ்சசூதம் 5, ஆயிரக் கணக்கான மூலிகைகள் ஆகியவற்றைக் கொண்டு, 32 வகையான மருந்துகள் செய்யப்படுகின்றன. ஒவ்வொரு வகையிலும் பல நூறு மருந்துகள் சொல்லப்பட்டிருக்கின்றன. அம்மருந்துகளைச் செய்யும்போது, செய்முறைகள் பிறழாது செய்ய வேண்டும். அச்செய்முறைகளில் சில வருமாறு :

### 1. பிட்டவியல்

சூரணங்கள், வடகங்கள் போன்ற மருந்துகளைத் தூய்மை செய்யவும் பக்குவப்படுத்தவும் இம்முறை பயன்படுத்தப்படுகிறது.

ஒரு மண்பானையில் சம அளவு பாலையும் நீரையும் கலந்து, பாதிவரை நிறையும்படி ஊற்றிய பின், அப்பானையின் வாயைப் பஞ்சு நூலாலான வெள்ளைத் துணி கொண்டு வேடு கட்ட வேண்டும். பின்னர் அத்துணியின் மேல் தூய்மை செய்யப்பட வேண்டிய சூரணத்தைக் கொட்ட வேண்டும். பின் அதை மூடி கொண்டு மூடிப் பானையின் பொருத்துவாயில் துணி சுற்ற வேண்டும். பின்னர், அப்பானையை அடுப்பேற்றி எரிக்க வேண்டும். பால் முழுதும் சுண்டும் வரை எரித்தால், பாலின் ஆவி மேலே கொட்டிய சூராணத்தில் பட்டு அது பக்குவமாகும்.

## 2. துலாயந்திர முறை

சில மருந்துப் பொருள்களைத் தூய்மை செய்வதற்கு இந்த முறைப் பயன்படுத்தப்படுகிறது. எடுத்துக்காட்டு, வீரம், பூரம், தாளகம் முதலியன.

மருந்துப் பொருள்களைப் பருத்தித் துணியில் முடிச்சுக் கட்டி வைத்துக் கொள்ள வேண்டும். தூய்மை செய்வதற்காகக் கூறப்பட்டத் திரவத்தை ஊற்ற வேண்டும். பின்னால், முடிச்சுக் கட்டிய அந்த மருந்துப் பொருளின் முடிச்சை ஒரு குச்சியின் நடுப்பகுதியில் கட்ட வேண்டும். அம்முடிச்சைப் பானையிலுள்ள திரவத்தில் முக்கால் பகுதி மூழ்கும்படித் தொங்கவிட்டுக் குச்சியைப் பானையின் விளிம்பின் மேல் குறுக்காகப் படியவிடவேண்டும். பின்னர்ப் பானையை அடுப்பேற்றி எரிக்க வேண்டும். பானையிலுள்ள திரவம் முக்கால் பகுதிக்கு மேல் சுண்டியபின் பானையை இறக்கித் தொங்கவிட்டுள்ள மருந்துப் பொருளை வெளியே எடுத்துச் சுத்தமான நீரில் கழுவி உலர வைக்க வேண்டும். இதுவே துலாயந்திர முறைச் சுத்தியாகும்.

## 3. தாளித்தல்

தாளகம் போன்ற மருந்துப் பொருள்களைத் துணியில் முடிச்சுக் கட்டிக் கொள்ளவேண்டும். பின்னர் ஒரு பானையில் பாதி அளவு தீத்தப்படாதக் கல் சுண்ணாம்பைப் பரப்ப வேண்டும். அதன்மேல், முன்பு முடிச்சுக் கட்டிய மருந்துப் பொருளை வைக்க வேண்டும். முடிச்சின் மேற் பகுதியிலும் கல் சுண்ணாம்பைப் பரப்ப வேண்டும்.

அச்சுண்ணாம்பின் மேல் கொதிக்கின்ற நீர், கழுதையின் மூத்திரம், பனங்கள் ஆகியவற்றில் ஒன்றை ஊற்றினால், சுண்ணாம்பு தளதளவென்று கொதிக்கும். அது ஆறியபின் மருந்துப் பொருளை வெளியே எடுத்துத் தூய தண்ணீரில் கழுவி உலர்த்த வேண்டும்.

மேற்சொன்ன முறைப்படி 5,7,11,14 முறைகள் தாளித்து எடுக்க வேண்டும். இதனால் பாடாணம், தாளகம் முதலியன சுத்தியாகின்றன.

## 4. சுருக்குக் கொடுத்தல்

சில மருந்துப் பொருள்களை மெழுகாகவோ, கட்டாகவோ செய்வதற்குச் சுருக்குக் கொடுத்தல் என்ற முறை பயன்படுத்தப்படுகிறது.

சுருக்குக் கொடுக்கப்படவேண்டிய மருந்துப் பொருளை ஒரு வெள்ளை அப்பிரகத் தகட்டின் மீதோ, மண் ஓட்டின் மீதோ அல்லது வெண்மையாகத் துலக்கப்பட்ட இரும்புத் தகட்டின் மீதோ வைக்க வேண்டும். மருந்துப் பொருள் வைக்கப்பட்ட அந்தத் தகட்டை அல்லது மண் ஓட்டை அடுப்பின் மேல் வைத்துச் சிறு தீயாக எரிக்க வேண்டும். அப்போது அந்தத் தகடு சூடாகி, அந்தத் தகட்டின் மேல் வைக்கப்பட்ட மருந்துப் பொருளுக்கும் சூடு ஏறும். மருந்துப் பொருள் சூடானவுடன் அதன்மேல் மூலிகைச் சாறுகளையோ, செய்நீர்களையோ, தீநீர்களையோ (அந்தந்த முறையில் கூறியபடி) சொட்டுச் சொட்டாக விட்டு வரவேண்டும். விட்ட சாற்றை அம்மருந்துப் பொருள் இழுத்துக் கொள்ளும். மீண்டும் சாற்றையோ, செய்நீரையோ சொட்டுச் சொட்டாக விட்டு வர வேண்டும்.

குறிப்பிட்ட அந்த மருந்து செய்முறையில் எவ்வளவு சாற்றைச் சுருக்குக் கொடுக்கச் சொல்லப்பட்டிருக்கிறதோ அவ்வளவு சாற்றால் சுருக்குக் கொடுக்க வேண்டும். அல்லது எவ்வளவு நேரம் சுருக்குக் கொடுக்கச் சொல்லப்பட்டிருக் கிறதோ அவ்வளவு மணி நேரம் சுருக்குக் கொடுக்க வேண்டும்.

இம்முறையால், மருந்துப் பொருளானது, சொட்டு விடப்படும் சாறு, செய்நீர், குடிநீர் ஆகிய இவற்றின் தன்மைகளுக்கேற்ப, இறுகிக் கட்டாகவோ அல்லது இளகி மெழுகாகவோ ஆகும். அதே நேரத்தில் அம்மருந்துப் பொருள் தூய்மை ஆகிவிடும். விடப்படும் சாறு அல்லது செய்நீர், அந்த மருந்துப் பொருளில் உண்டாகும் சூட்டால் கிரகிக்கப்பட்டு மேற்சொன்ன வேதியியல் மாற்றங்களை அடைகிறது.

## 5. கிராசங்கொடுத்தல்

சில உலோகங்களை உருக்கி, அவை உருகி நின்ற நிலையில், சில மூலிகைப் பொடிகளையோ அல்லது வேறு மருந்துச் சரக்குகளின் பொடிகளையோ தூவிக் கிளற வேண்டும். அம்மருந்து செய்முறையில் கூறியபடி, எவ்வளவு நேரம் கிளற வேண்டுமோ அல்லது எவ்வளவு மருந்துப் பொடி அல்லது மூலிகைப் பொடியைத் தூவிக் கிளற வேண்டுமோ, அவ்வளவைத் தூவிக் கிளறவேண்டும். இதனால் உருக்கப்பட்ட உலோகங்கள் வேதியியல் மாற்றங்களை அடைந்து வெட்டையாவதோடு அவற்றிலுள்ள நச்சுத் தன்மைகளும் அற்றுப்போகும்.

சில உலோகங்களை இம்முறையில் பற்பமாக்குவதும் உண்டு.

## 6. ஊதியெடுத்தல்

களங்கு, சுண்ணம் போன்ற மருந்துகள் செய்ய இந்த முறைப் பயன்படுத்தப் படுகிறது. பக்குவம் செய்யப்பட்ட மருந்துப் பொருள்களை மண் மூசை அல்லது

வச்சிர மூசைக்குள் நிரப்பி, மேல் மூடியிட்டுச் சீலைமண் செய்து அம்மூசையைக் கரிக்குள் வைத்து நெருப்பிட்டுத் துருத்தியாலோ, புளோமர் (blomer) என்ற கருவியாலோ குறிப்பிட்ட நேரம்வரை அல்லது மூசை அழுகும் வரை ஊத வேண்டும். கரிநெருப்புச் சூட்டின் காரணமாக மூசையிலுள்ள மருந்துப் பொருள் பக்குவமாகும். அது சுண்ணமாகவோ, களங்காகவோ, கட்டாகவோ மாறும்.

சொல்லப்பட்டிருக்கின்ற முறைகளுக்குத் தகுந்தாற்போல், மேற்சொன்னபடி ஏதாவதொரு மருந்தாக மாறும். இவற்றின் வேதியியல் மாற்றங்கள் அவற்றை அரைக்க அல்லது சுருக்குக் கொடுக்கப் பயன்படுத்தப்படும் மூலிகைச் சாறுகளாலும் அல்லது செய்நீர்களாலும் அவற்றிற்குக் கொடுக்கப்படும் வெப்பத்தின் காரண மாகவும் ஏற்படுகின்றன.

## 7. எரிப்புத் திட்டம்

விறகு அடுப்பின் மேல் வைத்துக் குறிப்பிட்ட நெருப்பளவு சூடுகொடுத்து, குறிப்பிட்ட கால அளவுவரை எரிப்பது, எரிப்புத் திட்டமாகும். பயன்படுத்தப்படும் மருந்துப் பொருள்களின் தன்மையைப் பொறுத்து மிகக் குறைந்த வெப்பம் முதல் அதிக வெப்பம் வரை அம்மருந்துக்குக் கொடுக்கும் வகைகள் கூறப்பட்டுள்ளன. சில முறைகளில் நேரடியாக வெப்பம் கொடுக்காமல் மறைமுகமாக மணலின் வாயிலாக வெப்பம் கொடுக்கப்படும் முறைகளும் உள்ளன.

நெருப்பின் அளவுக்குத் தகுந்தாற்போல் தீபாக்கினி (சிறிய தீ), கமலாக்கினி (மிதமான தீ), காடாக்கினி (பெரிய தீ) என மூன்று வகையாகப் பிரிக்கப்பட்டுள்ளன.

## 8. தொந்தித்தல்

சில உலோகங்களோடு பாதரசத்தைச் சேர்த்துக் கிளறும்போது, அந்த உலோகமும் பாதரசமும் சேர்ந்து உறவாகி வெட்டையாகும். அந்நிலையில் அது பொடியாக அரைக்கக்கூடிய பக்குவத்தில் இருக்கும்.

இப்படி வெட்டையாக்கப்பட்ட பொடிகளைக் கொண்டு வெவ்வேறு முறைகளில் பல்வேறு மருந்துகள் செய்யப்படுகின்றன.

பாதரசத்தையும், கந்தகத்தையும் ஒன்று சேர்த்து அரைத்தால், இரண்டும் சேர்ந்து கருப்பான பொடியாகும். இதனைக் "கச்சலி" என்பார்கள். இதுவும் தொந்தித்தல் அல்லது உறவாக்குதல் என்ற முறையின் பாற்பட்டதேயாகும்.

## 9. தீநீர் அல்லது திராவக முறை

தற்காலத்தில் நீர்த்துவமான பொருள்களைக் கொதிக்கவைத்து அதில் வரும் ஆவியைக் குளிர வைத்து மீண்டும் திரவமாக. ஆக்கும் முறைக்குக் காய்ச்சி வடித்தல் (distilation) எனப்பெயர். சித்த மருத்துவத்தில் இதுவே தீநீர் முறையாகும்.

தீநீர்களை வடிப்பதற்கென்றே சிறப்பாக வடிவமைக்கப்பட்டக் கருவிகள் சித்த மருத்துவத்தில் உண்டு. இவை பெரும்பாலும் களிமண்ணால் செய்யப்பட்டவை யாகும். ஓமத்தீநீர் போன்றவை இக்கருவியின் மூலம் வடிக்கப்படுகின்றன.

## 10. பதங்கம் செய்தல் (Sublimation process)

பாடாணங்கள், பாதரசம், பாதரசத்தின் கூட்டுப்பொருள்களான இலிங்கம், இரசசெந்தூரம், வீரம், பூரம் போன்ற திடப்பொருள்களைப் பதங்கக் கருவியிலிட்டு அடுப்பேற்றி எரிக்கும்போது, அத்திடப்பொருள்கள் ஆவியாக மேலெழும்பும். அப்படி மேலேறும் ஆவியைக் குளிரவைத்தால் அந்த ஆவி மீண்டும் திடப்பொருளாகிப் பானையின் மேற்புறத்தில் ஒட்டிக்கொள்ளும். இந்தப் பதங்கத்தைப் பன்றி மயிர்க்கற்றை கொண்டு சுரண்டி எடுக்க வேண்டும்.

இப்பதங்கம், எளிதில் ஆவியாகிவிடும் தன்மையுடையதாதலால், மருந்தாக உட்கொள்ளும்போது, உடலில் மிக 'எளிதில் பரவி வேலை செய்யும்'.

## 11. சீலைமண் செய்தல்

மருந்துகளை எரிக்கும்போதும், புடம்போடும்போதும், பதங்கம் ஏற்றும்போதும், அக்கருவிகளின் உள்ளே வைக்கப்பட்ட மருந்துப் பொருள்களின் சத்து ஆவியாக வெளியேறாமல் தடுப்பதற்காகச் செய்யப்படுவது சீலைமண் ஆகும்.

சீலைமண் செய்வதற்குப் பருத்தித் துணியையே பயன்படுத்த வேண்டும். துணியின் மேல் தடவுவதற்குப் புற்றுமண், நெட்டான களிமண், கைப்பான செம்மண் ஆகியவை பயன்படுத்தப்படுகின்றன. சில குறிப்பிட்ட மருந்துகள் செய்வதற்குச் சுண்ணாம்புச் சீலை, உளுந்துச் சீலை ஆகியவையும் பயன்படுத்தப் படுகின்றன.

மேற்கூறிய பொருள்களில் ஒன்றை நுண்ணிய பொடியாகச் செய்து, துணியில் வடிகட்டி, நீர்விட்டுப் பிசைந்து, அப்பசையைத் துணிகளில் தடவ வேண்டும். அத்துணியை மருந்துப் பொருள் வைத்துள்ள பாத்திரத்தின் பொருத்து வாயைச்

சுற்றிலும் சுற்றவேண்டும். செய்யப்படும் மருந்துகளின் தன்மைக்கேற்ப இச்சுற்றுகள் அமையும்.

## 12. தோய்த்தல்

உலோகங்களைச் சுத்தி செய்வதற்கு, அவற்றைக் கொல்லன் உலையில் பழுக்கக் காய்ச்சி, சில குறிப்பிட்ட மூலிகைச் சாறுகள், அல்லது கஷாயங்களில் தோய்த்து எடுக்கும்போது, அவ்வுலோகங்களிலுள்ள களிம்புகள் வெளியாகின்றன என்பதை முன்னமே கூறியுள்ளோம். ஆனால் இரும்பைத் தோய்த்து எடுக்கும்போது நொறுங்கும் தன்மையுடைய சிட்டமாக மாறும்.

## 13. செய்நீர்கள்

சில உப்புகள், பாடாணம், உயிர்ப்பொருள்கள் மற்றும் மூலிகைகளின் கூட்டால் உருவாக்கப்படும் சில வகை வேதியியல் நீர்களுக்குச் செயநீர்கள் எனவும், செய்நீர்கள் எனவும் சித்தர்கள் பெயரிட்டிருக்கிறார்கள்.

மேற்சொன்ன செய்நீர்களைப் பயன்படுத்தி உலோகங்கள், பாடாணங்கள், உப்புகள், பஞ்ச பூதம் ஆகியவற்றைச் செந்தூரம், பற்பம் மற்றும் சுண்ணம் எனப்படும் மருந்து வகைகளாக எளிதாகச் செய்ய முடியும். அதனால்தான், அவற்றிற்கு “வெற்றி தரும் நீர்” என்ற பொருளில் “செயநீர்” என்றும் பெயர் வைத்திருக்கிறார்கள்.

எல்லாக் காலங்களிலும் எல்லா வகை மூலிகைகளும், தேவைப்படும் அளவு கிடைப்பது அரிது என்பதாலும், பல புடங்கள் போட்டுச் செய்யப்படும் மருந்துகளைச் சில புடங்களாலேயே செய்து முடிக்க முடியும் என்ற அடிப்படையிலும்தான் செய்நீர் எனப்படும் வேதியியல் நீர்களைத் தயாரித்து இருப்பு வைத்துக்கொண்டு, தேவையானபோது செய்துகொள்ளும் வசதிக்காகச் சித்தர்கள் இவ்வழிவகைகளைச் சொல்லி வைத்திருக்கிறார்கள்.

## 14. புடம்

சித்த மருத்துவத்தில் மட்டுமல்ல, பொற்கொல்லர் பணிகளிலும் புடம் என்ற முறை கையாளப்படுகிறது. தங்கத்திலுள்ள தேவையற்ற மாசுகளை வெளியேற்றவே புடம் போடப்படுகிறது. ‘‘புடம் போட்ட தங்கம்’’ என்ற தொடர் இதனாலேயே உண்டாயிற்று.

சித்த மருத்துவத்தில் மருந்துகளைப் பக்குவப்படுத்துவதற்காக, அதாவது மருந்துப் பொருள்களைப் பற்பமாகவோ, செந்தூரமாகவோ, கருப்பமாகவோ

செய்வதற்காகப் புடங்கள் போடப்படுகின்றன. புடம் என்றால் பக்குவம் செய்யப்பட்ட மருந்துப் பொருள்களை சாணக்கைகளில் வைத்துச் சீலைமண் செய்து அந்தச் சாணக்கையை, பசுச் சாணத்தால் தட்டப்பட்ட வரட்டிகளின் மத்தியில் வைத்து, நெருப்பேற்றி அதனாலுண்டாகும் வெப்பத்தால் பக்குவம் செய்யும் முறையாகும்.

செய்யப்படுகின்ற மருந்துகளுக்குத் தேவைப்படும் வெப்ப அளவுக்குத் தகுந்தாற்போல குறைந்த வெப்பத்திலிருந்து மிக அதிக வெப்பம் வரை சூடு கொடுக்கும் புடங்கள் கூறப்பட்டுள்ளன. அதாவது காடைப்புடம் (1 வரட்டியை வைத்து எரித்தல்), கௌதாரிப்புடம் (3 வரட்டியை வைத்து எரித்தல்), குக்குடப்புடம் அல்லது கோழிப்புடம் (10 வரட்டியை வைத்து எரித்தல்), வராகப்புடம் அல்லது பன்றிப்புடம் (50 வரட்டியை வைத்து எரித்தல்), கஜபுடம் அல்லது யானைப்புடம் (1000 வரட்டியை வைத்து எரித்தல்) எனப் பல வகைப் புடங்கள் கூறப்பட்டுள்ளன. இவையன்றிப் பணிப்புடம், சூரியப் புடம், பௌர்ணமிப்புடம், அமாவாசைப் புடம், மணல் மறைவுப்படம், பூமிப்புடம் என வேறுவகைப் புடங்களும் கூறப்பட்டுள்ளன.

புடங்களுக்குப் பயன்படுத்தப்படும் வரட்டிகளுக்கும் இலக்கணம் கூறப்பட்டுள்ளது. வரட்டிகள் இருவகைப்படும். அவையாவன :

1. இயற்கை வரட்டி , 2. செயற்கை வரட்டி.

இயற்கை வரட்டி இரண்டு கிராம் எடையுள்ளதாக இருக்கும். இது பசுமாடு போட்ட சாணம், அப்படியே காய்ந்து வரட்டியானதாகும். சில மருந்துகளுக்கு ஆட்டு எரு, நெல் உமி, மரப்பட்டை முதலியவைகளும் பயன்படுத்தப்படுகின்றன. செயற்கை வரட்டி என்பது சாணத்தைக் கையால் தட்டி உலர வைத்துச் செய்யப்படுவது. இது கலப்பில்லாத பசுஞ்சாணத்தால் செய்யப்பட்டதாயிருக்க வேண்டும். இதன் கனம் அரை அங்குலமும், விட்டம் 12 அங்குலமும் உடையதாக இருக்க வேண்டும் எனக் கூறப்பட்டுள்ளது. அதற்குக் காரணம், புடத்திற்கு வைக்கப்படும் தீயானது வரட்டியில் பற்றி அது தணலானபின், நீண்ட நேரம் அத்தணல் நிலைத்திருக்க வேண்டும் என்பதற்காகத்தான்.

புடத்திற்குக் குழிவெட்டி, அதற்குள்தான் வரட்டிகளை அடுக்க வேண்டும். ஏனெனில், வெளியே வீசும் காற்றினால் நெருப்பு ஒரு பக்கமாகச் சென்று மருந்து சரிவர வெந்து பக்குவமாகாமல் போய்விடும். பாடாண மருந்துகளுக்கு வெப்பம் குறைவாகத் தேவைப்படுவதால் வெளிப்புறப் புட முறை கையாளப்படுகிறது.

அடுக்கிய வரட்டியின் நான்கு பக்கமும் தீயிட வேண்டும். பற்றிய தீ மெதுவாக எரிந்து, கொஞ்சங் கொஞ்சமாக வெப்பம் அதிகரித்து, ஒரு குறிப்பிட்ட நேரத்தில்,

உச்சபட்ச வெப்பத்தைக் கொடுக்கும். பின்னர், கொஞ்சங் கொஞ்சமாக அந்த வெப்பம் தணிந்து வரும். இப்படிப்பட்ட முறையில்தான் மருந்துகள் பக்குவமாகும் எனச் சித்தர்கள் கண்டுபிடித்திருக்கிறார்கள். இதனை நுணுகி ஆய்ந்து பார்த்தால், இது ஒரு முறைப்படுத்தப்பட்ட மிகச் சிறந்த அறிவியல் நுட்பம் என்பது தெளிவாகும்.

## 15. மெழுகுகள்

அகமருந்து 32இல் மெழுகு வகையும் ஒன்று. தேன் மெழுகைக் கையில் உருட்டினால் எப்படி ஒட்டாமல் உருகுமோ, அந்த நிலையில் மெழுகுகள் இருக்க வேண்டும். மெழுகுகள் பலவகையாகச் செய்யப்படுகின்றன. அவையாவன : அருக்கு மெழுகு, அரைப்பு மெழுகு, இடிப்பு மெழுகு என்பனவாகும்.

### இரசகந்தி மெழுகு

தூய்மை செய்த பாதரசத்தையும், தூய்மை செய்த கந்தகத்தையும் சம எடை எடுத்து, சேராங்கொட்டை எண்ணெய் சேர்த்து மெழுகுபதத்திற்கு அரைத்து, ஒரு முற்றிய தேங்காய்க்குள் செலுத்தித் தேங்காயின் துளைத்த பாகத்தை அடைத்து, தேங்காயைப் பசுஞ்சாணத்தால் கவசம் செய்துப் புடம் போட வேண்டும். சிறிது நேரம் சூடேறியபின் தேங்காய் வெடிக்கும். உடனே புடத்திலிருந்து தேங்காயை வெளியே தள்ளிவிட வேண்டும். சூடு ஆறியபின் அதை உடைத்து உள்ளிருக்கும் மருந்தையும் தேங்காயையும் சேர்த்துக் கல்வத்தில் ஏழு நாட்கள் அரைக்க வேண்டும்.

மேற்படி மெழுகில் உள்ள ஆச்சிரியப்படும்படியான வேதியியல் உண்மை என்னவென்றால், அந்த மெழுகை வேதியியல் அடிப்படையில் பகுத்துப் பார்த்தால், அதில் பாதரசத்தின் சுவடே தெரியாது. இந்தச் சிறிய மருந்து செய்முறையில் பாதரசம் மருந்தாக மாறிவிட்டது என்பதே அறிவியல் உண்மை.

### சித்தர்களின் உயிர் வேதியியல்

உடலினுள் செயல்பட்டுக் கொண்டிருக்கும் உயிரானது, அவ்வுடலுக்குள் வாய் வழியாகவும், மூக்கு வழியாகவும் செல்லும் பொருள்களை ஏற்று, உடலில் உற்பத்தியாகும் பல வேதியியல் நீர்களைக் கொண்டு, வேதியில் மாற்றங்களை உண்டாக்குகிறது. இதுவே உயிர் வேதியியல் ஆகும்.

சில மூலிகைகளின் சாறு சளியைக் கரைத்து, இருமலின் தூண்டுதலால் வெளியாக்கும். சில மூலிகைகளின் சாறு வாந்தியைத் தூண்டி, சளியை வெளி யாக்கும். இன்னும் சில மூலிகைகளின் சாறு சளியைக் கரைத்து, மலத்தின் வாயிலாக

வெளியேற்றும். இன்னும் சில மூலிகைகளின் சாறு, சிறுநீரகத்திலுள்ள கற்களைக் கரைத்து வெளியேற்றும்.

உயிரானது உள்ளே செலுத்தப்பட்ட மேற்சொன்ன மருந்துகளை அவற்றின் இயற்கைச் செயல்களுக்கு ஏற்பப் பயன்படுத்தி, மேற்படி நன்மைகளைப் பெறுகிறது. எனவேதான், இதனை உயிர் வேதியியல் எனக் கூறுகிறோம்.

இவற்றைப் போலவே உலோகம், பாடாணம், உபரசம், உப்புகள், பஞ்சசூதம் போன்ற சித்த மருத்துவத்தில் பயன்படுத்தப்படும் பல மருந்துப் பொருள்கள், மருந்தாகச் செய்யப்பட்டபின் உடலில் பலவித வேதியியல் மாற்றங்களை உண்டாக்கி, தேவையற்றவற்றை வெளியாக்கி, உடல் உறுப்புகளைப் பலப்படுத்தி, அவற்றின் வாயிலாக வளி (வாதம்), அழல் (பித்தம்), ஐயம் (கபம்) என்ற உயிரின் மூன்று சக்திகளும் இயற்கை நிலையில் இருக்கும்படி செய்து, நோய்களைப் போக்கியும், நோய்கள் வராமல் தடுத்தும் ஆட்கொள்ளுகின்றன.

## சித்த மருந்துகளின் செயல்பாடும் சிறப்பும்

சித்த மருந்துகள் பரு உடலுக்கு மட்டுமன்றி, நுண்ணுடலாகிய உயிருக்கும் மருந்தாகின்றன. சித்த மருத்துவ அடிப்படைக் கொள்கைப்படி, ஒவ்வொரு அணுவிலும் உள்ள உயிரும் பாசமும் இணைந்து செயலாற்றுகின்றன. மனித உடலும் உயிரும் ஏற்றுக் கொள்ளும் வகையில், தொன்றுதொட்டுப் பழக்கமான அங்கக நிலையிலுள்ள மருந்துகளையே உடம்பு ஏற்றுக் கொள்கிறது. அப்படி ஏற்றுக் கொள்ளப்பட்ட மருந்து, உடலுக்கும் உயிருக்கும் நன்மை செய்கிறது.

எடுத்துக்காட்டாக ஒருவருக்குக் கபம் (ஐயம்). மிகுதியால் நெஞ்சில் கோழை மிகுந்திருப்பதாக வைத்துக் கொள்வோம். அதற்குரிய சித்த மருந்தைக் கொடுக்கும்போது, அம்மருந்து கீழ்க்கண்டவாறு வேலை செய்கிறது:

1. கோழையை வெளியேற்றுகிறது.
2. அம்மனிதனின் உடம்பின் தன்மையாகிய கோழையை உற்பத்தி செய்யும் நிலையை மாற்றுகிறது.
3. கூடவே அம்மனிதனின் எதிர்ப்புச் சக்தியைத் தன்னிலைக்குக் கொண்டு வருகிறது.

மேற்சொன்ன மூன்று வகைகளிலும் சித்த மருந்துகள் செயல்படுவதால் தான் நோய்களிலிருந்து நிரந்தர நிவாரணம் கிடைக்க ஏதுவாகிறது. சித்த மருந்துகளின்

கூட்டு (Combination) அமைகின்ற முறைகளில் இதனைத் தெரிந்து கொள்ளலாம். எடுத்துக் காட்டுக்கு மூன்று மருந்துகளைக் காணலாம்.

## பால சஞ்சீவி மாத்திரை

இம்மாத்திரையில் சுக்கு, மிளகு, திப்பிலி, பொரித்த வெங்காரம், இலிங்கம் ஆகிய ஐந்து பொருள்கள் சேர்ந்திருக்கின்றன. துணை மருந்து மாசிப்பத்திரிச் சாறும் தேனும் ஆகும்.

சுக்கு வாயுவை வெளியேற்றி, பேதியைக் கட்டுப்படுத்தி, செரிமானத்தை அதிகப்படுத்தும். மிளகு நச்சுத்தன்மைகளைப் போக்கி, பித்தத்தைத் தன்னிலைப் படுத்தும். திப்பிலி உள்ளிருக்கும் சளியைக் கரைத்து வெளியேற்றும். இலிங்கம் சுரத்தைப் போக்கும். எனவே வளி (வாதம்), அழல் (பித்தம்), ஐயம் (கபம்) ஆகிய குற்றங்களால் உண்டான நோய் நிலைகளை மாற்றிச் சுரத்தையும் போக்குகிறது. பக்க விளைவுகள் ஏதுமின்றி நோயைப் போக்கி வளி, அழல் குற்றங்களைச் சமனப்படுத்துவதால் நோய் எதிர்ப்புச் சக்தி மீளுகிறது.

தேன் சிறந்த இயற்கை உணவாகப் பயன்படுகிறது. மாசிப்பத்திரிச் சாறு, சுரமானது மூளையைப் பற்றாமல் தடுக்கிறது.

## சாந்த சந்திரோதய மாத்திரை

இம்மருந்தில் சேரும் பொருள்கள் : இரசகற்பூரம், பொரித்த வெங்காரம், மஞ்சள்தூள். இவை எலுமிச்சம் பழச் சாற்றால் அரைக்கப்பட்டு மாத்திரை செய்யப்படுகின்றன.

இதில் இரசகற்பூரமானது, ஈரலிலிருந்து உற்பத்தியாகும் அதிகப்படியான பித்த நீரை, மலத்தின் வாயிலாக வெளியேற்றுகிறது. பொரித்த வெங்காரம் சிறுநீரை வெளியேற்றுவதன் மூலம் குருதியிலுள்ள பித்த நீர் ஓரளவு வெளி யேற்றப்படுகிறது. மஞ்சள் கிருமிநாசினிச் செய்கை உள்ளதாகையால், நோய்க்குக் காரணமான கிருமிகளைக் கட்டுப்படுத்துகிறது.

அழல் குற்றத்தால் பாதிக்கப்பட்ட ஈரலின் நிலையை மேற்கண்ட செய்கை களால் மாற்றி, அழல் குற்றத்தைத் தன்னிலைப்படுத்துகிறது. இந்த மாத்திரை எலுமிச்சம் பழச் சாறும், மஞ்சள் தூளும் சேர்த்து அரைக்கப்படும் போது இரச கற்பூரம் சுத்தியாகிப் பக்குவப்படுகிறது. இம்மாத்திரையால் பசியுண்டாகிறது. மற்ற இரு குற்றங்களும் தன்னிலைக்கு வருகின்றன. இதனால் மஞ்சள் காமாலை போன்ற அழல் நோய்கள் குணமாகின்றன.

## சாதி சம்பீரக் குழம்பு

இம்மருந்தில் சேரும் பொருள்களாவன : பச்சைக் கற்பூரம், சுத்தி செய்த இலிங்கம், எலுமிச்சம் பழச்சாறு ஆகியன. இவற்றில் பச்சைக் கற்பூரம் கபத்தைப் போக்கி, இதயத்தைத் தூண்டி உடலுக்கு வெப்பத்தைத் தரவல்லது. கபத்தினால் வாந்தி உண்டானால், கபத்தைக் கரைத்து வெளியேற்றும் தன்மை கொண்டது. தொடர்ந்து வாந்தி உண்டாவதால் ஏற்படும் உடல் வெப்பக் குறைவைப் போக்குவது. கிருமிகளினால் பேதி இருந்தால், இலிங்கம் அவற்றைக் கட்டுப்படுத்தும். எலுமிச்சம் பழச்சாறு, இலிங்கத்தைச் சுத்தி செய்வதோடு, பித்தத்தின் வேகத்தைக் கட்டுப் படுத்தி, தாகத்தையும் போக்கும்.

## சித்த மருத்துவத்தில் நோய்கள்

சித்த மருத்துவத்தில் மொத்தம் 4448 நோய்கள் இருந்ததாகக் கணித் திருக்கிறார்கள். இந்நோய்களுக்குரிய தொகைப் பெயர்கள் காணப்படுகின்றனவே ஒழிய, தனித்தனி நோய்களின் குறி குணங்கள் பற்றிய குறிப்புகள், எல்லா நோய்களுக்கும் கிடைக்கவில்லை. காலப்போக்கில் ஆயிரக்கணக்கான ஏடுகள் பல காரணங்களால் அழிந்து போனதே அதற்குக் காரணமாயிருக்கலாம்.

நோய்களுக்குப் பெயர் வைத்த முறையும், நோய்களின் குறி குணங்களும், பெரும்பாலும் இன்றைய அறிவியலுக்கு ஒத்துப் போகின்றன. அவற்றில் சில நோய்களைப் பற்றி கீழே காண்போம்.

## மதுமேகம்

மது என்றால் தேன், மேகம் என்றால் சித்த மருத்துவத்தில் சிறுநீர் சம்பந்தப்பட்டதைக் குறிக்கும். எனவே சிறுநீரில் இனிப்புச் சேர்ந்து நீர் இறங்குவது மதுமேகம் எனக் கூறப்படுவது சாலப் பொருந்தும். மதுமேக நோயில் பத்து நிலைகள், பத்து அவத்தைகள் எனக் குறிப்பிடப்பட்டு, அந்தந்த அவத்தைகளில் உண்டாகும் குறி குணங்களையும் விளக்கிச் சொல்லியிருக்கிறார்கள் சித்தர்கள்.

மதுமேகத்திற்கு மருந்துகள் கூறுமிடத்து அவ்வப்போது குணம் தருகின்ற மூலிகை மருந்துகளையம், முழுக்குணம் தருகின்ற கனிம மருந்துகளையும் கூறி யிருக்கிறார்கள்.

மதுமேகம் என்ற நோய், நவீன அறிவியல் கூற்றுப்படி, கணையம் என்ற உடல் உறுப்பிலுள்ள "லாங்கர் ஹான் திட்டு" (Islet of Langerhans) என்ற பகுதியிலுள்ள

"பீட்டா உயிரணுக்கள் (Beta cells) போன்றவை பல காரணங்களால் கெட்டு விடுவதால், சர்க்கரையைச் சீரணித்து உடலில் பொருந்தச் செய்யும் "இன்சுலின்" (Insulin) என்ற ஒரு திரவம் சுரப்பதில் தடை உண்டாவதால் இந்நோய் உண்டாவ தாகக் கூறப்படுகிறது.

சித்த மருத்துவத்தில் மேற்சொன்ன இன்சுலினைச் சுரக்கும் உயிரணுக்களை (Cells) மீண்டும் உயிர்ப்பிக்கும் வல்லமை கொண்ட காயகற்ப மருந்துகள் சொல்லப்பட்டிருக்கின்றன. இந்த நோய், மற்ற நோய்களைப் போல் ஒரு குறிப்பிட்டக் கிருமியால் உண்டாக்கப்படுவதில்லை. இது ஒரு வளர்சிதை (Metabolic) மாற்ற நோயாகும். எனவே கேடடைந்த உயிரணுக்களை மீண்டும் உயிர்ப்பிக்கும் காயகற்ப மருந்துகளை அன்றே சித்தர்கள் கூறியிருக்கிறார்கள்.

தங்கம், அப்பிரகம் என்ற இரண்டு கனிமப் பொருள்களைக் கொண்டு செய்யப்படும் மருந்துகள் இந்நோயில் இன்னும் பயனளிக்கக் காண்கிறோம். அதனாலேயே அவைக் காயகற்ப மருந்துகளாகக் கருதப்படுகின்றன.

## இளைப்பு நோய்

இந்த நோயால் பாதிக்கப்பட்டவன் நாளுக்கு நாள் மிகவும் இளைத்துக் கொண்டே போவான். அதனாலேயே இந்நோய்க்கு இளைப்பு நோய் என்று பெயர் வைக்கப்பட்டது. இந்நோய்க்காக சித்த மருத்துவத்தில் சொல்லப்பட்ட மருந்துகள் பல. அவை அந்நோயை மிக அருமையாகப் போக்குகின்றன.

எடுத்துக்காட்டாகத் தங்கத்தினால் செய்யப்பட்ட மருந்துகளை எடுத்துக் கொள்வோம். அதற்கு முன் தங்கத்தைப் பற்றிய மேலை நாட்டாரின் கொள்கையைப் பார்ப்போம்.

## தங்கத்தைப் பற்றிய மேலைநாட்டாரின் கொள்கை

தங்கமானது பல வடிவங்களில், பல விதமான நோய்களுக்கு, அனுபவம் மூலமாகக் கொடுக்கப்பட்டு வருகிறது. மற்ற உலோகங்களைக் காட்டிலும் தங்கம் நச்சுத் தன்மை குறைவானது. கிரந்தி அல்லது பறங்கி நோய் (Syphilis) மற்றும் வலிப்பு நோய் (Epilepsy) ஆகியவற்றிற்கு முறையே வெள்ளைப்– பாடாணத் துடனும், புரோமைட் (Bromides) உடனும் கொடுக்கப்பட்டு வருகிறது. நரம்புத் தளர்ச்சிக்கும் தங்கம் பயன்படுத்தப்பட்டு வருகிறது. ஆனால் இதனால் கிடைக்கும் பலன் மனதைப் பொறுத்ததே.

மோல்கார்டு (Moleguard) என்ற அறிஞர் தங்கத்தைச் சனோகிரைசின் (Sanocrycin) என்ற ஊசி மருந்தாக இளைப்பு நோய்க்கு (டீ.பி.) அறிமுகப்படுத்தினார். இளைப்பு நோய்க் கிருமிகளைச் சோதனைச் சாலையில், தங்கத்தோடு சேர்த்துப் பார்க்கும் போது, பெரிய மாற்றங்கள் ஒன்றுமில்லை. அதனால் தங்கம் இளைப்பு நோயில் எவ்வாறு வேலை செய்கிறது என்று அறிய முடியவில்லை. நோய்க் கிருமியினுடைய நிண உறையை (Lipoid covering) ஊடுருவுவதால் கிருமிகள் கொல்லப்படுகின்றன என்று சொல்லப்படுகிறது. கிருமிகளைக் கொல்லும் பேகோசைடோஸிஸ் (Phagocytesis) என்பவற்றைத் தங்கம் தூண்டி அதிகமாக்குவதாலும் இது சாத்தியம் என்றும் கூறப்படுகிறது.

தங்கத்தை ஊசி மருந்தாகச் செலுத்தும் பொழுது இளைப்பு நோய்க்கிருமிகள் மறைந்து விடுகின்றன. சுரம், இருமல், சளி ஆகியவையும் குறைந்து விடுகின்றன. ஆரம்ப நோய் நிலையில் இது மிக நன்றாக வேலை செய்கிறது. ஆனால், நோய் முற்றிய நிலையில் அவ்வளவு சாதகமாக இல்லை. தங்கத்தை ஊசி மருந்தாகக் கீல்வாத நோய்க்கும் (Rheumatoid arthritis) பயன்படுத்தப்பட்டது. கை, கால்கள் நன்கு அசையவும், வலி குறையவும், கை கால்களில் பிடிப்புக் குறையவும் மேற்படி மருந்து பயன்படுகிறது. மேலும் நோய் முற்றாமலும் தடுக்கிறது என்று ஒரு மேலைநாட்டு அறிஞர் கூறுகிறார்.

மேற்கூறப்பட்டவற்றிலிருந்து நாம் அறிந்து கொள்வது என்னவென்றால், சித்த மருத்துவ அடிப்படைக் கொள்கைகளுக்குப் பொருந்துமாறு, அறிவியல் பூர்வமாக அந்த மேலைநாட்டு அறிஞர் விளக்கி இருக்கிறார் என்பதேயாகும்.

மேலே கூறியபடி சித்த மருந்துகள் மூன்று வழிகளில் செயல்படுகின்றன. இறுதியாக எதிர்ப்புச் சக்தியை இயற்கை நிலைக்குக் கொண்டு வரும் என்று சொன்னோம். அதாவது, உடம்பிலுள்ள ஏழு உடற்கட்டுகளையும் வன்மைப்படுத்தி நோயின் குறி குணங்களையெல்லாம் நீக்கி, உடலுக்குப் பலம் தரும் நிலை வரும்போது வளி, அழல், ஐயம் என்ற மூன்று உயிர்த் தாதுக்களும் இயற்கை நிலையாகிய 1:½:¼ என்ற நிலைக்கு வந்துவிடுகின்றன. இந்த நிலையில் எந்தக் கிருமியும், உடம்பில், எந்த நோயையும் உண்டாக்க முடியாது. மேலை நாட்டு அறிஞர் கூறியபடி "பேகோசைடோஸிஸ்" (Phagocytosis) என்ற உயிரிகள் தூண்டப்பட்டு, அதிகமாகிக் கிருமிகளைக் கொல்வதற்குக் காரணமாகிறது தங்கம் என்ற மருந்துப் பொருளாகும்.

எனவே சித்தர்கள் பயன்படுத்திய தங்கத்தைப் பின்னாளில், மேலை நாட்டு அறிஞர்கள் ஆராய்ந்து பல உண்மைகளைக் கூறியிருக்கிறார்கள். அவை அறிவியலுக்கும் சித்த மருத்துவத்திற்கும் உடன்பாடான பொது உண்மைகளாகும். மேலும்,

கீல்வாதம் என்ற நோய்க்குத் தங்கத்தை மருந்தாகப் பயன்படுத்தியபோது, அது நோயை நீக்கியது மட்டுமின்றி, மேற்கொண்டு நோய் முற்றாமல் தடுக்கிறது என அந்த அறிஞர் கூறியுள்ளார். இதனால் நாம் அறிவது, தங்கம், நோயை மட்டும் போக்கக் கூடியதல்ல. எதிர்ப்புச் சக்தியையும் அதிகமாக்கும் காயகற்ப மருந்தாகும்.

## இரைப்பு நோய் (Asthma)

இரைப்பு நோயைச் சுவாசகாசம் என்றும் குறிப்பிடுகிறார்கள். இந்நோயில் பல வகைகள் உண்டு. அவற்றின் குறி குணங்களும் விளக்கமாகக் கூறப்பட்டுள்ளன. கப சம்பந்தமான நோய்களில் இளைப்பு நோய் சற்றுக் கடுமையானது. மூச்சுத் திணறலும் இருமலும் இருப்பதாலேயே இந்நோய் சுவாசகாசம் என்ற பெயராலும் அழைக்கப்படுகிறது. இந்நோய்க்குக் காரணம் பல. ஒவ்வாமையை உண்டாக்குகின்ற தூசு, புகை முதலியனவும், ஒவ்வாமைக்குக் காரணமாகின்ற எலிக்கடி நஞ்சு, பூனைக்கடி நஞ்சு, தாவர நஞ்சுகள் போன்றவை உடலில் தங்கி, ஒவ்வாமையை உண்டாக்குகின்றன. இந்நோய்க்குக் காரணம் எதுவாக இருந்தாலும், காலப்போக்கில் பசை போன்று இறுகிப் போய் புட்புசத்திலும் மூச்சுக்குழல்களிலும் ஒட்டி, மூச்சை வாங்கி வெளிவிட முடியாத நிலையை மாற்றி, இறுகிய சளியைக் கரைத்து வெளியேற்றுவதோடு, மீண்டும் சளி உற்பத்தியாகாமல் தடுப்பதே இந்நோய்க்குள்ள மருத்துவமாகும்.

இரைப்பு நோய்க்குரிய மருந்துகள் சித்த மருத்துவத்தில் நிறைய சொல்லப் பட்டிருக்கின்றன. இக்கால அறிவியலார் கூறும் நோய்க்கணிப்புக்கு இணையான நோய்க்கணிப்பு முறைகளும், உரிய மருத்துவ முறைகளும் பண்டைக்காலம் தொட்டே சித்த மருத்துவத்தில் கையாளப்பட்டு வந்துள்ளன.

## கக்குவான் நோய் (Wooping Cough)

இந்நோய்க்குச் சித்த மருத்துவத்தில் சொல்லப்பட்ட மருந்துகள், வௌவால், மீன், முதலை, உப்புக் கண்டம், பழைய தோல் செருப்பின் வார்கள், புலிக்கொழுப்பு முதலியன. அதாவது கவுச்சி வீசும் நாற்றத்தினால் அந்நோய்க் கிருமிகள் அடங்கி விடுகின்றன எனச் சித்தர்கள் அறிந்திருக்கிறார்கள்.

கிருமிகளால் இந்த நோய் வருகிறது என்பதைச் சித்தர்கள் அறியாமல் அதற்குரிய சரியான மருந்துகளைக் கொடுத்திருக்க முடியாது. ஆனால் அது பற்றிய செய்திகளைத் தாங்கிய ஏடுகள் காலப்போக்கில் மறைந்திருக்கக் கூடும். எனினும் சித்தர்கள் கூறிய மருந்துகள், அவர்கள் சொன்னபடியே நோய்களைத் தீர்க்கின்றன.

எனவே அறிவியல் அடிப்படை இல்லாமல் சித்தர்கள் எதனையும் கூறவில்லை என்று துணியலாம்.

## அம்மை நோய்

வைரஸ் (Virus) என்ற நுண்ணுயிரியால் உண்டாகும் நோய்கள் பெரியம்மை, சின்னம்மை, தட்டம்மை, புட்டாளம்மை போன்றவைகளாகும். மேற்படி நோய்கள் வராமல் தடுக்கப் பல வழிகளைச் சித்தர்கள் கூறியிருக்கிறார்கள்.

அம்மை நோய் வந்தபின் கொப்புளங்கள் உலர்ந்து பக்குக் கட்டும் நேரத்தில் நோய் எளிதில் பரவும் என்பதால், அந்நோய்க் கிருமிகளின் வீரியத்தைக் குறைக்க வேப்பிலை, மஞ்சள், அருகம்புல் ஆகிய மூன்றையும் சேர்த்து அரைத்து, உடலில் பூசிக் குளிப்பாட்டுவது வழக்கம்.

மேற்சொன்ன அதே மூன்று மூலிகைகளையும் சேர்த்தரைத்து, அதில் ஓர் உருண்டையை, நோய் வராதவர்களை விழுங்கச் செய்து அவர்களுக்கு எதிர்ப்புச் சக்தியை உண்டாக்கி, நோய் வராமல் தடுக்கும் முறைகளும் நம் நாட்டில் இருந் திருக்கின்றன. இதுவே காலப் போக்கில் நவீன மருத்துவ முறையில், ஊசி மூலமாக அம்மைப் பாலைச் செலுத்தும் முறைக்கு முன்னோடியாக இருந்திருக்கக் கூடும்.

அம்மை நோய்க்கு முன்பு, காய்ச்சல் கண்டவுடன், நோய் முற்றாமல் தடுப் பதற்குச் சில முறைகள் கூறப்பட்டுள்ளன. அவையாவன:

1. ஊர்க்குருவி முட்டையுடன் புழுங்கலரிசி சேர்த்துக் கருகாமல் சமைத்து உண்ணுதல்

2. பழைய தோல் செருப்பின் அறுந்த வாரைச் சுட்டுக் கரியாக்கி வெந்நீரில் கலந்து குடித்தல்.

3. அம்மை நோயினால் கண்களில் குறு வந்துவிடாமல் தடுக்க:
   - 3.1. வெங்காயத்தின் பூவை மென்று, இரு கண்களிலும் ஊதிவிடுவது.
   - 3.2. மருதோன்றி இலையை விழுதாக அரைத்து, இரண்டு பாதங் களிலும் வைத்துக் கட்டிவிடுதல் ஆகியவை செய்யப்பட்டு வந்தன.

இந்நோய் வந்தபோது, உடம்பை குளிர்ச்சியாக வைத்துக் கொள்ளப் பல வழிகள் வழக்கத்தில் உள்ளன. தற்கால ஆராய்ச்சிப்படி வெங்காயத்தின் நெடியானது, உலகிலுள்ள எந்தக் கிருமியையும் அழிக்க வல்லது என்பது ஒப்பு நோக்கத்தக்கது.

## தொக்கணம் (Siddha Physiotherapy)

நவீன மருத்துவத்தில் தொக்கணம் (Physiotherapy) என்ற பாடத் திட்டத்திற்குத் தனியாகப் பட்டப்படிப்பே வந்துவிட்டது. சித்த மருத்துவத்தில் நெடுங்காலமாகவே தொக்கணம் என்ற மருத்துவக் கலைக் கையாளப்பட்டு வருகிறது.

தொக்கு என்ற சொல்லுக்கு உடம்பு என்ற பொருளும், தோல் என்ற பொருளும் உண்டு. உடம்பு, தோல் ஆகிய இவற்றை அசைத்துச் செய்யப்படுகின்ற கலை தொக்கணமாகும். இது ஒன்பது வகையாகக் கூறப்பட்டுள்ளது. உடம்பின் வெளி உறுப்புகள் பாதிக்கப்பட்டால், அவற்றைச் சரிசெய்ய தொக்கண மருத்துவ முறை பயன்படுத்தப்படுகிறது.

தொக்கடம் என்ற சொல்லாலும் இது குறிக்கப்படுகிறது. அணம் என்றால் சஞ்சரித்தல். உடம்பின் மீது மருத்துவரின் கை, கால்கள் சஞ்சரித்துச் செய்யப் படுகின்ற சிகிச்சை முறைக்குத் தொடு உணர்வு ( feeling of touch) என்ற பொருளும் உண்டு. தோலிலோ, தசையிலோ ஊறு உண்டாகித் தொடு உணர்வு பாதிக்கப்பட்டால், அவ்விடங்களை அழுத்தித் தொடுவதாலும் கை, கால்கள் சஞ்சரித்து அவற்றைச் செய்வதன் மூலமும் அந்தப் பாதிப்பை நீக்க முடியும்.

வாயுவின் கோளாறால் உடம்பில் எந்தப் பகுதியாவது பாதிக்கப்பட்டுப் பிடிப்பு, வீக்கம், உணர்வின்மை, வலி, அந்த உறுப்பைப் பயன்படுத்த முடியாமை போன்ற பலவித நோய் நிலைகளில் தொக்கணம் என்ற முறை பயன்படுத்தப்படுகிறது. வர்ம சிகிச்சை இளக்கு முறையிலும் தொக்கண முறைகள் உள்ளன. ஆனால் வர்ம இளக்கு முறையில் செய்யப்படும் தொக்கணம் வேறுபட்டது.

வாயுவினால் தடைப்பட்ட அல்லது பாதிக்கப்பட்ட இடங்களில் மருந்து நெய்களைத் (Medicated Oils) தேய்த்தோ, அல்லது தேய்க்காமலோ முறைப்படி பயிற்சி பெற்றவர்கள், கீழ்க்காணும் ஒன்பது முறைகளில் தொக்கணம் செய்யவேண்டும்.

1. தட்டல், 2. இறுக்கல், 3. பிடித்தல், 4. முறுக்கல், 5. கட்டல்,
6. அழுத்தல், 7. இழுத்தல், 8. மல்லாத்துதல், 9. அசைத்தல்

மேற்சொன்ன முறைகளுள் ஒன்றையோ, சிலவற்றையோ நோய்கண்ட இடத்திற்கு ஏற்றவாறு செய்ய வேண்டும்.

மேற்கூறியபடி வாயு உண்டாக்கிய கோளாறுகளை, ஆன்மா தானே சரிசெய்து கொள்ள முடியாத நிலையில், தொக்கண முறை ஆன்மாவிற்கு உறுதுணை புரிகிறது. உடம்பின் பகுதிகளில் உண்டான பிடிப்பு முதலானவற்றை மருந்து நெய்களைத் தேய்த்தோ, தேய்க்காமலோ செய்கின்ற தொக்கண முறைகளால் பிடிப்பு முதலியன விட்டும், வீக்கம் வடிந்தும், உணர்வற்ற நிலை மாறியும், வலிகள் குறைந்தும் விடுகின்றன. இதற்கு உதவியாக அவற்றிற்குரிய உள் மருந்துகளும் தரப்படுகின்றன. இதனால், ஆன்மா தன் உடற் கருவிகளின் துணைகொண்டு தன் பணியைச் செவ்வனே செய்ய இயலுகிறது. இல்லையெனில், ஆன்மா அவ்வுட லுக்குள் இருந்து கொண்டே அந்தத் துன்பங்களை அனுபவிக்க வேண்டி வரும்.

தொக்கண முறையினால், நின்றுவிட்ட குருதிச் சுற்றோட்டத்தைத் தூண்ட முடியும். இதயத்தின் செயல்பாடு குறைகின்ற நேரத்தில், இதயத்தை அழுத்தித் தேய்ப்பது இந்த முறையேயாகும்.

தொக்கணம் என்ற இந்த முறை, வெளியுடம்பில் செய்யப்படுகின்ற மருத்துவம் என்ற அடிப்படையில் அறிவியலின் பாற்பட்டதென்றும், இம்மருத்துவத்தால் ஆன்மாவின் துன்பம் நீக்கப்படுவதால் ஆன்மீகம் சார்ந்ததென்றும் கூற இயலும்.

## அறுவை மருத்துவம்

சித்த மருத்துவத்தில் அறுவை மருத்துவமும் சிறப்பாக இருந்திருக்கிறது. கண் நோய்களில் பித்தகாசம் (Cataract) என்ற கண்புரை நோய்க்கு மிக நுணுக்கமான அறுவை மருத்துவ முறையும், அதற்குரிய ஆயுதங்களும் இருந்த தற்கு நூல் ஆதாரங்கள் இருக்கின்றன. தற்காலத்தில் செய்யப்படும் பல அறுவை மருத்துவ முறைகளை ஒட்டிய முறைகள் அக்காலத்தில் இருந்திருக்கின்றன. மூளைக்குள் தேரை என்ற உயிரினம் இருந்து தொல்லை கொடுத்துக் கொண் டிருந்ததாகவும், தேரர் என்ற சித்தர் கபாலத்தை (Skull) அறுவை மூலம் திறந்து, மூளைக்குச் சேதம் வராமல் அத்தேரையை வெளியேற்றினார் என்றும் கூறப்படு கிறது.

மூலம், பௌத்திரம் (Piles and Fistula) என்ற நோய்களை இன்றும் சித்த மருத்துவர்கள் மருந்துகளால் குணப்படுத்தி வருவதைக் காணலாம்.

## சித்த மருத்துவத்தில் பாடாணங்கள்

**வெள்ளைப் பாடாணம் :** பாடாணம் என்ற சொல்லுக்குக் கல் என்பது பொருள். வெள்ளைப் பாடாணம் வெண்மையான கல் போல் இருக்கும். இது மிகுந்த நச்சுத் தன்மை வாய்ந்தது. எனவே நச்சுத்தன்மை வாய்ந்த பொருள்களுக் கெல்லாம் பாடாணம் என்ற சொல்லை இட்டு வழங்கியிருக்கிறார்கள்.

வெள்ளைப் பாடாணத்தின் மேற்புறம் சீமைச் சுண்ணாம்புக் கட்டியைப் போல் காட்சியளிக்கும். இதன் மேல் ஒரு துளி நீரை விட்டால் இது இழுத்துக் கொள்ளும். இதுவே வெள்ளைப் பாடாணத்தின் தன்மை. இது நஞ்சாயினும், மிக உயர்ந்த மருந்தாகும்.

**சங்குப் பாடாணம்:** இந்தப் பாடாணைக் கட்டியின் மேற்புறம் ஊதுசங்கின் மேற்புறம் போல் பளபளப்பாயிருக்கும். கல்லைப் போலிருக்கும். ஆனால் வெள்ளைப் பாடாணத்தைப்போல் நீரை உள்ளே இழுத்துக்கொள்ளாது. வெள்ளைப் பாடாணம் பயன்படுத்தப்படுகிற இடங்களில் சங்குப் பாடாணத்தையும் பயன்படுத்தலாம்.

**தீமுறுகல் பாடாணம்:** இதுவே நவீன வேதியியலில் பயன்படுத்தப்படும் மஞ்சள் பாஸ்பரஸ் (Phospharous) ஆகும்.

**கோழித்தலை கந்தகம் :** இது கந்தகத்தில் ஒரு வகையாகும். கோழியின் கொண்டை நிறமாகிய சிவப்பு நிறத்தில் இருப்பதால் இது இப்பெயரைப் பெற்றது.

**குதிரைப்பல் பாடாணம்:** குதிரையினுடைய பல்லின் நிறத்தைக் கொண் டிருப்பதால் இது இப்பெயர் பெற்றது. இது ஒரு வைப்புப் பாடாணம் (Synthetic) ஆகும்.

மனோசிலை என்ற வைப்புப் பாடாணமும் குதிரைப்பல் பாடாணமும் வைப்பு முறையில் சற்றே வேறுபட்டாலும், குணத்தில் இரண்டும் சமம் எனக் கருதப்படு கிறது.

**தாளகம் :** இதுவும் வெள்ளைப் பாடாணத்தின் கூட்டுறவால் உண்டாக்கப் பட்ட பாடாணமாகும். இதில், மடலரிதாரம், பொன்னரிதாரம், கல்லரிதாரம் என மூன்று வகைகளுண்டு. முதலிரண்டு வகைகளும் உள் மருந்துக்கும் மூன்றாவது வகை வெளி மருந்துக்கும் பயன்படுகின்றன.

**கௌரி பாடாணம் :** இதுவும் வெள்ளைப் பாடாணத்தின் கூட்டுறவாலான ஒரு வைப்புப் பாடாணமாகும். இதுவும் சிறந்த மருந்துகளுக்குப் பயன்படுகிறது.

பாடாணங்கள் மொத்தம் 64 வகையுண்டு. அவற்றில் இயற்கைப் பாடாணங்கள் 32, செயற்கைப் பாடாணங்கள் 32 ஆகும்.

மேற்சொன்ன பாடாணங்களுக்கு தனித்தனியே தூய்மை செய்யும் முறைகள் சொல்லப்பட்டுள்ளன. அவற்றை முறைப்படி தூய்மை செய்து மருந்துகளில் பயன்படுத்தினால், உலகத்தில் எந்த நோயையும் குணப்படுத்தலாம் என்பது முற்றிலும் உண்மை.

பறங்கி நோய் (Syphilis) என்ற நோய்க்கு ஆங்கிலேயர் காலத்தில், வெள்ளைப்பாடாணமே மருந்தாக இருந்திருக்கிறது. தங்கத்துடன் வெள்ளைப் பாடாணத்தைச் சேர்த்துக் கொடுத்தால் பறங்கி நோயில் ஒரு நிலையாகிய (Tertiary Syphilis) என்பது குணமானதாக அக்காலத்து மருத்துவர்கள் கூறுகின்றனர்.

## நோயில்லா நெறி ஒழுக்கம்

நோய்கள் வராமல் தடுப்பதற்கு, சித்தர்கள் பல வழிமுறைகளைக் கூறியிருக்கிறார்கள். எடுத்துக்காட்டாக ஒரு பாடலைக் காணலாம்:

*திண்ணமிரண்டுள்ளே சிக்க வடக்காமற்*
*பெண்ணின் பாலொன்றைப் பெருக்காமல் – உண்ணுங்கால்*
*நீர் கருக்கி மோர் பெருக்கி நெய்யுருக்கி யுண்பவர்தம்*
*பேருரைக்கிற் போமே பிணி.*

மேற்கூறிய பாடலில் மலம், சிறுநீர் ஆகியவற்றை அடக்குதல் கூடாது. நீரைக் கொதிக்க வைத்தே பருக வேண்டும். மோரை நீர் சேர்த்துப் பெருக்கியே பருக வேண்டும். நெய்யை உருக்கியே உணவில் சேர்த்துக் கொள்ளவேண்டும் எனக் கூறப்பட்டுள்ளது. இப்படிச் செய்பவரின் பெயரைக் கேட்டாலே நோய்கள் பறந்துவிடுமாம். மேற்சொன்ன கருத்துகளெல்லாம் அறிவியல் அடிப்படையில் நூறு விழுக்காடு உண்மை என்பது ஆய்ந்தவர் அறிவர்.

நோயில்லா நெறி ஒழுக்கங்கள் பற்றிச் சித்தர்கள் விரிவாகச் சொல்லி உள்ளனர். அவற்றின் சாரத்தைக் கீழே காணலாம்.

## வருடம் இருமுறை

ஓர் ஆண்டு முழுவதும், ஒரு மனிதன் உண்ட உணவு, பருகிய பாணங்கள் சுவாசித்த காற்று என்று பல வழிகளில் அவன் உடம்பில் நச்சுப் பொருள்கள் சேர வாய்ப்புண்டு. அந்த நச்சுப் பொருள்களை வெளியேற்றாமல் இருந்தால்தான் ஒவ்வாமை போன்ற பல நோய்கள் வர ஏதுவாகிறது. எனவே அந்த நச்சுப்

பொருள்களை முறையாக வெளியேற்றுவதற்கு இரண்டு வழிகள் சொல்லப் பட்டிருக்கின்றன. அவையாவன :

1. கழிச்சல், 2. வாந்தி.

வருடம் ஒருமுறை கழிச்சலுக்காக மருந்துகளைக் கொடுத்தால் வயிற்றில் உள்ள படிமலங்களும், குருதியிலுள்ள நச்சு நீர்களும் வெளியேறிவிடும்.

ஆண்டுக்கு ஒருமுறை வாந்திக்கு மருந்து கொடுத்தால், நுரையீரல் மற்றும் தொண்டை ஆகிய பகுதிகளிலுள்ள நச்சு நீர்கள், கோழை, பித்த நீர் ஆகியவை வெளியேறும்.

மேற்சொன்ன சிகிச்சைகளால் ஒரு ஆண்டில், உடம்பில் சேர்ந்த நச்சுத் தன்மைக்குக் காரணமான பொருள்களை நீக்கி, உடலை நலமாக வைத்திருக்க முடியும்.

## மாதம் இருமுறை

சித்தர்களின் கருத்துப்படி நாம் உண்ணும் உணவு முதல் நாள் சாரமாக மாறி ஏழாம் நாள் விந்துவாக மாறுகிறது. இந்த விந்துவுக்கு ஒளி என்ற பெயரும் உண்டு. காரணம் இந்த விந்துதான் உடலுக்கு ஒளியைக் (Complexion) கொடுப்பதாகும். இந்த விந்துவை வீணடித்தால் ''விந்துவிட்டான் நொந்துகெட்டான்'' என்ற பழமொழிக்கிணங்க நொந்து கெடும்படியாகிவிடும். ஏழாவது உடல் தாதுவாகிய விந்து அதிகம் செலவழிக்கப்பட்டால் மற்ற தாதுக்களும் பலம் குன்ற ஏதுவாகும். அதனால் ஏழாவது நாள் விந்துவாக மாறும் உணவின் சக்தியை வீணடிக்காமல் மனைவியோடு இணைந்தால், ஒரு வார சக்தியாகி, விந்து உடலிலேயே தங்குவதால் பலமும் உடல் ஒளியும் குன்றாமல் இருக்கும். அதனால் கருத்தரிக்கும் குழந்தையும் ஆரோக்கியமானதாக இருக்கும்.

பலம் குன்றிய விந்துவின் கூட்டால் பிறக்கும் குழந்தைகள், பலமிழந்து பல வகை நோய்களுக்கு அடிக்கடி ஆட்படும் அவல நிலை உண்டாகும்.

## வாரம் இருமுறை

"வைத்தியனுக்குக் கொடுப்பதை வாணியனுக்குக் கொடு" என்பது பழமொழி. இதன் பொருள் வாரம் இருமுறை எண்ணெய் தேய்த்துக் குளிக்க வேண்டும் என்பதாகும். வாரம் இருமுறை எண்ணெய் தேய்த்துக் குளிப்பதால், அதிகமான உடற்சூடு சமனப்படும். தோலின் வறட்சி நீங்கும். உடல் நலத்தைப் பாதுகாக்கும்.

வெறும் எண்ணெய் தேய்த்துக் குளிப்பதால் தோலுக்குப் பளபளப்பைக் கொடுப்பதோடு, மயிர்க் கால்களிலுள்ள அழுக்கைக் கரைத்து வெளியேற்றுவதன் மூலம், வியர்வைச் சுரப்பிகள் இயற்கையாகச் செயல்பட வாய்ப்பு உண்டாகிறது. அதனால் உடலில் வெப்ப, தட்ப நிலை நன்கு பராமரிக்கப் படுகிறது.

## மருந்துப் பொருள்கள் சேர்ந்த எண்ணெய்

மனித உடலில் தோல் பகுதி முழுவதும் நரம்பு உயிரணுக்கள் (Nerve Cells) பரவிக்கிடக்கின்றன. அதனால்தான் தொடு உணர்வால் வெப்பம், குளிர்ச்சி, வலி ஆகியவற்றை உணரமுடிகிறது. மருந்து எண்ணெய்களைப் பூசிப் பிடிக்கும்போது, அவ்வெண்ணெயிலுள்ள மருந்துப் பொருள்களின் பண்புகளுக்குத் தகுந்தாற் போல், அவை நரம்பு உயிரணுக்களை ஊக்குவிக்கின்றன. உடம்பு முழுவதும் பரவியுள்ள நரம்பு உயிரணுக்கள் ஊக்குவிக்கப் படுவதால் நரம்பு மண்டலமும் அதன் தலைமைச் செயலகமான மூளையும் ஊக்குவிக்கப்படுகிறது. எண்ணெயில் சேர்ந்துள்ள மருந்துப் பொருள்களுக்குத் தக்கவாறு உடம்பிற்கும் பலன்கள் கிடைக்கின்றன.

## நாள் இருமுறை

அக்காலத்திய உணவு முறைப்படி, அவரவர் கையினால் பிடிக்கும் கவளத்தில் 32 கவளம் சாப்பிடவேண்டும். அதுவும் ஒரு நாளைக்கு இரண்டு வேளைகள்தான் சாப்பிடவேண்டும். இதனைத்தான் யோகிக்கு ஒரு வேளை, போகிக்கு இருவேளை, ரோகிக்கு மூன்று வேளை என நம் முன்னோர்கள் சொல்லிவைத்தார்கள்.

குடும்பத்திலுள்ள யோகி இருவேளை சாப்பிடும் உணவு, நன்கு செரிமானமாகி, உடலில் சேர்ந்து, கழிவுப் பொருள்கள் மூலமாக இரண்டு வேளையும் வெளியேற வேண்டும் என்பது நியதி. அதாவது, அன்று உண்ட உணவின் சாரம் உடலில் பொருந்துவதோடு, அதிலுள்ள தேவையற்ற பொருள்கள் அன்றே, இருவேளையும் மலமாக வெளியேறிவிட்டால், உடம்பில் நச்சுத்தன்மை உண்டாகாது. அதனால் நோயும் அணுகாது என்பது கருத்து.

உணவின் முறை, அளவு, அறுசுவைகள் போன்றவற்றை ஒழுங்காகக் கடைப்பிடிப்பதால் நோய்கள் வராமல் தடுத்து, இன்ப வாழ்வு வாழலாம் என்று வரையறை செய்த சித்தர்களின் கருத்துகள் அறிவியல் அடிப்படைகளைக் கொண்டவையேயாகும்.

## பகற்புணரோம்

பகல் நேரத்தில் உடலுறவு கொள்ளக்கூடாது என்பது சித்தர் நோயில்லா நெறி ஒழுக்கங்களில் ஒன்று. அறிவியல் அடிப்படையில் இதற்கு விளக்கம் உண்டா என்றால் உண்டு. தமிழில் ஓர் பழமொழி உண்டு. உண்ட மயக்கம் தொண்டனுக்கும் உண்டு என்று. இதன் காரணம் என்ன ? உணவு உண்டபின் உடலிலுள்ள பெரும்பகுதி இரத்தம் செரிமானத்திற்காகப் பல வேதியியல் நீர்களைச் சுரக்கும் பொருட்டு வயிற்றுக்கு வந்துவிடும். அதனால்தான் சோர்வு உண்டாகிறது.

இரத்தத்தில் இருந்துதான் பலவித வேதியியல் பொருட்கள் நமது செரிமானத்துக்காக உண்டாக்கப்படுகின்றன. எல்லாச் சத்துக்களையும் ஒவ்வொரு உயிரணுவிற்கும் (Cell) இரத்தம்தான் எடுத்துச் செல்கிறது.

செரிமானத்துக்காக வயிற்றுப் பகுதிக்கு வந்த இரத்தம் உடலுறவுக்குத் தயாராகும்போது இடம் மாற வேண்டிய நிலை ஏற்படுகிறது. குறிப்பாகச் சர்க்கரையைச் செரிமானம் செய்யும் இன்சுலின் (Insulin) என்ற வேதியியல் பொருள், அதிகம் சுரப்பதற்கு வாய்ப்பில்லாமல் போய்விடுகிறது. இந்நிலை தொடர்ந்தால் சர்க்கரையின் சிதை மாற்றம் (Catabolism) பாதிக்கப்பட்டு மதுமேக நோய் வருவதற்கு ஏதுவாகிறது. இதேபோல் பல கோளாறுகளும் உண்டாக வாய்ப்புண்டு. இதனால்தான் போகம் செய்வதற்குப் பின்னிரவு ஏற்றது என்று சித்தர்கள் சொல்லி இருக்கிறார்கள்.

அதுமட்டுமின்றிப் பகலில் புணருவதால் உடலின் பலம் குன்றிவிடும். பணிக்குச் செல்லும்போது மிகுந்த களைப்பு உண்டாகும். அதனால் அன்று செய்யப்போகும் பணியில் வேகமிருக்காது.

## பகலில் துயிலோம்

பகலில் தூங்கக்கூடாது என்பதும் சித்த மருத்துவ நோயில்லா நெறி ஒழுக்கங்களில் ஒன்று. பகலில் தூங்குவதால், உழைப்பின்மையின் காரணமாகச் செரிமானம் பாதிக்கப்படும். செரிமானம் கெட்டால் அன்று உண்ட உணவின் சாரம் உடலுக்குச் சரிவரக்கிடைப்பதில் ஊறு உண்டாகும். சிறப்பாகக் கொழுப்புப் பொருள்கள் செரிமானமாகாமலிருந்தால் அவை ஆங்காங்கே உடலில் தேங்கி, உடல் பருமன் அதிகமாகவும் அதைத்தொடர்ந்து பல நோய்கள் உண்டாகவும் வாய்ப்புகள் உண்டாகும்.

## நோய் வரும் காரணங்கள்

சித்த மருத்துவத்தில் நோய் வரும் காரணங்களாக மூன்று கூறப்பட்டுள்ளன, **அவையாவன :**

1. உணவாதி செயல்கள்
2. இச்சாதி செயல்கள்
3. அண்டத்தின் மாற்றம்

மேற்சொன்ன மூன்று காரணங்களால் உயிரின் சக்திகளாகிய வளி, அழல் மற்றும் ஐயம் என்பவை பாதிக்கப்பட்டு, மனிதனின் நோய் எதிரிப்பு சக்தி பாதிக்கப்படுகிறது. நோய் எதிர்ப்பு சக்தி குறையாத போது எந்தக் கிருமியும் உடம்பில் நோயை உண்டாக்க முடியாது. எடுத்துக்காட்டாக மஞ்சள் காமாலை, எய்ட்ஸ் என்ற இரண்டு நோய்களைக் கூறலாம்.

மஞ்சள் காமாலையை உண்டாக்கும் நுண் கிருமிகள் (Viruses) உடம்பில் புகுந்தாலும் அம்மனிதனின் எதிர்ப்பு சக்தி (Immunity) குறையாதவரை, நோயின் குணங்கள் தோன்றா. இப்படிப்பட்டவர்களைத் தான் “சுமந்து செல்பவர்” (Carriers) எனக் கூறுகிறோம். இதேபோல்தான் எய்ட்ஸ் நோயிலும்.

## 1. உணவாதி செயல்கள்

நாம் அன்றாடம் உண்ணும் உணவில் ஆறு சுவைகளும் இருத்தல் அவசியம். ஆனால் எந்தச் சுவை உணவையும் மிக அதிகமாகச் சாப்பிடும் பழக்கம் கூடாது. எடுத்துக்காட்டாகச் சிலர் காரமான பொருள்களை விரும்பிச் சாப்பிடுவர். வேறு சிலர் இனிப்பை அதிகமாக விரும்புவர். அந்தந்த உடல்வாகு, உடல் நிலைகளுக்குத் தக்கவாறு அறுசுவை உண்டிகளை அன்றாடம் உண்ணவேண்டும். சில சுவை உணவுகள் மட்டும் அதிகமானால், அச்சுவைகளுக்கேற்ப வளி, அழல், ஐயம் ஆகிய சக்திகள் பாதிக்கப்படும். படைத்தல், காத்தல் அழித்தல் தொழில்கள் பாதிக்கப் பட்டால், உடம்பில் அதற்கேற்றக் கோளாறுகள் உண்டாகக்கூடும். உடம்பிலுள்ள உறுப்புகள் இதனால் பாதிக்கப்பட்டால், ஏற்கனவே உடம்பில் புகுந்த கிருமிகளோ புதிதாக நுழையும் கிருமிகளோ நோய்க் குறி குணங்களை உண்டாக்கக்கூடும். எனவே இயற்கை எதிர்ப்பு சக்தி பாதிக்கப்படாமலும் அச்சக்தி தன் நிலையில் இருக்கும்படியும் அறுசுவை உணவுகளை முறையாகச் சாப்பிட வேண்டும்.

மனிதனுக்கு மூன்று குணங்கள் கூறப்பட்டுள்ளன. அவை சத்துவம், இராசதம் மற்றும் தாமதம் என்பனவாகும். உணவுகளிலும் மேற்சொன்ன முக்குணங்கள் உள்ளன. எடுத்துக்காட்டாக சைவ உணவு, சத்துவ உணவாகக் கருதப்படுகிறது. மாமிச உணவு இராசதம் மற்றும் தாமத குணங்களை உண்டாக்கும். எந்த உணவானாலும் எதிர்ப்பு சக்தியைக் குறைக்கும் மாறுபாடான உணவுப் பழக்கங் களால் உடலும், உயிரும் பாதிக்கப்படுகின்றன.

## 2. இச்சாதி செயல்கள்

மனிதன் தன் அன்றாட வாழ்க்கையில் சிலவற்றை முறையாகக் கடைப்பிடிக்க வேண்டும். சாப்பிடுதல், உழைத்தல், தூங்குதல் போன்றவை முக்கியமானவை. முன்சொன்னது போல், சாப்பிடுவதில் செரிமானமாகாத அளவுக்கு சாப்பிட்டால் வயிற்றில் கோளாறுகள் உண்டாகும். சாப்பிடக் கூடாதவற்றைச் சாப்பிட்டாலும் கோளாறுகள் உண்டாகும். முன் உண்ட உணவு முழுவதும் செரித்தபின், நல்ல பசியுண்டானபின் சாப்பிட வேண்டும். இவற்றைத் திருவள்ளுவர் மருந்து என்ற அதிகாரத்தில் மிகத் தெளிவாகக் கூறியுள்ளார்.

*அற்றால் அளவறிந்துண்க அஃதுடம்பு*
*பெற்றான் நெடிதுய்க்குமாறு*

என்பதே அப்பாடல்

**இதன் பொருள் :** பசித்தாலும் தன் செரிமான சக்திக்கேற்ப அளவோடு உண்ணவேண்டும். ஏனெனில் உடம்பையுடைய மனிதன் நீண்டநாள் வாழ்வதற்காக.

அதைப்போலவே தூக்கம் கெடல் சில லாகிரிப் பொருள்களை மிகுதியாகப் பயன்படுத்துதல், பெண்ணாசை அதிகம் வைத்தல் போன்ற செயல்களைத் தவிர்க்க வேண்டும். இவற்றைப் போன்றே உடலுக்கும், உள்ளத்திற்கும் ஊறு விளைவிக் கின்ற தீய பழக்கங்களை விட்டொழித்தல் வேண்டும் . இயலவில்லையென்றால், அதனால் உண்டான கெடுதல்களை உடனே நீக்க முயலவேண்டும். மீண்டும் அப்படிப்பட்டச் சூழ்நிலை உருவாகாமல் பார்த்துக்கொள்ள வேண்டும். இல்லை யெனில் உள்ளம், உடல் இரண்டும் பாதிக்கப்பட்டு நோய் உண்டாகக் காரணமாகும்.

எடுத்துக்காட்டாகச் சாராயம் குடிக்கும் பழக்கத்தை எடுத்துக் கொள்வோம். சாராயத்தை மிகுதியாகப் பருகிவந்தால், உடலின் மிக முக்கிய உறுப்புகளில் ஒன்றான ஈரல் கெடும். ஈரல் கெட்டுவிட்டால், உடம்பில் நடக்க வேண்டிய முக்கிய உயிர் வேதியியல் பணிகள் பாதிக்கப்படும். இதனால் தொடர்புள்ள மற்ற உடற்கருவி களும் பாதிக்கப்படும். இச்சூழ்நிலையில், வெளியிலிருந்து உட்புகும் கிருமிகளோ அல்லது ஏற்கனவே உடம்பில் இருக்கும் கிருமிகளோ, எளிதில் வளர்ச்சியடைந்து நோய்களை உண்டாக்கும்.

## 3. அண்டத்தின் மாற்றம்

அண்டம் என்ற சொல் வெளி, ஆகாயம், சுற்றுச்சூழல் ஆகியவற்றைக் குறிக்கும். அண்டவெளியிலிருந்துதான் காற்று உலவிக் கொண்டிருக்கிறது.

அண்டவெளியில்தான் மேகமண்டலமும், புகை மண்டலங்களும் உள்ளன. அண்ட வெளியிலிருந்துதான் சூரியன் தன் கதிர்களை அனுப்புகிறது. இயற்கையாக நடக்கின்ற இச்சக்திகள், செயற்கையால் ஓரளவு பாதிக்கப்படுகின்றன. எடுத்துக் காட்டாக ஓசோன் (Ozone) மண்டலம், சூழ்நிலைக் களங்கத்தால் (Pollution) பாதிக்கப்பட்டிருக்கிறது.

இதைப்போல் இயற்கைச் சக்திகளும், செயற்கைச் சக்திகளும் மனிதனையும் பாதிக்கின்றன. கடும் கோடையில், நல்ல மழை பெய்யாமல் மழைத்தூறல் மட்டும் விழுந்தால் (Drizzling) பூமியின் வெப்பம் மேலெழும்புகிறது. அச்சூழ்நிலையில் அம்மை, சீதக்கழிச்சல் போன்ற நோய்கள் உண்டாகின்றன. அதற்குக் காரணம், அந்தச் சூழ்நிலையில் மேற்சொன்ன நோய்களை உண்டாக்கும் கிருமிகள் பலம் பெற்று வளரக்கூடிய நிலை உண்டாவதுதான். அதைப்போலவே மழைக்காலத்தில் அதிக மழைப் பெய்து, வெள்ளங்கள் பெருகும் காலங்களில், காலரா (Cholera) என்ற நோய் வர வாய்ப்புண்டாகிறது. காரணம் காலரா நோயை உண்டாக்கும் கிருமிகளுக்கு மழைக்காலம் சிறந்த பருவமாக அமைந்து விடுவதுதான்.

மேற்சொன்ன நோய்கள் பற்றியும், அவற்றிற்குரிய மருத்துவ முறைகள் பற்றியும் சித்த மருத்துவத்தில் விளக்கப்பட்டுள்ளன. அதுமட்டுமன்றி மனிதன் தன் இயற்கைச் சக்தியும், எதிர்ப்பு சக்தியும் குன்றாமல் இருப்பதற்காகக் கால ஒழுக்கங்களை முறையாகக் கடைப்பிடித்து வந்தால் உடலும், உயிரும் பலம் பெற்று நோய் எதிர்ப்பு சக்தியுடன் வாழ முடியும். இது சித்தர் அறிவியலில் ஒரு பகுதியாகும்.

## கிருமி கொல்லிகள்

பல்வேறு வகையான நோய்களை உண்டாக்கும் கிருமிகளைக் கொல்வதற்குப் பல்வேறு வகையான கிருமி கொல்லி மருந்துகள் அலோபதி மருத்துவத்தில் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. இன்றும் புதிது புதிதாகக் கண்டுபிடித்து வருகிறார்கள். இப்படிப்பட்டக் கிருமி கொல்லிகள் சித்த மருத்துவத்தில் உண்டா ? இல்லை யெனில் எவ்வாறு கிருமிகளால் உண்டாகும் நோய்களைச் சித்த மருத்துவத்தில் தீர்க்கிறார்கள் என்ற கேள்வி பரவலாகக் கேட்கப்பட்டு வருகிறது.

சித்த மருத்துவத்தில் கிருமிகளை அழிக்கவல்ல மருந்துகள் உள்ளன. வெள்ளைப் பாடாணம், வீரம், பூரம், இலிங்கம் மற்றும் பாதரசம் போன்ற மருந்து

களுக்கு அந்த குணம் உண்டு என்றாலும் கிருமி கொல்லிகள் என்ற அடிப்படையில் சித்த மருந்துகளைக் கொடுப்பதில்லை. எடுத்துக்காட்டாக ஈரல் சம்பந்தமான நோய்களான காமாலை போன்றவற்றிற்குத் தொன்றுதொட்டுச் சித்த மருத்துவத்தில் கீழாநெல்லி என்ற மூலிகையைக் கொடுத்து வருகிறோம். இப்போது அறிவியல் அடிப்படையில் கீழாநெல்லிக்கு ஹெபடைட்டிஸ் பி என்ற நுண்ணுயிரியைக் (Hepatitis B Virus) கொல்லும் ஆற்றல் இருப்பதாகக் கண்டுபிடித்திருக்கிறார்கள். ஆனால் சித்த மருத்துவத்தில் கிருமி கொல்லிகள் (Antibiotics) என்ற அடிப்படையில் மருந்துகள் கொடுக்கப்படுவதில்லை. பின் எப்படி அக்கிருமிகள் அழிக்கப்படுகின ? அல்லது வெளியேற்றப்படுகின்றன என்பது கேள்வி.

ஏற்கனவே கூறியபடி, உயிரின் சக்திகளாகிய வளி, அழல், ஐயம் (வாதம், பித்தம், கபம்) ஆகிய மூன்றும் முறையே படைத்தல், காத்தல் அழித்தல் ஆகிய தொழில்களைச் செய்கின்றன. அகப்புறக் காரணங்களாலும் உணவாதி செயல்கள், இச்சாதி செயல்களின் மாறுபாடுகளாலும் உடல் பாதிக்கப்படும்போது, உடலில் நோய்க் குறி குணங்கள் உண்டாகின்றன. நாடியின் வாயிலாக உயிரானது வாத, பித்த, கபங்களின் நிலையைக் காட்டுகிறது. குறி குணங்கள், நாடி நிதானம் ஆகியவற்றின் அடிப்படையில் சித்த மருத்துகளைக் கொடுக்கும்போது, நோயின் குறி குணங்கள் மாறி வாத, பித்த, கப நாடிகளும் தன்னிலைக்கு வந்து விடுகின்றன.

வாத, பித்த, கப நாடிகள் தங்கள் இயற்கை நிலையான 1:1/2:1/4 என்ற நிலைக்கு வரும்போது, உடலின் எதிர்ப்புச் சக்தியும் தன் நிலைக்கு வந்துவிடுகிறது. அந் நிலையில், கிருமிகள் பலம்பெற்று நோயை உண்டாக்கும் சூழ்நிலை உடம்பில் மாறிவிடுகிறது. இதனால் ஒன்று கிருமிகள் உடலில் வாழ முடியாமல் வெளியேறி விடும் அல்லது அவை அழிந்துவிடும். இதுவே சித்த மருத்துவத்தின் உண்மை யாகும். எனவே உயிர்க்கொல்லி மருந்துகள் என்று ஒவ்வொரு கிருமிக்கும் தனித்தனி மருந்துகள் தேவையில்லை.

## தமிழரின் அன்றாட வாழ்க்கையில் அறிவியல்

‘வைகறைத் துயிலெழு’ என்பது தமிழ்ச் சான்றோர் வாக்கு. சூரிய உதயத்திற்கு முன்புள்ள நேரம்தான் வைகறை. இந்த நேரத்தில் எழுவதால் என்ன பயன் என்று அறியாமல் நம் சான்றோர்கள் இதனைக் கூறவில்லை. நவீன அறிவியலார்

கூற்றுப்படி வைகறையில் எழுந்திருப்போர்க்கு செரிப்ரோ ஃபைனல் புளுயிட் (Cerebro Spinal Fluid) என்றப் பெருமூளைத் தண்டுவட நீர்க் கலங்கலில்லாமல் தெளிவாக இருக்கும். அந்த நீர்த் தெளிவாக இருப்பதால், முளையும் தெளிவாக இருக்கும். அதனால் மனமும் தெளிவாக இருக்கும்: மாணவர்கள் பாடங்களைப் படித்தால் மூளையில் தெளிவாகப் பதியும். அன்றைய பணிகளைச் செவ்வனே செய்வதற்குச் சுறுசுறுப்பும் இருக்கும்.

அதுமட்டுமின்றி சூரிய உதயத்திற்கு முன், வெளியிலுள்ள காற்று ஓசோன் (Ozone) என்ற சிறந்த பொருளையும் கொண்டிருக்கும். இந்த ஓசோன், உடல் நலத்திற்கு மிகுந்த நன்மை பயப்பதாகும். காக்கும் கடவுளாகிய திருமாலின் கோயில்களில் துளசியும், நீரும் கொடுப்பதன் உண்மை என்னவெனில், துளசியில் ஓசோன் இருப்பதுதான். எனவே தமிழரின் வாழ்க்கை முறை அடிப்படையில் அறிவியல் சார்ந்ததாகும்.

ஒவ்வொருவரும் வைகறைத் துயிலெழ வேண்டும். எழுந்தவுடன் பற்களைத் துலக்க வேண்டும். இயற்கையில் பிறந்த மரங்களின் குச்சிகளையே பல் துலக்கப் பயன்படுத்தவேண்டும். அக்குச்சிகளிலும் சிறந்தவை எவை என்று சித்தர்கள் கூறியிருக்கிறார்கள்.

*வேலுக்குப் பல்லிறுகும் வேம்புக்குப் பற்றுலங்கும்*
*பூலுக்குப் போகம் பொழியுங்காண் – ஆலுக்குத்*
*தண்டாமரையாகும் காருவனே நாயுருவி*
*கண்டால் வசீகரமாங் காண்.*

மேற்சொன்ன பாடலில் கூறப்பட்ட கருவேலங்குச்சி, வேம்பின் குச்சி, பூலாங்குச்சி, ஆலம் விழுது மற்றும் நாயுருவி வேர் ஆகிய ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொரு பலன் உண்டு எனச் செல்லி இருக்கிறார்கள்.

நவீன அறிவியல் ஆராய்ச்சிப்படி வேப்பங்குச்சியைக் கொண்டு பல் துலக்கி வந்தால், பல் ஈறுகளிலும், வாயின் உட்புறத் தசைகளிலும் வரும் புற்று நோயை வராமல் தடுக்க முடியும் என நிரூபிக்கப்பட்டுள்ளது. மற்ற குச்சிகளுக்குள்ள பலன்களைப் பாடல் சொன்னாலும் வருங்காலத்தில் அவற்றைப் பற்றியும் அறிவியலார் எழுதினால்தான் நமக்கு விழிப்புணர்ச்சி வரும்.

பல் துலக்கியபின் குளிக்க வேண்டும். பொதுவாக குளிர்ந்த நீரில்தான்

குளிப்பது வழக்கம். வெளியில் செல்லும் வாய்ப்புள்ளவர்களுக்கு, 'சனி நீராடு' என்ற சான்றோர் வாக்குக்கிணங்க, மலையிலே சனித்துவரும் நீரில் குளிப்பது சாலச் சிறந்தது. ஏனெனில் மலையில் பிறந்த நீரில் பல்வேறு மூலிகைகளின் சத்துகள் கலந்திருக்கும். அவை உடல் நலத்திற்கு மிகவும் நன்மை பயப்பன.

## வாசல் தெளித்துக் கோலம் போடுதல்

அக்காலத்தில் மட்டுமின்றி இக்காலத்திலும் வாசலைக் கூட்டித் தெளித்து கோலம் போடுவது தொடர்கிறது. கிராமங்களில் இன்னும் பசுஞ்சாணத்தைக் கரைத்து வாசலில் தெளிக்கும் பழக்கம் தொடர்கிறது. வாசல் தெளிப்பதால் தரையிலுள்ள மண் மேலெழும்பி வாயிலும், மூக்கிலும் ஏறி, ஒவ்வாமையை உண்டாக்காமல் இருக்கும். சாணத்தைக் கரைத்துத் தெளிப்பதால், சாணத்தி லுள்ள 'அனோரேபிக் பாக்டீரியா' (Anorobic Bacteria) என்னும் கிருமிகள் மண்ணிலுள்ள கிருமிகளைக் கட்டுப்படுத்திக் கொல்லவும் செய்யும் வல்லமை யுடையவை.

அக்காலத்தில் கோலமிடுவதற்குப் பயன்பட்டது பச்சரியின் மாவுதான். இக்காலத்தில் அது கட்டுபடியாகாதென்று விட்டுவிட்டார்கள் போலும்.

## பச்சரிசிமாவில் கோலம் போடுவதன் தத்துவம் என்ன?

மற்றவர்களுக்கு அன்னதானம் செய்தல் புண்ணியம். அதிலும் ஆயிரம் பேருக்கு அன்னதானம் செய்தல் பெரும் புண்ணியமாகும். வசதி படைத்த பணக்காரர்கள் அக்காலத்தில் ஆயிரம் பேருக்கு அன்னதானம் செய்தார்கள். ஆனால் ஏழை என்ன செய்வான்? அந்த ஏழையும் ஆயிரம் உயிர்களுக்கு அன்னதானம் செய்யும் வழிவகைகளை நம் முன்னோர்கள் சொல்லி வைத்தார்கள்.

பச்சரிசி மாவில் கோலம் போட்டால் அம்மாவை ஆயிரக்கணக்கான எறும்புகள் சாப்பிட்டபின், மீதமிருக்கும் அரிசிமாவை எடுத்துச் சென்று தங்கள் வளைகளில் சேமித்து வைக்கும். எனவே ஆயிரக்கணக்கான உயிர்களுக்கு உணவளித்து மகிழ்ச்சிப்படுத்தும். இந்த முறையைப் போல் ஆன்ம நேயத்தையும், ஆன்மிகத்தை யும் சிறப்பிக்கும் செயல் வேறு உண்டோ எனில் இல்லையெனக் கூறலாம். "உன்னிலும் என்னிலும் இருக்கும் ஈசன், ஈயெறும்புடலிலும் இருக்கிறான்" என்பது நினைவு கூறத்தக்கவை. ஆயிரம் உயிர்களுக்கு உணவளித்த அந்த மகிழ்ச்சி,

உணவளித்தவரின் உள்ளம், உடல் ஆகிய இரண்டையும் ஆரோக்கியமாக வைத்திருக்கும் அல்லவா ?

கோலம் போடுவதில் இன்னொரு தத்துவமும் அடங்கியிருக்கிறது. பல புள்ளிகள் வைத்து, பல வடிவங்களில் வளைத்து போடப்படுகின்ற கோலம், பார்ப்பவரின் மனதைக் கவரும். யாராவது அந்த வீட்டில் தகராறு செய்ய வேண்டும் என்று நினைத்து வருகின்றபோது, அந்த அழகுக் கோலங்கள், வருபவரின் எண்ணத்தைச் சிதற வைக்கிறது. அதனால், வருபவர் கோபம் தணிந்துதான் வீட்டுக்குள் வருவார். இப்படிப்பட்ட மனோவசிய சக்தி கோலங்களுக்கு உண்டு என அறிந்தே முன்னோர்கள் கோலம் போடுவதைப் பரவலாகச் செய்தார்கள் எனக் கருத இடமிருக்கிறது.

# 6

# சித்தர் அறிவியலும் ஆன்மீகமும்

மரு. கி. நடராசன்

## முன்னுரை

ஆன்மாவாகிய உயிர் இகம் எனப்படும் இப்பிறப்பில் கடைப்பிடிக்க வேண்டிய ஒழுக்க நெறிகளே ஆன்மீகமாகும். ஆன்மாவிற்கு ஒளியேற்ற மனிதன் தன் பிறவிகளில் கடைப்பிடிக்க வேண்டிய ஒழுக்க நெறிகளே ஆன்மீகம் ஆகும். இதனையே வள்ளுவரும் "மனத்துக்கண் மாசிலனாதல் அனைத்தறன்" என மிகச் சுருக்கமாகவும் தெளிவாகவும் கூறியுள்ளார்.

இப்பிறப்பில் நல்லொழுக்கங்களைக் கடைப்பிடித்து வாழ்ந்தால் ஆன்மா தூய்மையாகும். அதனால், மறுபிறப்பில் நல்லதொரு பிறவி கிடைக்கும். அல்லது மறுபிறவியே இல்லாமல், இறைவனோடு ஒன்றியிருக்க முடியும். எனவே பிறவி தோறும் நல்வினைகளை இயற்றி ஒவ்வொரு பிறவியிலும் செய்த பாவங்களின் வல்லமையைக் குறைத்து, இறுதியில் பிறவியற்ற நிலையை அடைவதற்கு ஒவ்வொரு உயிரும் முயல வேண்டும். அதற்கே உரிய ஒழுக்கங்களையும் கடமைகளையும் தவறாது கடைப்பிடிக்க வேண்டும் என்பதே நியதி.

மனிதன் தன், தொன்றுதொட்டு வந்த அனுபவத்தினால் இயற்கையை மிக நன்றாகப் புரிந்து வைத்திருக்கின்றான். இயற்கையை மிக நன்றாக, முழுவதுமாகப் புரிந்து கொண்டவர்கள் சித்தர்கள்.

மனிதன் காட்டுவாசியாக இருந்த காலத்திலிருந்து, இயற்கையோடு போராடியும், இயைந்தும் வாழ்வது எப்படி என்ற அனுபவத்தை அடைந்தான். அப்படிப்பட்ட அனுபவங்களை முழுமையாக அடைந்தவர்களே சித்தர்கள்.

மனிதன் சிந்திக்கத் தெரிந்த நிலையை அடைந்த போது, உலகைப் பற்றியும், அதில் நடந்து வரும் மாற்றங்களைப் பற்றியும் சிந்திக்க ஆரம்பித்தான். உலகில் மனிதர்கள், மிருகங்கள், பறவைகள், தாவரங்கள் எனப் பல்வேறு உயிரினங்கள் தோன்றி, குறிப்பிட்ட காலம் வரை வாழ்ந்து, பின் மறைகின்றன. மேற்சொன்ன இச்செயல்கள் யாருடைய கட்டுப்பாட்டுக்கும் அடங்காமல் தன்னிச்சையாக நடந்துகொண்டிருக்கின்றன. இச்செயல்களுக்கெல்லாம் காரணம் எது ? அல்லது யார் ? என்று பலர் சிந்திக்க ஆரம்பித்தார்கள். அவ்வாறு இவ்வுலகத்தின் தோற்றத்தைப் பற்றி பலர் சிந்தித்துத் தங்கள் கருத்துக்களை உலகிற்குச் சொன்னார்கள். அவையே சமயங்களாயின. அச்சமயங்களில் சிறப்பாக எடுத்துக் கொள்ளப்பட்டவை ஆறு சமயங்களாகும். அவற்றையே அறு சமயம் என்பர்.

சமயம் என்பது உலகத்தின் தோற்றத்தையும் ஒழுக்கத்தையும் பற்றி ஆராயப்பட்ட உண்மைகளாகும். அவை முழுவதும் ஆரம்ப கால அறிவியலாகக் கருதத்தக்கனவாகும். ஆனால் மனிதனின் கட்டுப்பாட்டிற்குள் அடங்காமல், தன்னிச்சையாக நடக்கின்ற செயல்களுக்கு ஏதோ ஒரு சக்திதான் காரணம் என்ற உண்மை தொக்கி நிற்பதால், பிற்காலத்தில் கடவுட் கொள்கையோடு விளக்கப்பட்டது. எனவே அறிவியலும் ஆன்மீகமும் இரண்டறக் கலந்தே நிற்கின்றன. அவற்றைப் பிரிக்கவே முடியாது.

மனித உயிருக்கு மேற்பட்ட ஒரு சக்தி உள்ளது என்பதை யாவரும் ஒத்துக் கொள்வர். அதன்படிப் பார்த்தால் அண்டத்திலும் இந்நிலவுலகிலும் நடக்கின்ற பல ஆக்கப்பாடுகள், மாற்றங்கள் போன்றவை அந்த மேம்பட்ட சக்தியினாலேயே நடக்கின்றன என்பதில் ஐயமில்லை. எனவே அறிவியலாயினும் ஆன்மீகமாயினும் அதில் மேம்பட்ட சக்தி சம்பந்தப்பட்டே இருக்கிறது. அந்த மேம்பட்ட சக்தி, ஆன்மாவிற்காகவே அனைத்து ஆக்கப்பாடுகளையும், மாற்றங்களையும் செய்து கொண்டிருக்கிறது. அதிலே மனிதன் குறுக்கிட்டுத் தன் அறிவுக்கு எட்டியவரையில் இயற்கையைப் புரிந்து கொள்ள முயன்றான். அதிலே ஆன்மீகம் என்ற சித்தர் கொள்கை ஒன்று. மற்றொன்று அறிவியல். சித்தர்கள் தங்கள் ஆராய்ச்சியில் கண்ட உண்மைகளை இயற்கையில் உள்ளபடியே சொல்லி வைத்தார்கள்.

அறிவியலார் உலகில் தோன்றியுள்ள பொருள்களை எடுத்து ஆராய்ந்து, இயற்பியல், வேதியியல், உயிர் வேதியியல், தாவரவியல், உயிரியல் எனப் பிரித்தார்கள். இந்த அறிவியற்படி எந்தவொரு ஆய்வு அல்லது பரிசோதனையிலும், எல்லாவற்றையும் நேரடியாகக் காண வேண்டும். கண்ணால் காண முடியாத, அறிவால் மட்டும் உணரக் கூடியவை மெய்ஞ்ஞானம் அல்லது ஆன்மீகம் எனப்படுகின்றன.

மணத்தை மூக்கு முகர்கிறது. முகரும் பொருளாகிய மூக்கைப் பார்க்க முடிகிறது. ஆனால் முகரப்படும் பொருளான மணத்தை, ஐம்புலன்களில் ஒன்றான முகர்தல் புலன் மட்டும் அறியும். ஆனால், கண்களால் பார்க்க இயலாது. அதே போல் ஒளி மற்றும் பிற புலன்களுமாகும். கண்களால் பார்க்க முடியாத, புலன்களால் மட்டும் அறியப்படும் பொருள்களை அறிவியலும் ஒத்துக் கொள்கிறது. இந்த ஐந்து அறிவுகளுக்கும் அப்பாற்பட்ட, மனித உயிர்களுக்கு மட்டும் இறையால் அளிக்கப்பட்ட ஆறாவது அறிவு ஒன்று உண்டு. இந்த ஆறாவது அறிவால் உணரப்படுவதையே மெய்ஞ்ஞானம் என்றும் ஆன்மீகம் என்றும் சித்தர்கள் சொன்னார்கள். இதற்குக் காரணமாக இருப்பது ஆன்மா. கருவியாக இருப்பது உடல்.

## சித்தர் அணுக் கொள்கை

நீண்ட காலத்திற்கு முன்பே சித்தர்கள் அணுவைப் பற்றிச் சொல்லி யிருக்கிறார்கள். இந்த உலகத்தின் தோற்றத்திற்கும் ஒடுக்கத்திற்கும் காரணமாக இருப்பது அணு என்றார்கள் சித்தர்கள். அணு என்றால் என்ன ? ஒரு பொருளை இறுதிவரைப் பிரித்துக் கொண்டே போனால், இறுதியில் பிரிக்க முடியாத மிக நுண்ணிய துணுக்காக இருப்பது அணுவாகும். இப்படிப்பட்ட அணுக்கள் பல கோடி ஒன்று சேர்ந்து ஒரு பொருளாகிறது. அப்பொருள் சில காலம் நிலைத்து நின்று, பின்னர் அணுக்களாகவே பிரிந்து விடுகிறது. இதுவே தோற்றமும் ஒடுக்கமுமாகும். சித்தர் கொள்கைப்படி அணுவிற்குள் பல கோடி துணுக்குகள் இருப்பதாகக் கருதப்படுகிறது. அவற்றில் நமக்குத் தேவையானவை பதி, பசு, பாசம் என்ற மூன்றுமாகும். பசுவையும், பாசத்தையும் பற்றியிருக்கின்ற தத்துவங்கள் (மெய்கள்) 96உம் அணு நிலையிலேயே இருக்கின்றன என்பதும் சித்தர் கருத்து.

## பதி

அணுவிற்குள் இருக்கின்ற மூன்று அநாதி நித்தியப் பொருள்களில் பதி என்பது பேரறிவுமயமானது. இதன் அருகிலேயே பாசம் என்ற பொருளும் இருந் தாலும் அந்தப் பாசத்தின் கவர்ச்சி, பதியாகியப் பேரறிவை ஒன்றும் செய்ய இயலாது. இந்தப் பதியே உலகின் தோற்றத்திற்கும் ஒடுக்கத்திற்கும் அனைத்து ஆக்கப்பாடு களுக்கும் காரணமாகிறது. இந்தப் பதி அனைத்து அண்டங்களிலும் இருக்கின்ற அத்தனை அணுக்களிலும் கலந்திருக்கிறது. அதே நேரத்தில் அவற்றைக் கடந்தும் இருக்கிறது. அத்தனை அண்டங்களிலுள்ள எல்லா அணுக்களிலும் பதி கலந்திருந் தாலும், அது ஒன்றே ஒன்றுதான். இதுவே சித்தர் ஆன்மீகக் கொள்கை.

## பசு

பசு, ஆன்மா, உயிர், அறிவு என்னும் பல பெயர்களில் குறிக்கப்படுவது. இது அணு நிலையிலேயே பாசத்தினால் கட்டுண்டு கிடப்பதனால் பசு என்ற பெயரைப் பெற்றது என்பர் சித்தர். இது அறிவு மயமானது. ஆயினும் தொன்றுதொட்டுப் பாசத்தின் கவர்ச்சியில் கட்டுண்டு கிடப்பதால் இதனைச் சிற்றறிவு என்று சித்தர்கள் குறிப்பிட்டார்கள். உடலிலுள்ள கருவிகளையும் தத்துவங்களையும் துணையாகக் கொண்டு, எல்லாவற்றையும் அறிவது பசுவாதலால் பசுவை அறிவு எனக் குறிப்பிட்டுள்ளனர் சித்தர்.

## பாசம்

இது அணுவிலுள்ள மூன்று பொருள்களுள் அறிவற்ற சடப் பொருளாகும். இதற்கு இயற்கையாகவே கவர்ச்சித் தன்மையுண்டு. இது பதிக்கும் பசுவுக்கும் இடையில் இடையறாது சுற்றிக் கொண்டேயிருக்கும் காரணத்தால், சிற்றறிவாகிய ஆன்மா, சடப்பொருளாகிய பாசத்தின் கவர்ச்சியால் ஆட்கொள்ளப்பட்டு, தன் இயற்கைத் தன்மையான அறிவு நிலை மறைக்கப்பட்டுச் சிற்றறிவாக நிற்கிறது. இதன் பிரிவுகளை ஆணவம், கன்மம், மாயை எனக் கூறுவர். சடப்பொருளாகிய பாசம்தான், உயிருக்கு உடலாக அமைகிறது.

மேற்சொன்ன சித்தர் கருத்துகளை ஒட்டி, நவீன அறிவியலும், அணுவில் நியூட்ரான் (Neutron), புரோட்டான் (Proton), எலக்ட்ரான் (Electron) என்ற மூன்று பொருள்கள் உள்ளன என்றும் அவற்றில் எலக்ட்ரான் என்பது, மற்ற இரண்டிற்கும் இடையில் இடையறாது சுற்றிக் கொண்டிருக்கிறது என்பது சித்தர் அணுக் கொள்கையோடு ஒப்பிடத்தக்கது. இதில் ஆன்மீகமும் அறிவியலும் விரவிக் கிடக்கின்றன

## படைப்பு

பேரறிவாகிய பதி, சிற்றறிவாகிய பசுவுக்கு, சடப்பொருளாகிய பாசத்தைக் கொண்டு ஓர் உடம்பை அமைத்துத் தருகிறது என்பது சித்தாந்தம். அறிவே உருவான ஆன்மா, அறிவற்ற சடப்பொருளாகிய பாசத்தின் கவர்ச்சியில் கட்டுண்டு கிடப்பது இயற்கைக்கு மாறானது. எனவே அப்பாசத்தை ஆன்மா விலக்கிக் கொள்ள வேண்டும். அப்படி விலக்குவதற்கு ஆன்மா செயல்பட வேண்டும். ஆன்மா தனித்துச் செயல்பட முடியாது. அது செயல்படுவதற்கு ஓர் உடம்பு வேண்டும். அந்த உடம்பைப் பாசத்தினால் உருவாக்கி பதி, பசுவுக்குக் கொடுக்கிறது. இதுவே படைப்பு.

## படைப்பின் நோக்கம்

ஆன்மா தன்னைப் பிணைத்திருக்கின்ற பாசத்தை விலக்கிக் கொண்டு, அறிவே வடிவாக வேண்டும். அதன் பின்னர்ப் பதியாகிய பேரறிவுடன் இணைய வேண்டும் என்பதே படைப்பின் நோக்கம்.

பாசத்தினால் பெற்ற உடம்பிற்குள் இருந்துகொண்டு, பசுவாகிய உயிர், நல்வினை, தீவினைகளை இயற்றுகிறது. அதன் இருவினைகளுக்கேற்ப பசுவுக்கு மீண்டும் பிறப்புக் கிடைக்கிறது அல்லது பிறவியே இல்லாத நிலையை அடைகிறது. இதைத்தான் வீடு பேறு எனக் கூறுகிறார்கள்.

இதுவரை சொல்லி வந்தவை யாவும் ஆன்மீக அடிப்படையில் உள்ளன வாயினும் அவற்றில் அறிவியலும் கலந்திருப்பதை நம்மால் உணர முடிகிறது. ஆன்மீகம் எனக் கூறுங்கால், அது இறையோடு சம்பந்தப்பட்டு விடுகிறது. அறிவியல் என்றாலும் அது இறையேயாகும். அறிவியல் உயிரோடு சம்பந்தப்பட்டிருப்பதால் இறைக்கு அங்கு முக்கியத்துவம் தரப்படுவதில்லை. ஆன்மீகத்தில் அறிவியல் சம்பந்தப்பட்டிருந்தாலும், இறைக்கு முக்கியத்துவம் அளிக்கப்படுகிறது.

## தத்துவங்கள் 96

தத்துவம் என்ற சொல்லுக்கு உண்மை என்பது பொருள். உடலைப் பற்றிய உண்மைகள் 96 ஆகும். இத்தத்துவங்கள் உயிரையும், உடலையும் ஆட்கொண்டு, அவற்றைச் செயல்பட வைக்கின்றன. இத்தத்துவங்களைக் கருவிகளாகக் கொண்டு ஆன்மா உடம்பில் செயல்படுகிறது. இத்தத்துவங்களை இரு பகுதிகளாகப் பிரிக்கலாம். அவை :

1. அருவ தத்துவங்கள்
2. உருவ தத்துவங்கள்

### 1. அருவ தத்துவங்கள்

1. புலன், 2. கன்மேந்திரிய விடயம், 3. கரணங்கள், 4. நாடி, 5. வாயு, 6. கோசம், 7. ஆதாரம், 8. மண்டலம், 9. மலம், 10. தோடம், 11. ஈடனை, 12. குணம், 13. வினை, 14. ராகம், 15. அவத்தை.

மேற்குறித்த் தத்துவங்கள் எல்லாம் ஐம்பொறிகளால் உணரப்பட முடியாதவை. ஆறாவது அறிவால் மட்டும் உணரப்படக் கூடியவை. எல்லாத் தத்துவங்களும் ஆன்மாவைச் சார்ந்தவையேயாகும்.

புலன் – 5

மெய், வாய், கண், மூக்கு, செவி என்ற ஐந்து பொறிகளுக்குரியவை ஐந்து புலன்களாகும். அவையாவன :

1. மெய் – தொடு உணர்வு (அறிதல்)
2. வாய் – சுவை (அறிதல்)
3. மூக்கு – மணம் (அறிதல்)
4. கண் – பார்வை (அறிதல்)
5. செவி – ஒலி (அறிதல்)

எடுத்துக்காட்டாகக் கண் என்ற உறுப்புத் தன் அமைப்பில் கெடாமல் இருந்தால், பார்வை என்ற புலன் அதற்குக் கிடைக்கும். அந்தப் பார்வை என்ற புலனை உண்டாக்கித் தருவதே ஆன்மாதான். ஆன்மா இல்லாத உடலில், பார்வை என்ற புலன் கிடையாது.

நவீன அறுவை மருத்துவத்தில், இறந்தவர்களின் கண்களை எடுத்து, உயிரோடுள்ள, கண் கெட்டுப் போனவர்களுக்குப் பொருத்தப்படுகிறது. அதே கண்களை எடுத்து, ஒரு பிணத்திற்குப் பொருத்தினால் அங்கே பார்வை என்ற புலன் உண்டாகாது. காரணம் அந்த உடம்பில் ஆன்மா இல்லை. எனவே எல்லாத் தத்துவங்களுமே ஆன்மாவைப் பற்றியவையாகும்.

இதைப் போலவே மற்ற பொறிகளும், புலன்களும் அமைகின்றன. உறுப்புப் பழுதடைதல், செயல்பாட்டில் குறை என இரண்டில் எது ஏற்பட்டாலும், ஆன்மா அதனைச் சரி செய்ய முயலும். ஏற்பட்டிருக்கின்ற குறையின் தன்மையைப் பொறுத்து, இயற்கையாகவே அது சீர்படலாம் அல்லது சீர்படாமலும் போகலாம்.

## 2. உருவ தத்துவங்கள்

1. பூதம்–5.
2. பொறி – 5
3. கன்மேந்திரியம் – 5
4. ஆசயம் – 5
5. கோசம் – 5

## பூதம் – 5

ஆகாயம், வாயு, தீ, நீர், மண் ஆகிய ஐந்து பூதங்களையும் ஐம்பொறி புலன்களால் நம்மால் உணர முடியும். ஐம்பொறிகளால் உணரப்படுபவை அனைத்தும் உருவப் பொருள்களாகவே கருதப்படும்.

மேற்சொன்ன ஐந்து பூதங்களின் தன்மைகளைக் கொண்டவை நமது உடம்பில் இருக்கின்றன. அவற்றிற்குப் புறக் கருவிகள் எனப் பெயர். அவை மொத்தம் இருபத்தைந்து ஆகும். இப்புறக் கருவிகளிலும் அருவ தத்துவங்கள் உள்ளன. அவையாவன : 1. பித்தத்தின் கூறாகிய தூக்கம், அச்சம், சோம்பல், மைதுனம் என்பவையும் 2. வளியின் கூறாகிய ஓடல், நடத்தல், நிற்றல், இருத்தல், கிடத்தல் என்பவையும் 3. ஐயத்தின் கூறாகிய காமம், உட்பகை, லோபம், மோகம், மதம் என்பவையுமாகும்.

மேற்படி எல்லாத் தத்துவங்களுக்கும் உறுதுணையாக நின்று இயங்குவது ஆன்மாவாகும். ஆன்மா இல்லையேல் மேற்படி தத்துவங்களே இல்லை. எனவே ஆன்மா இணைந்த இத்தத்துவங்களை ஆன்மீகத்தின் பாற்பட்டவை என்கிறோம்.

ஒரு எட்டு வயதுச் சிறுமி, பல பெரிய கணித மேதைகளை விடவும், கணிதம் சம்பந்தப்பட்ட புதிர்களுக்கு விடையளித்தாள் எனச் செய்தித்தாள்களில் படித்திருக்கிறோம். அந்தப் பெண்ணின் வயதும், உடலும் சிறிதானாலும், அந்த உடம்பில் இயங்கும் ஆன்மா ஏற்கனவே மிகவும் பக்குவப்பட்டதாக இருந்தால்தான், அச்சிறு வயதில், அந்தச் சிறிய உடலில், இவ்வியத்தகு சாதனைகளைச் செய்திருக்க முடியும். எனவே ஆன்மாவை எவ்வகையிலாவது புனிதப்படுத்தி, பலப்படுத்தும் பயிற்சிகள் செய்தால், ஆன்மாவினால் எதனையும் சாதிக்க முடியும் எனச் சித்தர்கள் கண்டுபிடித்துக் கூறியிருக்கிறார்கள். அவையே அட்டாங்க யோகங்களாகும்.

## நோய்களின் அடிப்படையில் தத்துவங்கள்

அருவ தத்துவங்கள் பாதிக்கப்பட்டால் உருவ தத்துவங்களும், உருவ தத்துவங்கள் பாதிக்கப்பட்டால் அருவ தத்துவங்களும் பாதிக்கப்படுகின்றன.

ஒரு மனிதனுக்கு சில காரணங்களால் அதிகமான மனக்கவலை உண்டாவதாக வைத்துகொள்வோம். அக்கவலை தொடர்ந்து நீடித்தால், அதுவே அம்மனிதனின் மூளையையோ, இதயத்தையோ, வயிற்றையோ பாதிக்கக் கூடும். இதனால் பல சிக்கல்கள் உடம்பில் உண்டாகக் கூடும். வயிற்றுக் கோளாறு உண்டாகிப் புண் முதலியனவும் உண்டாகலாம். இது ஒப்புக் கொள்ளப்பட்ட அனுபவ உண்மை.

மனம் என்ற தத்துவம், மூளை, இதயம் போன்ற கருவிகளின் துணை கொண்டு, ஆன்மாவினால் உண்டாக்கப்படும் தத்துவம். இத்தத்துவம் அருவமாக (abstract) இருப்பினும், உருவமாகிய உடற் கருவிகளைப் பாதிக்கிறது.

அதே போல், ஒரு மனிதனுக்கு வெட்டுக்காயம் உண்டாவதாகக் கொள்வோம். அதனால் உண்டான வலி, குருதிச்சேதம், அதனால் உண்டான ஆயாசம் இவை யெல்லாவற்றையும் அனுபவிப்பது ஆன்மாவேயாகும். ஆன்மாவால் உண்டாக்கப்பட்ட மனம் என்ற தத்துவத்தின் வாயிலாகவும், பிற தத்துவங்களின் வாயிலாகவும் ஆன்மா அந்த வேதனையை அனுபவிக்கிறது. எனவே அருவ, உருவ தத்துவங்கள் அனைத்தின் செயல்பாட்டிற்கும் ஆதாரமாயிருப்பது ஆன்மாவே ஆகும். இந்த ஆன்மாவைத் தூய்மைப்படுத்தவும், பலப்படுத்தவும், அதன் மூலம் இறைவனைக் காணவும் பிறவிப் பெருந்துன்பம் நீங்கவும் பல்வேறு வழிகள் பல்வேறு சமயங்களில் கூறப்பட்டுள்ளன. அவற்றைக் கடைப்பிடித்து ஒழுகி, ஆன்மாவைத் தூய்மைப் படுத்துவதே பிறப்பின் நோக்கம் என்பது சித்தர் கொள்கையாகும்.

எனவே மேற்சொன்ன தத்துவங்களெல்லாம் ஆன்மாவிற்காகவே இறைவனால் உண்டாக்கப்பட்டவை. இவையெல்லாம் மருத்துவத்திற்கு மட்டுமின்றி, வீடு பேற்றுக்கும் பயனுடையவை என்பதே ஆன்மீகமாகும்.

## மெய் (தொடு உணர்வு)

உடம்பை மற்றவர் தொடும் போது, தொடுபவர் அறியும் குளிர்ச்சி, வெப்பம் முதலியனவும், தொடப்படுபவருக்கு உண்டாகும் வலி, உணர்வற்றத் தன்மை முதலியனவும் தொடு உணர்வால் அறியப்படுகின்றன.

தோலில் உண்டான தடிப்பு, இதர மாறுபாடுகள், தோலுக்கு அடியிலிருக்கும் தசைகள், தசைநார்கள், நரம்பு உயிரணுக்கள் (Nerve cells) எலும்புகள், நாளங்கள் (அசுத்த ரத்தக் குழாய்கள்), நாடிகள் (சுத்த ரத்தக் குழாய்கள்) ஆகியவை மாறுபாடு அடைந்திருந்தால், தொடு உணர்வு தெரியாத நிலையிருக்கும். அதாவது, தொடு உணர்வுக்கு ஆதாரமாகிய நரம்பு உயிரணுக்கள் கெட்டிருந்தாலும், அல்லது அந்த நரம்பு உயிரணுக்கள் அளிக்கும் தொடு உணர்வை மேற்சொன்ன தசை போன்றவை, சில காரணங்களால் தடுத்தாலும், தொடு உணர்வை, தொடப்படும் மனிதன் உணர முடியாது. தசை முதல் நரம்பு ஈறாகவுள்ள உருவ தத்துவங்கள் இருந்தாலும், தொடு உணர்வுக்குள்ள மின்காந்த சக்தியை ஆன்மாதான் நரம்புக்குக் கொடுக்கிறது. இவை பழுதடைந்தால் ஆன்மாதானே அவற்றைச் சரி செய்ய முடியும். இதுவே இயற்கை. அப்படி ஆன்மாவினால் சரி செய்ய முடியாத போது, ஆன்மாவுக்குத் துணைக் கரம் நீட்டி உதவுவது தான் சித்த மருத்துவம்.

மேற்சொன்னவற்றில் உறுப்புக் கேடடைதல் (Organic damage) மற்றும் செயல்திறன் குறைதல் (Functional disorders) என இருவகை உண்டு. இவற்றை மருத்துவத்தால் சரி செய்ய வேண்டும்.

## வாய் (சுவை)

சுவை என்ற தத்துவத்திற்கு நாக்கும், அதில் ஊறுகின்ற உமிழ்நீரும் உருவ தத்துவங்களாக அமைகின்றன. ஆனால் சுவை என்ற தத்துவத்தை உணர்வது ஆன்மா மட்டும்தான். அதற்குக் கருவிகளாக இருப்பவை நாக்கின் நரம்புகளும் அதில் செயல்படும் மின்காந்த அலைகளுமாகும்.

அந்தச் சுவைகள் மொத்தம் ஆறு. அவை உடம்பில் தங்களுக்கே உரிய இயற்கைச் சக்தியால் வளி, அழல், ஐயம் ஆகிய உயிர்த் தாதுக்களின் மாத்திரையைக் கூட்டவோ குறைக்கவோ சமனப்படுத்தவோ செய்யும் ஆற்றல் பெற்றவை.

ஆன்மாவினால் சுவைகளையும், அவற்றினால் உண்டாகும் விளைவு களையும் ஏற்றுக் கொள்ளவோ, எதிர்க்கவோ அல்லது தள்ளிவிடவோ முடியும். அச்சுவைகளை மாற்றவும் முடியும். இது ஆன்மாவின் இயற்கைச் சக்தியைப் பொருத்தது.

## கண் (பார்வை)

கண் என்ற கருவியின் வாயிலாகப் பார்வை என்ற தத்துவத்தை (மெய்யை), ஆன்மா தருகிறது. அந்தக் கண் என்ற உருவ தத்துவம் பழுதடைந்திருந்தால் பார்வை என்ற அருவ தத்துவத்திற்கு அது இடைஞ்சலாயிருக்கும். அந்தப் பழுதடைவை ஆன்மாவே சரிசெய்து கொள்ள முயலும். முடியாவிட்டால், மருத்துவத்தின் துணை கொண்டு அந்தப் பழுதைச் சரி செய்ய ஆன்மா துணை நிற்கும்.

## மூக்கு (மணம்)

மூக்கு என்ற உருவ தத்துவம் வாயிலாக மணம் என்ற அருவ தத்துவத்தை ஆன்மா உணர்கிறது. உருவ தத்துவமாகிய மூக்கில் கோளாறுகள் ஏற்பட்டால் ஆன்மாவே அதனைச் சரி செய்துகொள்ள முடியும். அது முடியாவிட்டால் மருத்துவத்தின் துணைகொண்டு அதனைச் சரி செய்ய ஆன்மா துணை செய்யும்.

## செவி (கேட்டல்)

செவி என்ற உருவ தத்துவம், கேள்வி அல்லது கேட்டல் என்ற அருவ தத்துவத்திற்குக் கருவியாக உள்ளது. செவி என்ற உருவ தத்துவத்தில் கோளாறுகள் ஏற்பட்டால், ஆன்மாவே அதனைச் சரி செய்து கொள்ள முயலும். அது முடியாவிட்டால் மருத்துவத்தின் துணைகொண்டு அதனைச் சரி செய்ய ஆன்மா துணை புரியும்.

மெய் என்ற உருவ தத்துவம், வாயு என்ற பூதத்தின் தொடர்பினால், தொடு உணர்வு என்ற தத்துவத்தை, ஆன்மாவை உணரச் செய்கிறது.

வாய் என்ற உருவ தத்துவம் நீர் என்ற பூதத் தொடர்பினால், சுவை என்ற அருவ தத்துவத்தை ஆன்மா உணரும்படிச் செய்கிறது.

கண் என்ற உருவ தத்துவம் தீ என்ற பூதத்தின் தொடர்பினால், பார்வை என்ற தத்துவத்தை, ஆன்மாவை உணரச் செய்கிறது. அண்டத்திலுள்ள சூரியன் போன்ற இயற்கைச் சக்திகளும், தீ, மின் ஒளி போன்ற செயற்கைச் சக்தி களும் பார்வை என்ற தத்துவத்திற்குத் துணைபுரிகின்றன.

மூக்கு என்ற உருவ தத்துவம் வாயு என்ற பூதத்தின் தொடர்பு கொண்டு மணம் என்ற அருவ தத்துவத்தை ஆன்மா உணரும்படிச் செய்கிறது.

செவி என்ற உருவ தத்துவம், விண் என்ற பூதத் தொடர்பினால் காற்று என்ற பூதம் உண்டாக்கும் ஒலி என்ற அருவ தத்துவத்தை, ஆன்மா கிரகிக்கத் துணைபுரிகிறது.

எனவே அருவ, உருவ தத்துவங்கள் அனைத்தும் ஆன்மாவினாலேயே செயல்படுகின்றன. ஆன்மாவின் துணையினாலேயே சரி செய்யப்படுகின்றன. முடியாத நிலையில் மருத்துவம் இதற்குத் துணைபுரிகிறது.

ஆனால் சித்த மருத்துவத்தின் ஓர் அங்கமாகிய அட்டாங்க யோகம் என்ற பயிற்சிகள் ஆன்மாவைப் பலப்படுத்தக் கூடியவை. அப்பயிற்சிகளில் வெற்றி பெற்றால் அருவ, உருவ தத்துவங்கள் யாவும் பலப்பட்டு, எந்த நோயும் உடலையோ, உயிரையோ அணுக இயலாமல் பாதுகாக்கும்.

## அந்தக்கரணங்கள் – 5

அந்தக்கரணங்கள், ஐம்பூத அடிப்படையில் ஐந்து ஆகும். அவை :

1. உள்ளம் (விண்)
2. மனம் (காற்று)
3. புத்தி (தீ)
4. சித்தம் (நீர்)
5. அகங்காரம் (மண்)

### 1. உள்ளம்

உள்ளம் என்ற தத்துவத்திற்கு இடம் கொடுப்பது உயிர். எனவே விண்ணைப் போல் உள்ளம் என்ற தத்துவத்திற்கு ஆன்மா –அறிவு இடம் கொடுக்கிறது. இந்த உள்ளமே மற்ற நான்கு தத்துவங்களுக்கும் இடங்கொடுப்பதாகும்.

### 2. மனம்

மனம் என்ற அருவ தத்துவம் வாயுவின் தன்மையை உடையதாகச் சித்தாந்தம் கூறுகிறது. எனவே இது காற்றைப் போல் அலைபாயும் தன்மையை உடையது. மனமாகிய தத்துவத்தின் செயல் நினைப்பது.

ஒருவருக்கு இதயம் பலவீனமானால், அவருடைய மனபலம் குன்றி விடுகிறது. மனபலம் குன்றுவதற்கு வேறு பல நிலைகளும் காரணமாக இருந்தாலும், இதயத்தின் பலக்குறைவு, மனத்தின் பலக்குறைவிற்குப் பெரும்பான்மைக் காரணமாக விளங்குகிறது. மனம் குன்றிய நிலையில், மூளையும் பலவீனம் அடைய வாய்ப்பு இருக்கிறது. எனவே இதயம், மூளை என்ற இரண்டு உருவ தத்துவங் களும் மனம் என்ற அருவ தத்துவம் உண்டாகக் காரணமாகின்றன எனக் கூறலாம்.

### 3. புத்தி

புத்தி என்ற அருவ தத்துவம், நினைப்பதை அல்லது பார்ப்பதை வெளிச்சம் போல் தெளிவாக்குகிறது. அதனாலேயே புத்தி என்ற தத்துவம் தீ என்ற பூதத்தின் கூறாகக் கூறப்பட்டுள்ளது. இதயம், மூளை என்ற இரு கருவிகளும் கூட்டுச் சேர்ந்து, ஆன்மாவால் உண்டாக்கப்படும் இன்னொரு தத்துவம் புத்தியாகும்.

## 4. சித்தம்

நீரின் தன்மை கொண்ட சித்தம் என்ற அருவ தத்துவம், புத்தியால் தெளியப்பட்டவற்றை ஒன்று திரட்டி ஆராயும். அந்த ஆய்வின் முடிவில் ஒரு முடிவை எடுக்கும்.

## 5. அகங்காரம்

மண்ணின் கூறாகக் கருதப்படும் அகங்காரம் என்ற அருவ தத்துவம், சித்தத்தால் தெளியப்பட்டவற்றை ஏற்று, அதுவே சரியென்று வன்மையாகப் பிடித்துக் கொள்ளும். மண்ணின் கூறாகிய மலை எப்படி அசையாமல் நிலைத்து நிற்குமோ அப்படியே அகங்காரம் என்ற தத்துவம் தன் முடிவில் அசையாமல் இருக்கும்.

மேற்கூறிய அந்தக்கரணங்கள் ஐந்தனுள் ஒன்றோ, பலவோ பாதிக்கப்பட்டால், உள நோய்களோ அவை சம்பந்தமான உடல் நோய்களோ விளையக் கூடும். அவ்வித நோய்கள் உண்டாகாமல் பாதுகாக்கவே, அட்டாங்க யோகப் பயிற்சிகள் கூறப்பட்டுள்ளன. அட்டாங்க யோகப் பயிற்சிகளில் தாரணை, தியானம், சமாதி ஆகிய நிலைகள், அந்தக்கரணங்கள் ஐந்தையும் ஒன்றுபட்டு, சலனமில்லாமல் நேர்வழியில் நிற்கும் நிலைக்குக் கொண்டு வருவதால் அவை தூய்மையாகும். அதனால் ஆன்மா பலம் பெறும். ஆன்மா பலமெய்தினால் உடல் தத்துவங்கள் யாவும் பலம் பெறும். எனவே நோயில்லா நிலையை அடையும் வாய்ப்புப் பெருகும்.

மேற்கூறிய அனைத்து அருவ, உருவ தத்துவங்களையும் படைத்து அருளியது எல்லாவற்றுக்கும் மேலான இறைவன். அந்த இறைவனின் சித்தப்படியே அண்டம் முழுவதிலும் எல்லாம் நடக்கின்றன என்பது சித்தாந்தம். ஆன்மாவாகிய அறிவுக்குப் பேரறிவாகிய இறையே, உருவ தத்துவமாகிய பாசத்தைக் கொண்டு உடம்பையும் அனைத்துத் தத்துவங்களையும் படைத்திருக்கின்றது. அந்த இறையின் அருளினால், எல்லாத் தத்துவங்களையும் நன்னிலையில் வைத்திருக்க முடியும். அவ்விறையின் கருணையில்லாது ஓரணுவும் அசையாது என்பது சித்தாந்தம். எனவே ஆன்மாவைத் தூய்மைப்படுத்தினால் இறையருள் கிட்டும். ஆன்மா தூய்மையாவதற்கு சித்தாந்த நெறிகளைக் கடைபிடித்து ஒழுக வேண்டும் என்பது சித்தர்கள் கூற்று.

எனவே ஆன்மீகம் என்பது உயிரையும், உடலையும் பற்றிய பிணிகளையும், பிறவிப் பிணியையும் களையவல்லது என்பது சித்தாந்தம். ஆகவேதான் சித்தர்களின் தத்துவம், ஆன்மீகம் கலந்த அறிவியலாகக் கருதப்படுகிறது.

## மெய்ஞ்ஞானம்

மெய்ஞ்ஞானம் என்ற சொல்லாட்சி, தத்துவ நூல்களில் அதிகம் பயன்படுத்தப்பட்டு வருகிறது. மெய்ஞ்ஞானம் என்றால் என்ன ? உண்மை அறிவு எனப் பொருள் கொள்ளலாம். எதைப் பற்றிய உண்மை அறிவு ? மெய் எனும் இவ்வுடம்பைப் பற்றியும் அதற்கு இடங்கொடுக்கும் இவ்வுலகைப் பற்றியும், இவ்வுடம்பிற்குள் செயல்பட்டு வரும் ஆன்மா பற்றியும் அறியும் அறிவே மெய்ஞ்ஞானம் ஆகும். அதனால்தான் மெய் என்ற பொருள் கொண்ட தத்துவம் என்ற சொல்லை மெய்ஞ்ஞானத்தில் பயன்படுத்துகிறார்கள்.

ஆன்மீகம் என்றால் உயிர்கள் அவ்வப்பிறவிகளில் கடைப்பிடிக்க வேண்டிய ஒழுக்க நெறிகளை உள்ளடக்கியது. மெய்ஞ்ஞானம் என்றால், ஆன்மாவின் தன்மை என்ன ? அது செயல்படும் உடம்பின் தன்மை என்ன ? அவ்வுடம்பிலுள்ள உண்மைகள் யாவை ? என ஆராய்வது ஆகும். மெய்ஞ்ஞானத்தை அறிந்தவர்கள் ஆன்மீகத்தை அறிவார்கள்.

மெய்ஞ்ஞானத்தை ஆராய்ந்தவர்கள் ஆன்மீகத்தைக் கடைப்பிடிக்கும் போது, அறிவியல் இயற்கையாகவே இணைந்துவிடுகிறது.

## திருமூலர் கொள்கை

*முப்பதும் முப்பதும் முப்பத்தறுவரும்*
*செப்பமதிலுடைக் கோயிலுள் வாழ்பவர்*
*செப்பமதிலுடைக் கோயில் சிதைந்தபின்*
*ஒப்ப அனைவரும் ஓட்டெடுத்தார்களே.*

மேலே சொல்லப்பட்ட திருமந்திரப் பாடலில் உயிரைப் பற்றிய உண்மைகள் 96 பற்றிக் கூறப்பட்டுள்ளன. இந்த 96 தத்துவங்களும் உடலாகிய பாதுகாப்புடைய கோயிலுக்குள் வாழ்பவை. உடம்பாகிய கோயில் சிதைந்து விட்டால், அந்த 96 தத்துவங்களும் உடலை விட்டு ஓடிவிடும். அவற்றை ஆட்சி செய்த உயிரும் அடங்கிவிடும். மேற்சொன்ன கருத்துக்கள் மெய்ஞ்ஞானக் கருத்துக்களாக இருந்தாலும் அவை அறிவியலின் பாற்பட்டவையேயாகும்.

உடல் சிதைந்துவிட்டால், உயிர் செயல்படாமல் அடங்கிவிடும். அதுவரை உயிரினால் ஆட்சி செய்யப்பட்ட 96 தத்துவங்களும், தாங்கள் செயல்பட்டு வந்த கோட்டை சிதைந்து விட்டதால், அவை தங்கள் செயல்பாட்டை நிறுத்தி வெளியேறி விடும். இதுவே இயற்கை.

விரைவில் அழியும் தன்மை பெற்ற உடலை, அழியாமல் நிலை நிறுத்தும் கலையைச் சித்தர்கள் கற்றிருந்தார்கள். அவர்கள் கூறிய அட்டாங்க யோகப் பயிற்சிகள், உடல் தத்துவங்கள் 96ஐயும் நிலை பிறழாமல் நீண்ட காலம் வைத்திருக்கும் ஆற்றல் பெற்றவை. இந்த அட்டாங்க யோகப் பயிற்சிகள் மெய்ஞ்ஞானம், ஆன்மீகம் எனக் கருதப்பட்டாலும், அப்பயிற்சிகளைச் செய் கின்றபோது உடம்பில் ஏற்படுகின்ற மாற்றங்களை அறிவியலின் துணை கொண்டு அறிய முடிகிறது. அதனால், உயிருக்கு உண்டாகும் வல்லமையை அறிவியலினால் விளக்க முடியாது.

எடுத்துக்காட்டாக, ஒரு சிறந்த யோகி, ஒரு நோயாளியின் தலையில் கையை வைத்து ஆசிர்வதித்தால், அந்த நோயாளியின் நோய் நீங்கிவிடுகிறது. அந்த நோய் நீக்கும் ஆற்றலை, அந்த யோகியின் ஆன்மாதான் பெற்றிருக்கிறது. அந்த ஆன்மாவின் ஆற்றலை, நவீன அறிவியலால் காணவும் முடியாது. விளக்கவும் முடியாது. வேண்டுமானால், அந்த யோகி, யோகம் செய்யும்போது உடலில் உண்டாகும் மாற்றங்களை ஓரளவு அறியலாம். ஆனால், ஆன்மாவின் தன்மையை அறிய இயலாது.

## எல்லாமே ஆன்மாதான்

நோய்களை எதிர்த்துக் காப்பதும், நோய்கள் வந்தால் சிகிச்சை செய்து நீக்குவதும் ஆகிய எல்லாமே ஆன்மாவுக்காகத்தான். ஆன்மாவானது தான் செயல்பட்டுக் கொண்டிருக்கும் உடலில், சிறப்பாகவும், நீண்ட நாட்களும் செயல்பட வேண்டும் என்பதற்காகவே சித்தர்கள் பல வழிமுறைகளை எழுதிவைத்தார்கள். காரணம் படைப்பின் நோக்கத்தின்படி, ஆன்மா தன்னைத் தூய்மைப்படுத்தி, தன்னைப் பற்றிய பாசங்களை விலக்கி, பேரறிவாகிய பதியோடு சென்று ஐக்கியமாக வேண்டும் என்பதற்காகத் தான். ஆன்மாவைத் தூய்மைப்படுத்தும் பயிற்சிகளின் போது, உடம்பிலும், உடம்பிலுள்ள தத்துவங்களிலும் பல மாற்றங்கள் உண்டா கின்றன. இவையெல்லாவற்றையும் அறிவியல் என்றே கூறலாம். ஆனால் நவீன அறிவியலால், எல்லா மாற்றங்களையும் முழுமையாகக் கண்டு, விவரிக்க இயலாது. எனவே ஆன்மீகச் செய்கைகளில் அறிவியல் இருந்தாலும் இன்னும் அவை ஆன்மீகமாகவே கருதப்படுகின்றன.

நோய் வராமல் தடுக்கப் பயிற்சிகள் செய்வதும், நோய் வந்தபின் மருந்துகள் கொடுப்பதும், பத்தியம் காப்பதும் எல்லாமே ஆன்மாவுக்காகத் தான். உடலில் பிணிகள் இருக்கும்போது அத்துன்பத்தை அனுபவிப்பது ஆன்மா. அத்துன்பம் நீங்கி, இன்பம் உண்டாகும் போதும் அதனை அனுபவிப்பது ஆன்மாதான். நோயுற்றபோது

உடலில் உண்டாகும் மாற்றங்களை அறிவியலின் துணை கொண்டு ஓரளவு அறிய இயலும். அதே போல் மருந்துகள் கொடுத்த பின், உடம்பில் உண்டாகும் மாற்றங்களையும் அறிவியலின் துணைகொண்டு அறிய இயலும்.

## அறிவு அல்லது உயிர்

*அறிவுக் கழிவில்லை யாக்கமும் இல்லை*
*அறிவுக் கறிவல்ல தாதாரமில்லை*
*அறிவே அறிவை யறிகின்ற தென்றிட்டு*
*அறைகின்றன மறையீறுகள் தாமே*

மேற்சொன்ன திருமந்திரப் பாடலின்படி, அறிவாகிய ஆன்மாவிற்கு அழிவில்லை. அதைப் போலவே, ஆன்மாக்கள் புதிதாகத் தோன்றுவதும் இல்லை. நவீன அறிவியலில் சொல்லப்பட்ட கருத்தும் இதுவே. "உள்ளது போகாது, இல்லது வாராது" என்ற சித்தர் கொள்கைப்படி, பொருளும் சக்தியும் அழிவில்லாதவை. அவை புதிதாக உண்டாக்கப்படுவதுமில்லை (Matter and Energy can neither be created nor be destroyed). இக்கருத்து நவீன அறிவியல் கருத்துடன் ஒத்துப் போகிறது.

அடுத்த இரண்டு வரிகளில், அறிவாகிய ஆன்மா மட்டும்தான் பேரறிவாகிய பதியை அறிய முடியும் என மறை முடிவுகள் கூறுகின்றன என்ற கருத்துக் கூறப்பட்டுள்ளது. அறிவுக்குப் பேரறிவாகிய பதியைத் தவிர வேறு ஆதாரமில்லை எனவும் கூறப்பட்டுள்ளது. அறிவாகிய ஆன்மா இல்லாமல் எந்த உடலிலும் இயக்கம் இல்லை. ஆன்மா உடம்பில் இயங்குகின்றபோது, உடம்பில் உயிர் வேதியியல் மாற்றங்கள் நிகழ்கின்றன. எனவே ஆன்மா, அறிவியலுக்குத் துணை புரிவதில் இன்றியமையாததாகிறது.

*உடம்பா ரழியின் உயிரா ரழிவர்*
*திடம்பட மெய்ஞ்ஞானம் சேரவுமாட்டார்*
*உடம்பை வளர்க்கும் உபாயம் அறிந்தே*
*உடம்பை வளர்த்தேன் உயிர் வளர்த்தேனே*

என்ற திருமந்திரப் பாடலில், உடம்பு அழிந்துவிட்டால் உயிரும் மறைந்துவிடும் எனக் கூறப்பட்டுள்ளது. அதுகாறும் உடலின் செயல்பாட்டின் மூலமாக உணரப்பட்ட உயிர், உடம்பு அழிந்தபின், தானும் அழிவதால் "உயிரார் அழிவர் எனக் கூறினர். உயிர், உடம்பில் செயல்படாதிருந்தால் திடமான மெய்ஞ்ஞானம் வந்து சேராது. ஏனெனில் ஞானத்திற்கு ஆதாரமே அறிவு வடிவான உயிர்தான். அவ்வுயிர் செயல்பட

வேண்டுமானால் அதற்கு ஓர் உடம்பு இருந்தே ஆக வேண்டும். எனவே உடம்பை வளர்க்கின்ற வழிகளை அறிந்துகொண்டு, உடம்பை வளர்த்தேன்; அதனால் உயிரையும் வளர்த்தேன் என்கிறார் திருமூலர்.

உடம்பை வளர்த்தல் என்றால், உடம்பானது நீண்ட காலம் அழியாமல் இருக்கச் செய்வதாகும். அவ்வாறு உடம்பு நீண்ட காலம் நிலை பெற்றிருக்கும் காலம் வரை உயிரும் அவ்வுடம்பில் செயல்பட்டுக் கொண்டேயிருக்கும். இதுவே உயிர் வளர்த்தலாகும். உடம்பிலுள்ள 96 தத்துவங்களும் நிலை கெடாமல் இருக்கும் படியாகச் செய்வதற்குரிய யோகப் பயிற்சிகள் முதலியன செய்து வரும் போது, உடலும் அதனுள் செயல்படும் உயிரும் நீண்ட காலம் இருக்கும் என்பது துணிவு.

மேற்சொன்ன பாடல்களிலுள்ள தத்துவங்கள் நடைமுறையில் உண்மை என்று சித்தர்களால் நிரூபிக்கப்பட்டவை. அவற்றின் வாயிலாகச் சித்தர்களும் யோகிகளும் நெடு நாள் வாழ்ந்திருக்கிறார்கள். ஆன்மீகச் செயல்கள் யாவும் அறிவியலுக்கு அடிப்படைகளாகின்றன.

*எங்குந்திருமேனி எங்குஞ் சிவசக்தி*
*எங்கும் சிதம்பரம் எங்குந் திருநட்டம்*
*எங்கும் சிவமாயிருத்தலால் எங்கெங்குந்*
*தங்குஞ் சிவனருள் தன்விளையாட்டதே.*

*தத்துவம் ஆடச் சதாசிவம் தானாடச்*
*சித்தமும் ஆடச் சிவசக்தி தானாட*
*வைத்த சராசரம் ஆட மறையாட*
*அத்தனும் ஆடினான் ஆனந்தக் கூத்தன்றே.*

மேற்கூறிய இரு பாடலகள் தவிர, இன்னும் பல பாடல்கள் *திருக்கூத்து* என்ற தலைப்பின் கீழ் திருமூலர் அருளி இருக்கின்றார். அனைத்தும் தானாகி நின்ற சிவம், அனைத்து அண்டங்களையும் தன் மேனியாகக் கொண்டதால் எங்குந் திருமேனி எனவும், சிவம், சக்தியுடன் (அறிவும் ஆற்றலும்) சேர்ந்து ஆடுவதால் சிவசக்தி எனவும், அனைத்தும் சிவமாயிருப்பதால் தத்துவம் (உண்மை) ஆடுகிறது. சிவமும், சக்தியும் இணைந்த சதாசிவம் ஆடுகிறது. சித்தம் ஆடுகிறது. அசையும் பொருள், அசையாப் பொருள் என யாவும் ஆடுகின்றன. மறைகள் ஆடுகின்றன. எனவே, அனைத்தும் ஆடுகின்றன என்பது மேற்கூறிய பாடல்களின் கருத்து. இது மெய்ஞ்ஞானக் கருத்தாகும்.

சித்தர்கள் கூற்றுப்படியும் அறிவியல்படியும் இதனை அணுகுவோம்:

அனைத்து அண்டங்களிலும் இருக்கின்ற அத்தனைப் பொருட்களும் அணுக்களால் ஆனவை. இந்த அணுவுக்குள்ளேயே பேரறிவாகிய பதி, சிற்றறி வாகிய பசு மற்றும் அறிவற்ற சடப் பொருளாகிய பாசம் என்ற மூன்று அநாதி நித்தியப் பொருள்களும் உள்ளன.

இந்த அணுக்களுக்குள்ளேயே, பசுவையும் பாசத்தையும் பற்றிய தத்துவங்கள் 96உம் உள்ளன. பேரறிவாகிய பதி, அறிவே வடிவான பசுவை, அதனைக் கட்டுப் படுத்தி இருக்கும் பாசத்தினின்றும் பிரிக்க, அப்பாசத்தைக் கொண்டே ஓர் உடம்பினை அமைத்துத் தருகிறது. இதுவே படைப்பாகும். இப்படைப்பில் அணுக் களால் ஆன, ஓரறிவு முதல் ஆரறிவு வரை உள்ள எண்ணற்ற உயிரினங்கள் உண்டாகின்றன. இப்படைப்பில் உண்டான உயிரினங்களில், தன்னிச்சையாகச் சிந்திக்கும் ஆறாவது அறிவு பெற்றது மனிதப் படைப்பு மட்டும்தான்.

எனவே மனிதன் தன் ஆறாவது அறிவைக் கொண்டு தனது பிறப்பில் நல்வினை, தீவினைகளை இயற்றுகின்றான். தான் இயற்றிய வினைகளுக்குத் தகுந்தாற்போல் மறுபிறவி வாய்க்கிறது. மீண்டும் பிறவா நிலையை அடைவதற் குரிய வாய்ப்பும் தரப்படுகிறது. இப்படிப் பிறவா நிலையை அடைந்தோர் பலர். அவர்களில் சித்தர்களும், யோகிகளும், நாயன்மார்களும், ஆழ்வார்களும் அடங்குவர்.

மேற்சொன்ன ஆன்மீகக் கருத்துக்களை அறிவியலாகப் பார்க்கலாம். அணுக்களால் பொருள்கள் உருவாகின்றன. உருவான பொருள்கள் சிறிது காலம் நிலைத்திருக்கின்றன. மீண்டும் அப்பொருள்கள் தங்கள் இயற்கை நிலையாகிய அணு நிலையையே அடைகின்றன. இந்தத் தொடர் நிகழ்ச்சிக்குக் காரணமாக இருப்பது ஏதோ ஒரு சக்தி என நம்பினால் அது ஆன்மீகம். அணுக்கள் கூடிப் பொருளாகி நிலைத்து நின்று மீண்டும் பிரிவதை அறிவியலில் "Automic Agglomarsalin Theory" எனக் கூறுவர். எனவே, அறிவியலும் ஆன்மீகமும் பிரிக்கப்பட முடியாதவை என்பது உண்மை. ஆனால், இவை யார் கட்டுப்பாட்டுக்கும் அடங்காமல் நடந்து கொண்டேயிருக்கின்றன என்பதும் உண்மை.

## சித்த மருத்துவத்தில் வர்மம்*

வன்மம் என்ற சொல் வர்மம் என்ற சொல்லாகத் திரிந்திருக்கலாம். மனிதர்கள் மனதிலே வன்மத்தை வைத்துக் கொண்டு, பிறருக்குக் கெடுதல் செய்வார்கள். அவர்கள் மனதில் கொண்ட வன்மம் வெளியில் தெரியாது. அவர்கள் செய்யும்

* வர்மக் கலை பற்றிய செய்திகள் ஆறாம் தொகுதியில் விவரிக்கப்பட்டுள்ளன.

கெடுதல்களும், அவர்களால் தான் செய்யப்படுகின்றன என்பதும் தெரியாது. அதைப் போல் வர்மம் அடிபட்டவர்களுக்கு உண்டாகும் துன்பங்கள் எதனால் ஏற்பட்டன என்பதும் தெரியாது. உள்ளிருந்து கொண்டே கெட்ட குறி குணங்களைக் காட்டிக் கொண்டிருக்கும். மற்ற எந்த மருந்துகளாலும் குணம் கிடைக்காது. எனவே உள்ளே வன்மம் கொண்ட மனிதனின் கெடுதலான செயல்களைப் போல இந்த வர்ம அடிகளும் உண்டாக்கிக் கொண்டிருக்கும்.

மர்மம் என்ற சொல் திரிந்து வர்மமாயிற்று என்று கூறி வருகின்றனர். மர்மம் என்றால் மறைபொருள் எனப் பொருள் கொள்ளலாம். மர்மமான முறையில் கொலை செய்யப்பட்டிருக்கிறான் என்றால் கொலை செய்தது யார்? கொலைக்குக் காரணம் என்ன? எப்படிக் கொலை செய்யப்பட்டான்? என்ற உண்மைகள் தெரியாதபோது, மேற்சொன்னவாறு கூறுகிறோம்.

எனவே காரணம் தெரியாமல் நோய்க் குறி குணங்களை உண்டாக்கி, உடம்பின் உள்ளேயே மறைந்து செயல்படுவது மர்ம அடிகளால் உண்டானவை என்ற அடிப்படையில் மர்மம் என்ற சொல் வர்மம் எனத் திரிந்திருக்கலாம்.

சித்த மருத்துவத்தில் படுவர்மம் 12, தொடுவர்மம் 96 எனக் கூறப்பட்டுள்ளது. படுவர்மம் என்றால் திடீரென்று கீழே விழும்போது கூர்மையானப் பொருள்கள் குத்துவது, நிற்கும் போதும் நடக்கும் போதும் எதன் மீதாவது மோதினால் கூர்மையானப் பொருள்கள் உடம்பில் வேகமாக இடிப்பது போன்ற காரணங்களால் வர்மத்தானங்கள் பாதிக்கப்படலாம். அல்லது பிறருடன் சண்டையிடும்போது உடம்பிலுள்ள வர்மத்தானங்களில் அடிபடலாம். இவ்வாறெல்லாம் வர்மத்தானங்கள் அடிப்பட்டுப் பாதிக்கப்படுகின்றன.

## அறிவியல் அடிப்படையில் வர்மம்

உடம்பிலுள்ள குருதியில், சிவப்பு அணுக்கள் (RBC) இரும்புச்சத்தைத் (Haem) தாங்கி உடல் முழுதும் ஓடுகின்றன. இயற்கையாகவே மனித உடம்பில் மின்சக்தி இருக்கிறது. இந்த மின்சக்தியும் இரும்பும் சேர்வதால் காந்த சக்தி உண்டாகிறது. இந்த மின்காந்த சக்தி ஒவ்வொரு உடம்பிலும் உள்ளது. இந்த மின் காந்த சக்திதான் உடம்பிலுள்ள நரம்புகள் மூலம், மூளையின் கட்டளையை எடுத்துச் செல்கிறது. எனவே நரம்பு மண்டலம் முழுவதும் இந்த மின்காந்த சக்தி செயல்படுகிறது.

உடம்பிலுள்ள நரம்பு மண்டலத்தில், பல இடங்களில் நரம்புச் சாலங்கள் (Nerveplexus) உள்ளன. மின்சாரக் கம்பிகளைப் போல் ஓரிடத்தில் ஒன்று கூடிப் பல

இடங்களுக்கு மின் சக்தியை எடுத்துச் செல்வது போல் நரம்புகளும் எடுத்துச் செல்கின்றன. மின் கம்பிகளில் எங்காவது தடை ஏற்பட்டால், மின்சாரம் எப்படி அதைத் தாண்டிச் செல்லாதோ அதே போல் வர்மத் தானங்களில் அடிபட்டுத் தடை ஏற்பட்டால், முறையாகச் செல்ல வேண்டிய மின்காந்த அலைகள் அதன் வழியாகச் சென்று உரிய இடத்தை அடைய முடியாது. எனவே, அதன் தொடர்புள்ள செயல்கள் பாதிக்கப்படுகின்றன. எப்படி மின் தடையைச் சரி செய்கிறோமோ அதைப் போல இந்தத் தடையையும் சரி செய்ய வேண்டும். அந்தத் தடையை நீக்குவதற்கு உடம்பின் ஒரு இடத்தில் தடை ஏற்பட்டால், அது சம்பந்தப்பட்ட வேறு இடங்களில் வர்ம இளக்கல் செய்ய வேண்டும். அப்படிச் செய்யும்போது, தடைப்பட்ட இடம் சரியாகி உடம்பின் இயற்கையான நிலை மீண்டும் திரும்ப, உயிரானது உதவி புரிகிறது. இதுவே சித்த மருத்துவ வர்மத்தின் விளக்கமாகும். இதில் உயிர் சம்பந்தப்பட்டிருப்பதால் ஆன்மீக அடிப்படை என்றும், அறிவியலும் சம்பந்தப்பட்டிருப்பதால் அறிவியல் அடிப்படை என்றும் கூற இயலும்.

## எண்வகைப் பேறுகள் – ஆன்மீகமும் அறிவியலும்

ஆன்மாவைத் தூய்மைப்படுத்துகின்ற செயல்கள் யாவும் ஆன்மீகமாகக் கருதப்படுகின்றன. ஆன்மா தூய்மையாகும்போது, அது குடியிருக்கின்ற உடலும் தூய்மையாகும். அதற்காகச் சித்தர்கள் கூறியிருக்கின்ற முறைகளில், திருமூலரின் எண் வகைப் பேறுகள் (அட்டாங்க யோகம்) முதன்மையானவை. அவற்றை விளக்குவோம்.*

### 1. தீதகற்றல் (இயமம்)

கொல்லாமை, பொய் கூறாதிருத்தல், களவு செய்யாதிருத்தல், எண்ணத் தக்கச் சிறந்த குணங்களையுடைமை, எல்லோர்க்கும் நல்லவனாயிருத்தல், தன்பாலுற்றவற்றை அன்புடன் குறிப்பறிந்து முகமலர்ந்து இன்மொழி புகன்றுப் பிறருக்குக் கொடுத்தல், குற்றமற்றிருத்தல், கள், காமம் முதலிய தீய பழக்கங்கள் இல்லாமை ஆகிய இப்பெருங் குணங்களைப் பெற்றவரே இயமத்தைக் (தீதகற்றல்) கடைப்பிடிப்போர் ஆவார்.

மேற்கூறிய தீதகற்றலைக் கடைப்பிடிக்கின்றபோது மனம் தூய்மை அடைகிறது. ஆன்மாவில் ஒன்றிய மனம் தூய்மையாகும் போது ஆன்மாவும்

* அட்டாங்க யோகம் பற்றிய விரிவான விளக்கத்தை ஆறாம் தொகுதியில் காணலாம்.

தூய்மையாகிறது. ஆன்மா தூய்மையானால் அது குடியிருக்கும் உடம்பும் தூய்மையாகிறது. மேற்கூறிய இயமத்தினால், உடலில் நிலை மாற்றங்கள் (Bio-chemical changing) ஏற்படுகின்றன. இந்த நிலை மாற்றங்கள் அறிவியலையும் உணர்த்துகின்றன.

## 2. நன்றாற்றல் (நியமம்)

அகம், புறம் தூய்மை, ஊண் முதலியன சுருக்கல், சிக்கன வாழ்வு, பொறுமை, செம்மை, வாய்மை, நிலைமை (மானம்), காமமகற்றல், களவகற்றல், கொலை யகற்றல் ஆகிய பத்தும் நன்றாற்றல் பண்பாகும்.

மேற்கூறிய நன்றாற்றல் செய்கைகளினால், உள்ளம், உடல் இரண்டும் தூய்மையாகின்றன. அதனால் உடலுக்கு யாதொரு தீங்கும் வராமல் பாதுகாக்கப் படுகிறது. உடலில் உண்டாகும் நிலை மாற்றங்களை அறிவியலாகக் கருதுகிறோம்.

## 3. இருக்கை நிலை (ஆசனம்)

வெளியில் (Space) மனித உடல் இன்ன நிலையில் (Posture) இருத்தல், இன்ன பயன் விளையும் என்பதை எடுத்துரைப்பது ஆசனம் ஆகும். ஆசனம் என்பது ஆ + சமனம் எனப் பிரிக்கப்பட்டு, 'ஆ' என்பதற்கு 'ஆன்மா' எனவும் 'சமனம்' என்பதற்குத் தளர்ச்சி எனவும் பொருள் வழங்கப்படுகிறது. ஆன்மாவைத் தளர்த்துதல் என்றால், ஆன்மாவை உலக வாழ்வின் இருக்கத்திலிருந்து தளர்த்துதல் ஆகும். அதாவது ஆன்மாவைப் புலன்வழிக் கவர்ச்சியிலிருந்து விடுபடச் செய்தல் என்பது பொருளாம்.

## 4. பிராணாயாமம்

சுவாசத்தை ஒழுங்குபடுத்தும் பரிபூரண விஞ்ஞானக் கலையாக இது விளங்குகிறது. பிராணாயாமம் என்பது மனிதரின் ஆயுட்காலத்தை நீட்டிக்க உதவும் காயகற்ப பயிற்சிகளுள் ஒன்று ஆகும். பிராணாயாமத்தின்போது காற்றை உள்ளிழுத்து விடுவதால், சாதாரணமாக நடைபெறும் சுவாசத்தில் உள்ளிழுக்கப் படும் காற்றின் அளவைவிட அதிகமான காற்று உள்ளிழுக்கப்பட்டு, நுரையீரலி லுள்ளச் சிற்றறைகள் அனைத்திலும் நிரம்பி, இரத்தம் தூய்மையடைகிறது. நுரையீரல் மற்றும் சுவாசப் பாதையில் ஏற்படும் நோய்களைக் குணப்படுத்தவும், தோல், மூளை, நரம்பு மண்டல நோய்களுக்கும், உள நோய்களுக்கும்கூட பிராணாயாமம் நேரடியான மருத்துவமாகவும், துணை மருத்துவமாகவும் பயன்படுகிறது.

## 5. பிரத்தியாகாரம்

புலன்களைக் கட்டுப்படுத்துவதற்குரிய பயிற்சி முறையே பிரத்தியாகாரம் ஆகும். புலனுகர்வானது அளவுடன் இருத்தல் அவசியம். உயிராற்றலானது புலனுகர்வு வாயிலாகச் செலவாகிறது. எனவே எந்தவொரு புலனும் அளவுக்கு அதிகமாகப் பயன்படுத்தப்படும்போது, உயிராற்றலும் குறைவுபடுகிறது. அவ்வாறு நிகழாமல் பாதுகாக்கும் அறிவியல் பூர்வமான முறையே பிரத்தியாகாரம் ஆகும்.

## 6. தாரணை

தாரணை என்பது மனதை ஒருநிலைப் படுத்தக்கூடிய பயிற்சி முறையாகும். மனதைப் பொருத்தே மனிதரின் ஆளுமை அமையும்.

## 7. தியானம்

தாரணைப் பயிற்சியில் வல்லவர்களுக்குத் தியானம் எளிதில் கைகூடும். அலைபாயும் மனதை ஒருநிலைப் படுத்துவது தாரணை. அவ்வாறு ஒருநிலைப் படுத்தப்பட்ட மனதை நம் வசப்படுத்த உதவும் பயிற்சியே தியானம் ஆகும்.

## 8. சமாதி

எண்வகைப் பேறுகளில் இறுதி நிலையாக, மகுடமாகத் திகழ்வது சமாதி நிலையாகும். சமம் + ஆதி = சமாதி, ஆதி பரம்பொருளாகிய இறைவனுக்குச் சமமான நிலையை அடைவது சமாதி நிலையாகும். பொறி புலன்களாகிய கருவிகளோடு கூடிய உடலில் உறைந்திருக்கும் ஆன்மாவானது அவற்றினின்று தனித்துப் பற்றற்று இருக்கும் நிலை; தன்னையும் தன்னைச் சுற்றி இருப்பவற்றையும் மறந்து இருக்கும் ஓர் உன்னத நிலையே சமாதி நிலையாகும்.

இவையல்லாது மனிதர் கடைப்பிடிக்கவேண்டிய உயரிய ஒழுக்கங்கள் மேலும் பல உள்ளன. அவை :

## காமம்

பல மனைவியரை மணத்தலால் உடலின் வன்மை கெட்டு, அதனால் உள்ளத்தின் பாங்கும் கெட்டுவிடுகிறது. அதனால் பற்பல நோய்களுக்கு ஆளாகும் நிலை உருவாகிறது.

ஒருவனுக்கு ஒருத்தி என்ற சிறந்த உண்மையை உணர்ந்து அதன்படி ஒழுகினால் கணவன், மனைவி இருவருக்கும் உள்ளமும் உடலும் நன்னிலை யிலிருக்கும். அதுவும் சித்தர்கள் கோட்பாட்டின்படி மாதம் இருமுறை இணை விழைச்சுக் கொள்ளும்போது உடம்பின் ஒளி குன்றாமல் நீண்ட நாள் நோயற்று வாழ இயலும்.

மேற்சொன்னவை அறிவியலுக்கு ஒத்தவை ஆகின்றன. எங்ஙனமெனில் நாம் உண்ணும் உணவு, படிப்படியாக வெவ்வேறு உடற்கட்டுகளாக (உடல் தாதுக்கள்) மாறி, ஏழாம் நாள் விந்துவாக மாறுகின்றது. பதினைந்து நாட்கள் ஆகும்போது, இரண்டு முறை விந்து நிறைகிறது. பதினைந்தாம் நாள் இணை விழைச்சுக் கொண்டால், இரண்டு வாரங்களாக இரு மடங்கு சேர்ந்த விந்துவில் ஒரு பங்கை மட்டும் பயன்படுத்துகிறோம். எனவே உடம்பின் ஒளி கெடுவதில்லை.

இந்த உடல் விந்தை வீணாக்காமலே இருந்து, யோகப் பயிற்சி செய்தால் உடல் விந்தானது உடம்பு முழுவதும் பரவி அறி விந்தாக மாறுகிறது. அறி விந்தாக மாறுவதால், ஆறாவது அறிவு பலப்படுத்தப்படுகிறது. அதனால், ஆன்மாவாகிய அறிவின் சக்தி பல மடங்காகி, சாதாரண மனிதர்களைக் காட்டிலும் சிறந்த அறிவை நல்குகிறது. இதில் ஆன்மீகமும் அறிவியலும் விரவிக் கிடக்கின்றன.

## களவு

தான் ஒழுக வேண்டிய ஒழுக்க முறைகளைக் காலந் தவிர்த்தும், நினைப்பூட்டியும் செய்தல், தன் தேவைக்கு மேல் ஊண், உடை, உறையுள் முதலியவற்றைத் தொகுத்து வைத்தல் முதலியன களவாகும்.

ஒழுக்க முறைகளைக் காலத்தே கடைப்பிடிக்காததால் உள்ளம், உடல் இரண்டும் பாதிப்புக்குள்ளாகும். தன் தேவைக்கு மேல் ஊண் கொள்ளுதல், உடம்புக்குக் கேடு. தேவைக்கு மேல் உடைகளைச் சேர்த்து வைத்தலும், தேவைக்கு மேல் வீடுகளை வாங்கி வைத்தலும் பேராசையின் காரணத்தாலாகும். இப் பேராசையானது சிந்தனைகளைக் கெடுத்து உடம்பையும் கெடுக்கவல்லது. இதில் எண்ணம், செயல் இரண்டும் தவறானவையாகும். எண்ணம், செயல் இரண்டை யும் ஆன்மீகத்தின் கருவிகளாக எடுத்துக் கொண்டால், எண்ணம், செயல் இவற்றினால் உள்ளத்திலும், உடம்பிலும் ஏற்படுகின்ற மாற்றங்கள் அறிவியலால் கண்டுபிடிக்கக் கூடியவையேயாகும்.

## கொலை

தன்னுயிர் பிறப்பற்றுச் சிறப்புற முயலாது முயலும் முயற்சி கொலை யாகும்.

முன்பு கூறிய நன்றாற்றல் முதலியவற்றால் தன்னுயிர் தூய்மையடைந்து பிறப்பை அறுத்து மேல் நிலை அடைய முயற்சி செய்யாமலிருப்பது தற்கொலைக்குச் சமமாகும். ஏனெனில் சித்தர் கொள்கைப்படி ஆன்மா தன் நல்வினை, தீவினை களுக்கேற்ப, நற்பிறப்பையோ, தீய பிறப்பையோ பெறுகிறது. தீவினைகளையே செய்து வரும்போது, பிறவிகள் எண்ணற்றவைகளாகின்றன. ஒவ்வொரு பிறவி யிலும் ஆன்மா தன்னைத் தூய்மைப்படுத்த முயலவேண்டும்.

மேற்சொன்ன யாவும் சித்தர் ஆன்மீகம் அல்லது மெய்ஞ்ஞானமாகும். இந்த மெய்ஞ்ஞானத்தைக் கடைப்பிடித்தாலும், அதற்கு நேர் மாறாகச் செயல்பட்டாலும் அதன் தாக்கம் உயிரையும் உடலையும் பாதிக்கிறது. அந்த பாதிப்பின் விளைவு களே நோய்களாகின்றன. எனவே இங்கே அறிவியலும் கூறப்பட்டது.

## நிலைமை (மானம்)

உறுதியுடைமையே நிலைமையாகும். பிறர் நம்மை இகழும்படி நடந்து கொள்ளாமல் மேற்கூறிய நன்றாற்றலின் வாயிலாக அனைவரும் நம்மேல் அன்பு செலுத்தல், நாமும் பிறர் மேல் அன்பு செலுத்தல் ஆகிய நல்வினையை உண்டாக்கி யிருப்பதே நிலைமையாகும். அதாவது நன்றாற்றலில் உறுதியாக இருப்பதாகும்.

மேற்கூறியவற்றால் உயிருக்கும் உடலுக்கும் உண்டாகும் பலன்களை அறிவியலால் அறியக்கூடும்.

7

# சித்த மருத்துவரின் மாண்பு

மரு. ச. முத்தரசன்

## முன்னுரை

உலகிலே வாழ்கின்ற உயிரினங்கள் யாவற்றிலும் சிறப்புடைய இனம் மனித இனமே. எனவே ஔவையாரும் "அரிது அரிது மானிடராய்ப் பிறத்தல் அரிது" என்றார். தன்னைத் தான் அறிவதற்கான சக்தி மனிதர்களிடம் மட்டுமே உள்ளது. மனிதர்களிடம் மாத்திரமே அசையாப் பொருள்களில் உள்ள சக்தியும், இறைவனிடம் உள்ள சக்தியும் மறைந்து கிடக்கின்றன என்பது முற்றிலும் உண்மையே. தன்னுள் புதைந்து கிடக்கும் இச்சக்தியை அறியவோ, அதனைப் பயன்படுத்தவோ எல்லா மனிதர்களும் முயலவேயில்லை. இதை அறிந்து பயன் பெறுவதும், பிறர் பயன்பெறச் செய்வதுமே மனிதப் பிறவியின் மாபெரும் பயன் என்பதை உணர்தல் வேண்டும்.

சித்த மருத்துவர் உயிரை (ஆன்மா) சிவத் தன்மையுடையது என்பர். சிவமே சீவனாகியது என்றும், அச்சிவமே எங்கும் உளது என்றும், அச்சிவமே உடல்தோறும் உயிரானது என்றும், அச்சிவமே முத்தொழிலையும் மேற்கொண்டு, பருவுடற்கான உயிர்த்தோற்றங்களை, ஆக்கியும் (படைத்தும்), அளித்தும் (காத்தும்), அழித்தும் வருகிறது என்பர். சிவனைப் போலவே படைக்கும் வல்லமையால் தோற்றத்திற்கும், காக்கும் வன்மையால் நிலைபேற்றிற்கும், அழிக்கும் வன்மையால் அழிவிற்கும் காரணகர்த்தாவாக விளங்கலாயிற்று என்பர். தோற்றமும், ஒடுக்கமும் மாறி மாறி இடையறாது நடைபெற்றுக் கொண்டே இருக்கின்றன. இச்சக்தியை மருத்துவர் வளி (வாதம்), அழல் (பித்தம்), ஐயம் (கபம்) என்றும் கூறுவர்.

*மிகினும் குறையினும் நோய் செய்யும் நூலோர்*
*வளிமுதலா வெண்ணிய மூன்று.*

என்னும் திருவள்ளுவரின் மருத்துவப் புலமையை நாம் ஒப்பு நோக்கி அறிதல் வேண்டும்.

மூன்று கண்கள் உள்ளவர் யார் என வினவினால், அவர் எல்லா உலகங்களையும் தோற்றுவித்துக் காப்பவனாகிய இறைவனும், மக்களுக்குத் தோன்றிய நோய்களை நீக்கி, அவரைக் காக்க வல்லவனாகிய மருத்துவனுமாகிய இவ்விருவரே ஆவரென்று பேரறிஞர் கூறுவதைக் கீழ்காணும் செய்யுளால் அறியலாம்:

*மூன்று கண்ணுளோ ரிருவராம் அன்னவரியா ரெனில்*
*ஆன்ற லோகமீன் றளிப்பவன் ஆகிய வரனும்*
*தோன்று மக்கடம் துயரினைப் போக்கிடு வோனாம்*
*ஏன்ற மாமருத் துவனுமே எனவியம் புவரே.*

இறைவனுக்கு மூன்று கண்களாவன ஞாயிறு, திங்கள், தீ என்பர். இவற்றைச் "சோம சூரியாக்கினி" என்றும் கூறுவர்.

மருத்துவனுக்கு மூன்று கண்களாவன நோய்களின் இயல்புகளையும், மருந்துகளின் இயல்புகளையும் அறிந்து, தெளிந்து, தீர்மானிக்கும் திறமையும், மருந்துகளின் பெயர்களைத் தெளிவாகத் தெரிந்து கொண்டிருக்கும் புலமையும், மருந்துகளைத் தூய்மை செய்யும் பான்மையும் என்பர்.

மருத்துவரைப் பண்டிதர், பரிகாரி, வைத்தியர், பரன் (பரம்பொருளுக்கு நிகரானவர்) அகதங்காரர் (உடலுக்கு நன்மை செய்யும் காரியத்தைச் செய்பவர்) என்பர். பரம்பொருளுக்கே வைத்தீஸ்வரன் என்ற பெயருண்டு. இறைவனே தாயாக வந்து, ஒரு பெண்ணிற்குப் பிள்ளைப்பேறு பார்த்து உதவியதாகவும், ஆகவே அவரைத் தாயுமானவர் என்று அழைப்பதும் நாம் அறிந்ததே.

## மருத்துவரின் சிறப்பியல்புகள்

பலவகையான நூற்களையும் (சிறப்பாக மருத்துவ நூற்களையும்) கற்றறிந்து, ஐயம் ஏதுமின்றி ஆராய்ந்த அறிவுடைமையும், பிறரது ஐயங்களைத் தீர்க்கும் ஆற்றலைப் பெற்றிருத்தலும், உடலால் உள்ளத்தால் தூய்மையும், வாய்மையும் கொண்டவராகவும், இறைவனை அன்றாடம் நினைவு கூரும் நன்னம்பிக்கை உடையராகவும், எவ்வகை நோய்களையும் தீர்க்கும் வன்மையும், திண்மையும் ஒருங்கே பெற்றவராகவும், நோய்களைக் கண்டு அஞ்சாத, அருவெறுப்புக் கொள்ளாத நெஞ்சுறுதி படைத்தவராகவும், எவ்வுயிரிடத்தும் அன்புடையவராகவும், பெரியோர்,

சிறியோர், ஆடவர், மகளிர் என்ற பாகுபாடின்றி அனைவரிடமும் பழகும் நட்புடையவராகவும், இடம், மொழி, மதம், காலமாகிய அனைத்தையும் கடந்த வராகவும், நோய் தீர்க்கும் மருந்துகளில் தெளிவும், தேவையானால் அவற்றைத் தானே தயாரித்துக் கொடுக்கும் திறமையுடையவராகவும், உடல் வன்மை, நோய் வன்மை, மருந்து வன்மை, உணவு வன்மை, ஆகியவைகளை நன்குணர்ந்த மேன்மை உள்ளவராகவும் இருத்தலே மருத்துவரின் சிறப்பு இயல்புகளாகும்.

இக்கருத்தினைக் கீழ்வரும் செய்யுட்களால் அறியலாம்:

*தெய்வந் தன்னை வழிபடு சிந்தையும்*
*பொய்யி லாமொழி யுந்நற் புலமையும்*
*ஐய மற்ற வறிவும் பெருமையும்*
*வெய்ய கோபம் வெறுப்பு மிலாமையும்*
*உயிர்கள் மீது கிருபையு மூவகையும்*
*செயிர கற்றிடு சிந்தையு மீகையும்*
*அயர்வி லாமையு மன்பும் நிறைந்துளன்*
*உயர்வ தாகிய வொப்பில் மருத்துவன்".*
*உத்தம குணங்க ளுள்ளோன் உயர் பெருங் கீர்த்தி யுள்ளோன்*
*புத்தியா லாய்ந்து சொல்வோன் பொருள்களை யாய வல்லோன்*
*சத்திய வார்த்தை யுள்ளோன் தருமசிந் தனையே யுள்ளோன்*
*குத்திர வார்த்தைப் பேசாக் குணன் பரிகாரியாமே.*

*மண்ணின்மேற் பெண்ணா னுக்கும் மற்றுள உயிர்கட் கெல்லாம்*
*கண்ணி லிமைபோற் காக்கும் கடனுளான் கருணை யுள்ளான்*
*நண்ணிய பெண்ணா னெல்லாம் நாடிய தந்தை தாயென்*
*றெண்ணிய மருந்து செய்யில் இடர்ப்பிணி தீரு மன்றே.*

மருத்துவர் தூய வெள்ளை நிற ஆடைகளையே அணிய வேண்டும். நோயாளியைப் பரிசோதனை செய்த பின்னர் கைகளைச் சுத்தம் செய்தல் வேண்டும். தொற்று நோயாளிகளைப் பரிசோதிக்கும் காலத்தில் அந்நோய் மருத்துவரை அணுகாதவாறு மிகவும் எச்சரிக்கையுடன் இருத்தல் வேண்டும்.

மருத்துவ நூலின் வரைமுறையை அறியாதவராகவும், பிணியொன்றிருக்க, அதை மற்றொன்றாய் மாற்றிக் (கொடுநோய் எனக்) கூறுபவராகவும், தம்மால் தீர்க்க முடியாத நோயே இல்லை என்று தமக்குத் தாமே பெருமை பேசுபவராகவும், பொருள் ஈட்டுதல் ஒன்றையே வாழ்நாளின் குறிக்கோளாகக் கொண்டு, தமது கடமையை

மறந்து, நோயாளியை வறுமையில் வாட்டுவோரும் நல் மருத்துவர் ஆகார் என்பதும் அகத்தியர் கொள்கையாகும்.

## மருந்து இயற்றுவாரின் இயல்புகள்

நோயாளிகளிடத்தில் மாறாத அன்பும், (மனம், மொழி, மெய்) உடல், உள்ளம், சொல், செயல்களால் தூய்மையும், மருத்துவர் சொற்படி நடக்கும் தன்மையும், அறிவார்ந்த செய்கைகளையே செய்யும் திறனுமே மருந்து இயற்றுவாரின் இயல்புகளாகும்.

## மருந்தூட்டும் பாத்திரங்கள்

வெள்ளிப் பாத்திரங்களில் நீர் அருந்துதலும், மருந்து வைத்து உண்ணலும் மேன்மையே பயக்கும். ஆயினும் மண்ணும், பொன்னும் மிகச் சிறந்தவைகளாகும். எனவே பொருள் படைத்தோர், பொன்னாலான பாத்திரங்களையும், ஏழை, எளியோர் மண்ணாலானப் பாத்திரங்களையும் பயன்படுத்தி வருவதை நாம் அனைவரும் அறிவோம்.

## மருத்துவர் அறிய வேண்டுவன

மருத்துவர் சோதிடம் (நாள், கோள்களைப் பற்றிய நூல்), எழுத்துப் பொருத்தம் அறியும் பொருட்டு ஐவகைப் பட்சிகளைப் பற்றிக் கூறும் நூல், நாசி வழியாகச் சுவாசிக்கும் முறைப் பற்றிய நூல், நடந்த, நடக்கின்ற, நடக்கவிருக்கும் முக்காலங்களைப் பற்றித் தெளிவாகக் கூறும் நூல், குற்றமில்லாத மருந்து செய்யும் நூல், அகத்தியரின் மருத்துவ நூல்கள், மற்றும் அகத்தியர் கன்ம காண்டம் என்னும் நூல் ஆகிய அனைத்தையும் கற்றறிவதோடு, தீதிலாத மந்திர நூல்களையும் கற்றுணர்ந்தோரே மருத்துவர்கள் ஆவார் என்பதைக் கீழ்வரும் பதினெண் சித்தர் நாடி நூல் கூறுவதால் அறியலாம்:

*சோதிடம் பஞ்ச பட்சி*
*துலங்கிய சரநூல் மார்க்கம்*
*கோதறு வகார வித்தை*
*குருமுனி ஒது பாடல்*
*தீதிலாக் கக்கிஷங்கள்*
*செப்பிய கன்ம காண்டம்*
*ஈதலாங் கற்று ணர்ந்தோர்*
*இவர்களே வைத்தியராவார்.*

இன்னும் பிணியாளன் சுகம் பெற வேண்டுமானால், உடற்கூறும், பருத்த, மெலிந்த உடலின் நோய்க்கூறும், மலம், சிறுநீரின் பாகுபாடும், பிணி நீங்கும், நீங்காது என்னும் தெளிவும், முக்குற்றம், தூக்கம் இவைகளின் கூறும், பெண்ணை விரும்பும் மோகத்தின் கூறும், நற்கருமம், தீக்கருமங்களின் கூறும் ஆராய்ந்தறிந்த பின்பு, தாதுக்கள் இயக்கத்தையும், நாள், கோள்களின் நன்மை, தீமைகளையும், நீச நிலைகளையும், நோயாளியின் பெயரையும் அறிந்த பின்னரே நோயாளியைப் பார்க்க வேண்டும். மேலும் நோயாளியின் புகழ் (கீர்த்தி), சுற்றத்தினரின் ஒழுக்கம் ஆகியவைகளைப் பார்த்து, பற்ப செந்தூரம் போன்ற மருந்துகளைக் கொடுக்க வேண்டும் என்பதைப் பின்வரும் செய்யுட்களால் அறியலாம்:

*பலிப்பதற்கு வியாதியுள்ளோர் தேகக் கூறும்*
*பருத்தவுடல் மெலிந்தவுட னோயின் கூறும்*
*சலிப்பில்லா மலக்கூறும் சலத்தின் கூறும்*
*சாத்தியமு மசாத்தியமுந் தத்துவக் கூறும்*
*மங்கையர்க ளாசையின் மேல் மயக்கக் கூறும்*
*பலிப்பில்லாக் கன்மதன்ம நாட்டக் கூறும்*
*பார்த்தறிந்து பிறகுபார் மருந்தின் கூறே.*

*கூர்பாரு தாதினிலக் கணமும் பாரு*
*கோள்பாரு நாள் பாரு குணமும் பாரு*
*நேர்பாரு தேசபே தங்கள் பாரு*
*நிலைபாரு கிரகவுச்ச நீசம் பாரு*
*பேர் பாரு இவனைநீ பிறகு பாரு*
*பேரதிலே கீர்த்தியின்தன்மை பாரு*
*வேர்பாரு தழை பாரு மிஞ்சி னக்கால்*
*மெல்ல மெல்ல பற்பசெந் தூரம் பாரே.*

## மருத்துவர் கடைப்பிடிக்க வேண்டியன

தன்னை இருவர் வந்தழைத்தால், நோயாளியின் வீட்டிற்குச் செல்லாமையும், தான் நன்மையென நினைத்திருக்கும் நல்ல சகுனத்தைப் பார்த்துச் செல்வதும், நோயாளியின் படுக்கை முதலியவற்றைத் தொடாது இருத்தலும், நோயாளிக்கு அருகில் கிழக்குத் திசையை நோக்கி உட்கார்தலும் ஆகியவை நல்ல மருத்துவ னுக்குரிய நல் ஒழுக்கங்களாகும் என்பதைக் கீழ்வரும் பாடலால் அறியலாம்:

*இருவர் வந்தழைத் திடினவர் இற்புகா திருத்தல்*
*கருது நற்சகு ணத்தினைக் கண்டுசென் றிடுதல்*
*மருவு நோயினர் மஞ்சமா தியதொடா திருத்தல்*
*அருகு கீழ்த்திசை முகமுற வாசனத் திருத்தல்.*

மேலும் நோய்வரும் வகைகளையும், அவற்றைத் தடுத்துக் காக்கும் தெளிந்த ஞானத்தையும், நோய்களைத் தனித்தனியாகப் பிரித்துக் கணிக்குந் திறனையும், நோய் அணுகாது இருக்கும் விதிமுறைகளையும் கற்றறிந்தவரே சிறந்த மருத்துவர் எனப் பதார்த்த குண சிந்தாமணி குறிப்பிடுகின்றது.

## நோய் அணுகா விதி

"இரவில் பசுவின் பாலையே உண்போம், எண்ணெயிட்டுத் தலை முழுகும் போதெல்லாம் வெந்நீரிலே குளிப்போம்; பகலில் புணர்ச்சியும், துயிலும் கொள்ள மாட்டோம்; எம்மைவிட வயதில் மூத்த மகளிரையும், இளம் வெயிலையும் விரும்ப மாட்டோம்; மல, சலங்களை அடக்க மாட்டோம்; இடது கையின் மேல் படுத்து உறங்குவோம்; மூல நோய்களை உண்டாக்கும் கறிகளை உண்ணவே மாட்டோம்; புளித்த தயிரையே உண்போம்; முதல் நாளில் சமைத்த கறி அமுதம் போன்றிருப்பினும் உண்ண மாட்டோம்; பசித்த பின்னரே புசிப்போம்."

"இருவேளை மட்டுமே உண்போம்; பகலில் உறங்கோம்; திங்கட்கிருமுறை புணர்ச்சி கொள்வோம்; உண்ணுங் காலத்தில் நீரருந்தோம்; கருணைக் கிழங்கை மட்டுமே புசிப்போம்; வாழைக்கச்சலையே உண்போம்; உண்ட பின் சிறிது நேரம் நடைபயிலுவோம்.

"ஆறு திங்கட்கொரு முறை வாந்தி மருந்தையும், நான்கு திங்கட்கொரு முறை பேதி மருந்தையும் உட்கொள்வோம்; ஒன்றரை மாதத்திற்கு ஒருமுறை நசியம் செய்து கொள்வோம்; வாரந்தோறும் முகச்சவரம் செய்து கொள்வோம்; வாரமிருமுறை தலை முழுகுவோம்; மூன்று நாட்களுக்கொருமுறை கண் களுக்கு மையிடுவோம்; வாசனையுள்ளவற்றையும், பூக்களையும் நடு இரவில் முகரோம்."

"ஆடு, மாடு, கழுதை மற்றும் பெண்களின் தீட்டுக்காலத்திலான மணத்தை யும், துடைப்பம் போன்றவைகளால் உண்டாகும் தூசியையும் தவிர்ப்போம்; இரவில் மரம், விளக்கு மற்றும் மற்றவரின் நிழலில் வசிக்க மாட்டோம்; உணவு செரிக்கும் முன்னர் புணர்ச்சிக் கொள்ளோம்; மாலை நேரங்களில் உணவையும், உறக்கத்தை யும், புணர்ச்சியையும், அழுக்காடைகளையும், சீவும்போது சிந்துகின்ற மயிரையும்

தவிர்ப்போம்; கன்றுடன் கூடிய பசுவையும், தெய்வத்தையும், பிதுர்களையும், குருவையும் வணங்குவோம்; பிறரிடமிருந்து தெறிக்கும் நீரைத் தடுப்போம்; என்பனவற்றை ஒவ்வொரு மருத்துவரும் சட்ட நெறிகளாக ஏற்றுக் கொள்ள வேண்டும்.

| | | |
|---|---|---|
| இருதயம் | – | சூரிய சக்தியாலும், |
| மூளை | – | சந்திர சக்தியாலும், |
| பித்தப்பை | – | செவ்வாய் சக்தியாலும், |
| நுரையீரல் | – | புதன் சக்தியாலும், |
| கல்லீரல் | – | குரு சக்தியாலும், |
| சிறுநீரகம் | – | சுக்கிர சக்தியாலும், |
| மண்ணீரல் | – | சனி சக்தியாலும் |

இயங்குகின்றன என்பதையும் மருத்துவர்கள் தாம் அறிந்து கொள்வதோடு, தம்மை நாடிவரும் நோயாளிகளுக்கும் அறிவுறுத்த வேண்டும். இதனால் உடலைக் காக்கும் நெறிமுறையை நோயாளிகள் அறிந்து கொள்ள ஓர் வாய்ப்பாக அமையும்.

## மருத்துவரின் தகுதிகள்

மருத்துவன் வயது முதியவனாய் இருத்தல் வேண்டும் என்றும், சோதிடக் கணிதத்திற்கோ, இளமையே தகுதியுடையதாகும் என்றும் மாபுராணம் கூறுவதையும் மருத்துவர் நினைவிற் கொள்ள வேண்டும்.

முதிர்ந்த பல்லாண்டுகளிற் பெறும் அறிவின் வன்மையும், நாடி நடைகளைப் பல்லாண்டுகளாய்ப் பற்பல நோய்களில் பார்த்து, அறிந்த பழக்கமும், பற்பல உடல்களின் வேற்றுமைகளைப் பிரித்து நன்கு கண்டறியும் திறமையும், தீராக் குறி குணங்களையும் எளிதில் தீரும் நற்குணங்களையும் (வளி, அழல், ஐயங்களின் துணை கொண்டு) ஆராய்ந்தறியும் வல்லாண்மையும், புதுமையாய் அவ்வப்போது தோன்றும் நோய்களைக் காணுங்கால், அறிவு மயங்காமல், அவற்றைத் தீர்த்து விடலாம் என்ற தெளிவும், துணிவும், போரிலே படைகளை நடத்திச் செல்லும் மாவீரம் பொருந்திய தலைவனைப் போன்று, நோய்களுக்குத் தக்கவாறு மருந்து செய்யும் திறனும், அதனால் நோய்களைத் தீர்க்கும் திறனும் ஒருங்கே கொண்ட மிக உயர்ந்த மருத்துவ முறைகளை நன்குணர்ந்த, வயதில் மூத்தவர்களே சிறந்த மருத்துவர்கள் ஆவார்.

இனி போகர் தமது மூவாயிரத்தில் கூறுவதையும் காணலாம்:

*எண்ணென்று சொல்வதனுக் கிளமை நன்றே*
*இல்லையேல் வேறுபா டெய்து மப்பா*
*கண்ணென்ற வைத்தியத்துக் கிளமை யாகா*
*கடுமைதரும் பொறையை யடுங் குணமி ராது*
*நண்ணென்ற வுறுதி யிராதுர மி ராது*
*நன்மையிரா தவிழ்தவிகை நாடொட்டாது*
*துண்ணென்ற விரமிராக்க திகலி ராது;*
*சூட்சமிரா தாகையினாற் சொல்லொனாதே.*

எண் எனப்படும் சோதிடக் கணிதத்திற்கு இளம் பருவமே நல்லதாகும். கண்ணைப் போன்ற மருத்துவம் செய்வோர்க்கு இளமையாகா. ஏனெனில் இளமைப் பொறுமையை மறந்து கடுமையை நாடுதலும், அடக்கம், இரக்கம், எளிமை போன்ற நற்குணங்களைக் கைகொண்டிராமையும், நோய்களுக்குத் தக்கதிது, தகாததிது என எண்ணிப் பார்க்கும் பான்மையினையும், மருந்துகளின் தராதரங் களைப் பிரித்து அறிந்து, அவற்றின் நன்மை, தீமையையும் ஏற்றத் தாழ்வுகளை யும் மனதில் கொண்டு, மருந்தின் நுட்பங்களைஅறியும் ஞானம் இராமையால் இளம் வயதினர் மருத்துவம் செய்வதில் கைதேர்ந்தவராக இருக்க வாய்ப்பு ஏதுமில்லை. எனவே மருத்துவம் புரிய, வயதில் முதிர்ந்த அறிவார்ந்த மருத்துவரே சாலச் சிறந்தவர் என்பது தெளிவாகிறது. இவை இரண்டையும் ஒப்பு நோக்கினால் இளமையில் சோதிட கணிதத்தில் விற்பன்னரானவர், அதைத் தொடர்ந்து மருத்துவம் பயின்று, நல்ல மருத்துவரிடம் உதவியாளராய் இருந்து, சோதிடத்தையும், மருத்து வத்தையும் ஒருங்கே தமது தொழிலாகக் கொண்டு சீரும், சிறப்பும் அடையலாம் என்பது புலனாகிறது.

மருத்துவர் நோயாளியை அணுகிப் பரிசோதிக்கும் முன்னர்க் கடைப்பிடிக்க வேண்டிய நியதியைக் கீழ்வரும் செய்யுளால் உணரலாம்:

*சந்தனம் புனுகுப் பிச்சு*
*சடத்தினிற் பூசிப் பின்னர்*
*அந்தணர் கிரியை போல*
*வாசிரி யரடிவ ணங்கிச்*
*சிந்தையிற் குருவை வாழ்த்திச்*
*சிவபதம் நெஞ்சிலுன்னி*
*வந்ததோர் பிணிகள் தீர்க்கும்*
*வைத்தியன் முறையென் றோரே.*

தம்மை நம்பியோர்க்கும், மருத்துவம் செய்துகொள்ளப் பொன், பொருள் கொடுப்போருக்கும், மருத்துவம் செய்ய வேண்டும் என்பதைச் சுட்டிக்காட்டும் **தேரையர் யமக வெண்பாவை** மருத்துவர் மனத்தில் கொள்ள வேண்டும்.

*மருத்துவரை நோயினர்த மாதாபி தாவா*
*மருத்துவரை யென்னவருள் வைக்க – மருத்துவரை*
*கையடை யாளந்தக் காரியசித்தி லென்றுநம்பிக்*
*கையடையா ளந்தந்தக் கால்.*

நோயாளிகள் மருத்துவரை தமது தாய், தந்தையாகவும், சஞ்சீவி மலையாகவும் நினைத்து, (வளி, அழல், ஐயம் ஆகிய முக்குற்றங்களை நல்வழிப்படுத்தி), உடல் நோயின்றி ஒழுங்கு பெறுமாறு அருள்வீராக என்றுரைத்து, மருத்துவம் செய்வதற்குப் பொன் அல்லது பொருளைக் கொடுத்தால், அவர் மீது கருணைகொண்டு, மருத்துவர் அவர்களுக்கு மருத்துவம் செய்ய வேண்டும் என்பதை அறிந்திருத்தல் இன்றியமையாதது.

எனவே நோய் வராதிருக்கும் வழிமுறைகளையும், நோய் வந்த போது உடலைக் காக்கும் திறனையும் அறிந்தவரே நல்ல மருத்துவர் ஆவார் என்பதைச் சித்தர் நூல்களில் பரக்கக் காணலாம்.

8

# சித்தர் கணம்

மரு. கு. கணபதி

## முன்னுரை

மானிடராய்ப் பிறந்த ஒவ்வொருவருக்கும் மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்ற அந்தக்கரணங்கள் நான்கு உண்டு. மனத்தையுடையவன் மனிதன். மனத்தின் தொழில் சிந்திப்பது. அவ்வாறு எழும் சிந்தனைகளில் நல்லவையும், தீயவையும் கலந்து இருக்கும். அவற்றைப் பிரித்தறிவது புத்தியின் செயலாகும்.

ஒரு வகைப்பட்ட நல்ல எண்ணங்களின் வழிப் பிறந்த குறிக்கோளைப் புத்தி வகுத்துத் தர, அதன்பால் சித்தத்தைச் செலுத்தி, முயன்று முயன்று வெற்றி காண்பதுவே ''சித்தி'' எனப் பெயர் பெறும். இவ்வகையில் வெற்றி கண்ட மகான்களே சித்தர்கள். ஆகவே மனம், புத்தி, சித்தம் என்ற அந்தக் கரணங்களை ஒன்றிக்க வல்ல திறமையுடையவர்கள் ''சித்தர்கள்'' என்பதாயிற்று. மற்றும் அகங்காரத்தை அறவே நீத்தவர்கள்.

சித்தத்தில் சிந்தித்த படியே உடலையும், உணவையும் அடைந்து அனுபவிக் கின்றவர்களே சித்தர்கள். இவர்கள் சிவ நெறியைப் பூண்டு ஒழுகிய சித்த சமயத்தைச் சேர்ந்த தமிழ் மக்களே. இவர்கள் காரணகாரிய வகைகளால் உடம்பைச் சோதித்து, எவ்வகைப் பொருள்களால் உடல் வளர்ந்து அழிகின்றது என்பதை ஊக்கத்தாலும் முயற்சியாலும் கண்டறிந்து, உடம்பைப் பொய்யென்று சொல்வதற்கு மாறாக, மெய்யென்ற சொல்லுக்குப் பொருள் கண்டு, சித்திகளை அடைந்தவர்கள். மேலும் தங்களுடைய உடம்புகளை மாத்திரம் தகுந்தபடி பலப்படுத்திக் கொண்டால் பிறப்பு,

இறப்பினின்று நீங்கிவிடலாம் என்று உணர்ந்து, அனேக காலம் உயிருடனிருக்கக் கூடிய நித்திய வாழ்வைப் பெற்ற பெரிய மகான்கள் ஆவர்.

இவர்கள் மூச்சை அடக்கிப் பிடித்து மூலக்கனலாகிய குண்டலினி சக்தியை எழுப்பி, மந்திர மருந்துகளின் உதவியால் மாறாத மதியமுதுண்டு, நரை, திரை, மூப்பு இல்லா நித்திய உடம்பைப் பெற்றவர்கள்.

'கணம்' என்றால் 'கூட்டம்' என்றும் சித்தர் கணம் என்பது பதினெண் கணத்தவர்களின் ஒரு சாரார் என்றும் கூறப்பெறும். 1. அசுரர், 2. அந்தணர், 3. அமரர், 4. ஆகாயவாசி, 5. இயக்கர், 6. உரகர், 7. கருடர், 8. கந்தருவர், 9. கிம்புருடர், 10. கின்னரர், 11. சித்தர், 12. நிருதர், 13. நாதர், 14. பைசாகர், 15. யோக பூமியர், 16. முனிவர், 17. விந்தியர், 18. வித்தியாதரர் ஆகியோரே பதினெண் கணத்தவராவர்.

தற்காலத் தமிழ் மருத்துவத்திற்குச் சித்தர்கள் காரணகர்த்தர்களாகி, உலகோர்க்குப் பயன்படும் வகையில் பாடி வைத்த நூல் பலவாம். உலக மக்களுக்குப் பயன்தரும் நோக்கத்துடன் இயற்றப் பெற்றவை சித்தர்கள் எழுபதாயிரம், எண்ப தாயிரம், ஏழு லட்சம் எனப் பலவாறாகக் கூறப்படும். இவர்களது வல்லமையைப் பற்றி அடியிற் காணும் செய்யுள் விளக்கும்.

*காரப்பா சித்தன் கற்பத்தோடொன்றிக்*
*கைலாசப் பாசம தாய்க் கருதி வாழ்வான்*
*நேரப்பா கற்பதையுண்டு*
*நிசமான வாசியிற் சென்றிருப்பான்றானே என்றும்*
*தானாக தானவனாய் நின்று வாழ்வான்*
*சதா கோடி நாளுமொரு நாளாய் நிற்பான்*
*உளவான காயாதிகற்பமெல்லாம்*
*உண்டு கரையேறி யவனுறுதியாவான்*
*வானாள் அண்டபகிரண்ட மெல்லாம்*
*வரை கடந்து திரையகற்றி வந்து சேர்வான்*
*தேனான மொழியுடையான முதுபானம்*
*தினந்தோறும் கொள்பவனே சித்தனாமே*

என்று கூறியுள்ளதை வைத்துச் சித்தர்கள் எண்பெரும் சித்திகளைப் பெற்றவர் களாயிருந்தார்கள் என்பதை அறியலாம். அவற்றின் பயனாக அவர்கள் விண்ணில் பறப்பார்கள். கனல் மேல் இருப்பார்கள். நீர் மேல் நடப்பார்கள். கரடி, புலி இவற்றின் வாயையும் கட்டுவார்கள். இவ்வளவு பெரிய சக்திகளைச் சிவனெறிச் செல்வர் தாயுமான அடிகள் பின்வரும் பாடலில் விவரித்துள்ளார்.

*கந்துக மதக்கரியை வசமா நடத்தலாம்*
*கரடி வெம்புலி வாயையும்*
*கட்டலாம் ஒரு சிங்க முதுகின் மேற் செல்லலாம்*
*கட்செவி எடுத்தாட்டலாம்*
*வெந்தழலின் இரதம் வைத்து ஐந்து லோகத்தையும்*
*வேதித்து விற்றுண்ணலாம்*
*வேறொருவர் காணாமல் உலகத்துலாவலாம்*
*விண்ணவரை ஏவல் கொள்ளலாம்*
*சந்ததமும் இளமையோடிருக்கலாம் மற்றொரு*
*சரீரத்தினுள் புகுதலாம்*
*சலமேல் நடக்கலாம் கனல் மேல் இருக்கலாம்*
*தன்னிகரில் சித்தி பெறலாம்.*

## எண்வகைச் சித்திகள்

1. அனிமா, 2. மகிமா, 3. லகிமா, 4. கரிமா, 5. பிராப்தி, 6. பிரகாமியம், 7. வசித்துவம், 8. ஈசத்துவம் ஆகியவையே எண்பெரும் சித்திகளாம்.

1. அனிமா: அணுவாகும் தன்மை. அதாவது தன்னை மிக நுண்ணிய உருவமாக்கி வேறொருவர் காணாமல் உலாவச் செய்யும் சக்தியாகும்.

2. மகிமா: மா என்ற சொல்லே மகிமா என்று திரிந்தது. அதாவது பெரிய உருவமாகும் மகிமையே மகிமாவாகும். அதாவது தன்னுருவை மிகப் பெரியதாக விரித்து ஏனைய உருவங்களெல்லாம் தன்னைக் காட்டிலும் சிறியனவாகத் தோன்றுமாறு ஆகுதல்.

3. இலகிமா: இலகு என்பது எடை குறைந்த தன்மை. இலகுவாக்குவது இலகுமா. அதுவே இலகிமா எனத் திரிந்தது. மேல் நோக்கும் வலிமையை உண்டாக்குவது இச்சக்தியாகும். இதனால் நீர்மேல் நடத்தல் போன்ற செயல்களைப் புரியலாம்.

4. கரிமா: கரு என்பது கனம். கனத்தை உண்டாக்கும் தன்மை கருமை, அது கரிமா எனத் திரிந்தது. அதாவது எடை குறைந்த உடலை யானை போன்ற கனமானப் பொருளாக்குவது போன்ற சக்தியாகும்.

5. பிராப்தி: பெறுதி என்பது பெறுந்தன்மை. இது பிராப்தி என மருவி நின்றது. அதாவது தாம் நினைத்த எப்பொருளையும் நினைத்த பொழுதே பெறுவது பிராப்தியாகும்.

6. பிரகாமியம்: காமம் என்பது விருப்பம். காமியம் என்பது விரும்பிய பொருள். பெறு காமியம் என்பது விரும்பியப் பொருளைப் பெறுவது. இது பிரகாமியம் எனத் திரிக்கப்பட்டது . தாம் விரும்பிய எந்தத் தொழிலையும் இடையூறின்றி முடித்தலே பிரகாமியம் ஆகும்.

7. வசித்துவம்: வசம் என்பது கீழ்ப்படிதல். வசியம் என்பது கைவசப்படுத்துதல். வசத்துவம் என்பது கீழ்ப்படியும்படி செய்தல். இவையே வசித்துவம் எனக் குறிக்கப்படுகிறது. பிறர் உள்ளத்தைத் தன் உள்ளத்தால் கட்டிக் கவர்ந்து, அவர்களைத் தன் எண்ணப்படி நடத்துதலே வசித்துவமாம்.

8. ஈசத்துவம்: ஈசன் – கடவுள். ஈசத்தன்மை – கடவுள் தன்மை. ஈசத்தன்மையடைவதுவே ஈசத்துவமாகும். கடவுள் தன்மைப் பெற்று ஆக்கல், அளித்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்னும் ஐம்பெரும் செயல்களைப் புரிதலே ஈசத்துவமாகும்.

சித்தர்கள் எந்த அறிவுத்துறையிலாவது சித்தி அடைந்தோராவர். உலகத்தில் உள்ள அறிவாளிகளும், ஞானிகளும் கூறியவற்றைக் கேட்டு ஆய்ந்து அதில் உண்மையெனக் கண்டவற்றைத் தமதாக்கி, அதை விளக்கி வளர்ப்பது சித்தி அடைபவர்கள் இயல்பாம்.

சித்தர் சிவத்தை நினைத்து நினைத்து சிவமானவராதலால் அவர் நரை, திரை, மூப்பு, பிணி, சாக்காடு முதலியவற்றைப் பெறாது, என்றும் இளமையோடும் வனப்புடனும் விளங்குவர் என்பதை

*நீல நிறனுடை நேரியிழை யாளோடும்*
*சாலவும் புல்லிச்சதமென்றிருப்பார்க்கு*
*ஞாலமறிய நரை திரை மாறிடும்*
*பாலனுமாவார் பராநந்தியாணையே*

என்ற திருமூலர் வாக்கால் அறியலாம்.

சித்தர்கள் யோகப் பயிற்சியின் முதிர்ச்சியால் ஞானம் பெற்று, அதன் துணையால் வாதம் செய்து மக்களின் உடற் பிணிகளையும், உள்ளப் பிணிகளையும் தீர்க்க முனைந்து வெற்றி கண்டவர்கள். வாத முறையாலும் ஒரு சிறிது ஞானமடைய வழியுண்டென்பதும் சித்தர்களின் உடன்பாடாம். ஆகவே சித்தர்கள் யாவரும் யோகம், ஞானம், வாதம், வைத்தியம் எனப்படும் நான்கிலும் சித்தி பெற்றவர்கள். உடல் அழியும் முன்னதாகவே முத்தி நிலை பெறுவதற்கு ஏதுவான சித்திகளைப் பெற வேண்டியது

இன்றியமையாதது என்பதை அறிந்தவர்கள். எனவே உடல் அழிந்தால் பிறகு முக்தி சாதனத்துக்கு அனேக பிறவிகளை அடைய வேண்டி வரும் என்பதை அறிந்து, முக்திக்கு முதற்படியாக யோக சாதனத்தைக் கடைபிடித்தலை வற்புறுத்தியும் உள்ளனர். யோகப் பயிற்சிக்குக் காய கற்ப முறை உதவியாக இருக்குமென்பதை உளங்கொண்டு வாத, வைத்தியத் துறையில் உழைத்து வெற்றி கண்டும் உள்ளனர்.

## பதினெண் சித்தர்

சித்தர்கள் நவசித்தர், நவாத சித்தர், நவகோடி சித்தர், பதினெண் சித்தர் எனப் பலவகைகளாகப் பற்பல நூல்களில் கூறப்பட்டுள்ளனர்.

என்ன காரணத்தினாலோ சித்தர்களைப் பதினெட்டுப் பேர்களாகத் தொகுத்துப் பார்க்கும் மரபு நிலைபெற்றுவிட்டது. சித்தர்களைப் பதினெண்மராகக் கூறும் வகையில் பல பட்டியல்கள் காணப்படுகின்றன. அகத்தியர், திருமூலர் என்ற பெயர்களைத் தவிர, ஒவ்வொரு பட்டியலும் புதுப்புதுப் பெயர்களைக் கொண்டவை களாகவே காணப்படுகின்றன. மருத்துவ யோக ஞான சாத்திரம் என்ற நூல் எந்தெந்தச் சித்தர் எங்கே சமாதி அடைந்தார் என்ற செய்தியைத் தருகிறது. இந்நூலின்படி ஒவ்வொரு சித்தரும் சமாதி அடைந்த இடத்தின் விவரம் வருமாறு:

1. திருமூலர் – சிதம்பரம், 2. இராமதேவர் – அழகர் மலை, 3. அகத்தியர் – பொதிகை மலை, 4. கொங்கணர் – திருவாரூர், 5. கமல முனி – திருவாரூர், 6. சட்டை முனி – திருக்கருவை, 7. கருவூரார் – மதுரை, 8. சுந்தரானந்தர் – மதுரை, 9. வன்மீகர் – எட்டுக்குடி, 10. நந்திதேவர் – காசி, 11 . பாம்பாட்டி – சங்கரன் கோயில், 12. போகர் – பழநி, 13. மச்ச முனி – திருப்பரங்குன்றம், 14. கோரக்கர் – பொறையூர், 15. பதஞ்சலி – இராமேச்சுரம், 16. தன்வந்திரி – வைத்தீச்சுரன் கோயில், 17. குதம்பை – மாயூரம், 18. இடைக்காடர் – திருவண்ணாமலை. என்பனவாகும். இதே போன்று சித்தர்கள் சமாதி அடைந்த இடங்களாக வேறு சிலவும் கூறப்பட்டுள்ளன. இது எந்த அளவுக்கு ஆதாரபூர்வமானது என்று தெரியவில்லை. இனிச் சித்தர்களைப் பதினெண்மராகத் தொகுத்துக் கூறும் பல்வேறு பட்டியல்களைக் காண்போம்:

### பட்டியல் 1

1. அகத்தியர், 2. போகர், 3. கோரக்கர், 4. கைலாசநாதர், 5. சட்டை முனி, 6. திருமூலர், 7. நந்தி, 8. கூன்கண்ணர், 9. கொங்கணர், 10. மச்ச முனி, 11. வாசமுனி, 12. கூர்ம முனி, 13. கமல முனி, 14. இடைக்காடர், 15. புண்ணாக்கீசர், 16. சுந்தரானந்தர், 17. உரோமரிஷி, 18. பிரமமுனி.

## பட்டியல் 2

1. திருமூலர், 2. இராமதேவர், 3. கும்பமுனி, 4. இடைக்காடர், 5. தன்வந்திரி, 6. வால்மீகி, 7. கமல முனி, 8. போகநாதர், 9. மச்ச முனி, 10. கொங்கணர், 11. பதஞ்சலி, 12. நந்திதேவர், 13. போதகுரு, 14. பாம்பாட்டி, 15. சட்டை முனி, 16. சுந்தரானந்த தேவர், 17. குதம்பைச் சித்தர், 18. கோரக்கர்.

## பட்டியல் 3

1. நந்தீசர், 2. திருமூலர், 3. சிவயோகர், 4. கருமுனிவர், 5. இடைக்காட்டீசர், 6. காலாங்கி, 7. புண்ணாக்கீசர், 8. மச்சமுனி, 9. கொங்கணர், 10. கஞ்சமலைச் சித்தர், 11. சட்டைநாதர், 12. பிரமர், 13. வியாக்கிரமர், 14. கமல முனி, 15. உருத்திரச் சித்தர், 16. கூன்கண்ணர், 17. பதஞ்சலி, 18. போகர்.

## பட்டியல் 4

1. சநாதர், 2. வியாக்கிரமர், 3. சட்டர், 4. ரோமச் சித்தர், 5. சுந்தரர், 6. மச்சநாதர், 7. போகர், 8. கமலர், 9. திருமூலர், 10. சனானந்தர், 11. காலாங்கி, 12. மலையேணிச் சித்தர், 13. நந்தி, 14. புலத்தியர், 15. புண்ணாக்கீசர், 16. கடுவெளிச் சித்தர், 17. சிவயோகர், 18. குருமுனிவர்.

## பட்டியல் 5

1. அகத்தியர், 2. உரோமர், 3. தேரையர், 4. புலிப்பாணி, 5. இாமதேவர், 6. அகப்பேய்ச் சித்தர், 7. அழுகண்ணர், 8. குதம்பைச் சித்தர், 9. போகர், 10. புண்ணாக்கீசர், 11. தன் வந்திரி, 12. கொங்கணர், 13 . சட்டை முனி, 14. கருவூரார், 15. நந்தி, 16. கமலர், 17. கன்னிச் சித்தர், 18. புலத்தியர்.

## பட்டியல் 6

1. அகத்தியர், 2. உரோமர், 3. கமலர், 4. யூகி, 5. கருவூரார், 6. மச்சேந்திரர், 7. போகர், 8. கொங்கணர், 9. புண்ணாக்கீசர், 10. தேரையர், 11. கோரக்கநாதர், 12. சட்டை முனி, 13. பாம்பாட்டி, 14. சிவவாக்கியர், 15. இடைக்காடர், 16. புலிப்பயணி, 17. சுந்தரானந்தர், 18. கடுவெளிச்சித்தர்.

## பட்டியல் 7

1. கோரக்கர், 2. கொங்கணர், 3. சட்டைநாதர், 4. கௌசிகர், 5. கல்லுளிச் சித்தர், 6. அகத்தியர், 7. தேரையர், 8. புலத்தியர், 9. கன்னிச் சித்தர், 10. சிவவாக்கியர், 11. கூன்கண்ணர், 12. புலிப்பாணி, 13. சுந்தரானந்தர், 14. குதம்பைச் சித்தர், 15. வாலை, 16. மச்சமுனி, 17. இராமதேவர், 18. ஆரூடச் சித்தர்.

## பட்டியல் 8

1. கன்னிமலையான், 2. வாசமுனி, 3. இராமதேவர், 4. கூன்கண்ணர், 5. நவநாதர், 6. வானலச் சித்தர், 7. தேரையர், 8. சண்டிகேசர், 9. யூகிமுனி, 10. சூதமுனி, 11. புண்ணாக்கீசர் 12. ஆரூடச்சித்தர், 13. குதம்பைச் சித்தர், 14. சோனா சித்தர், 15. போகர், 16. பூனைக்கண்ணர், 17. சிவவாக்கியர், 18. புலிப்பாணி.

## பட்டியல் 9

1. அகத்தியர், 2. திருமூலர், 3. போகர், 4. கோரக்கர், 5. சட்டை முனி, 6 . நந்தீசர், 7. கொங்கணர், 8. கமலமுனி, 9. இடைக்காடர், 10. சுந்தரானந்தர், 11. உரோம முனி, 12. பிரம முனி, 13. மச்ச முனி, 14. வராக முனி, 15. புண்ணாக்கீசர், 16. கைலாசநாதன், 17. கூன்கண்ணர்.

## பட்டியல் 10

1. நந்தீசர், 2. திருமூலர், 3. அகத்தியர், 4. சட்டைநாதர், 5. பதஞ்சலி, 6. ஊணர், 7. கண்ணர், 8. கோரக்கர், 9. கமல முனி, 10. சண்டிகேசர், 11. இடைக்காடர், 12. சிவவாக்கியர், 13. கொங்கணர், 14. போகர், 15. மச்ச முனி, 16. புண்ணாக்கீசர், 17. காலாங்கி, 18. சுந்தரானந்தர்.

## பட்டியல் 11

1. அருணந்தி, 2. புசுண்டர், 3. திருமூல நாதர், 4. வியாக்ரமர், 5. பதஞ்சலி, 6. சிவயோகர், 7. சநாதர், 8. சனகர், 9. சட்டநாதர், 10. பிரமர், 11. இந்திரன், 12. சோமநாதர், 13. கந்துரு, 14. காலாங்கி, 15. உருத்திரச் சித்தர், 16. ஒளியகத்தியர், 17. கஞ்சமலைச் சித்தர், 18. புலத்தியர்.

## பட்டியல் 12

1. சட்டை முனி, 2. கொங்கணர், 3. இடைக்காடர், 4. நந்தி, 5. கமல முனி, 6. கருவூர்ச் சித்தர், 7. புண்ணாக்கீசர், 8. கன்னிச் சித்தர், 9. வாலை முனி, 10. சண்டிகேசர், 11. பிர்ம முனி, 12. அகப்பேய்ச் சித்தர், 13. வாச முனி, 14. அழுகண்ணர், 15. உரோமர், 16. மச்சர், 17. சுந்தரர், 18. மூலநாதர்.

## பட்டியல் 13

1. கோரக்கர், 2. அழுகண்ணர், 3. அகப்பேய்ச் சித்தர், 4. கொங்கணர், 5. இடைக்காடர், 6. குதம்பைச் சித்தர், 7. சண்டிகேசர், 8. இராமதேவர், 9. வாசமுனி, 10. பாம்பாட்டிச் சித்தர், 11. போகர், 12. கன்னிச் சித்தர், 13. மச்சர், 14. சட்டை, நாதர், 15. புண்ணாக்கீசர், 16. சுந்தரர், 17. புலத்தியர், 18. அகத்தியர்.

## பட்டியல் 14

1. அகத்தியர், 2. யூகி, 3. கல்லுளி, 4. அகப்பேய், 5. வாலைச் சித்தர், 6. புலிப்பாணி, 7. தேரையர், 8. இராமதேவர், 9. குதம்பை, 10. கூன்கண்ணர், 11. கன்னிச் சித்தர், 12. புலத்தியர், 13. வாசர், 14. கம்பளிச் சித்தர், 15. கமலர், 16. சுந்தரர், 17. கடுவெளிச் சித்தர், 18. பிர்மமுனி.

## பட்டியல் 15

1. பொதிகை முனி, 2. உருத்திரச் சித்தர், 3. கன்னிச் சித்தர், 4. மச்சேந்திரர், 5. கடுவெளியார், 6. இராமதேவர், 7. சட்டை முனி, 8. அழுகண்ணர், 9. சோனாசித்தர், 10. போகர், 11. யூகி முனிவர், 12. ஆரூடச் சித்தர், 13. கமலர், 14. நவநாத சித்தர், 15. கௌசிகர், 16. புலிப்பாணி, 17. தேரையர், 18. புலத்தியர்.

## பட்டியல் 16

1. கௌசிகர், 2. யூகி, 3. கன்னிச் சித்தர், 4. கல்லுளிச் சித்தர், 5. கடுவெளிச் சித்தர், 6. வாசமுனி, 7. வாலைச் சித்தர், 8. சூத முனி, 9. மச்சேந்திரர், 10. தன்வந்திரி, 11. கூன்கண்ணர், 12. விளையாட்டீசர், 13. கம்பளிச் சித்தர், 14. புலிப்பாணி, 15. பூனைக்கண்ணர், 16. கோரக்கர், 17. புலத்தியர், 18. அழுகண்ணர்.

### பட்டியல் 17

1. திருமூலர், 2. புலத்தியர், 3. நந்திகேசர், 4. இடைக்காடர், 5. அகத்தியர், 6. புண்ணாக்கீசர், 7. போகர், 8. புலிக்கீசர், 9. கொங்கணர், 10. அழுகுண்ணி, 11. பாம்பாட்டி, 12. குதம்பை, 13. கருவூரார், 14. அகப்பேய், 15. தேரையர், 16. சட்டை முனி, 17. பூனைக்கண்ணர், 18. காலாங்கி.

### பட்டியல் 18

1. இராமதேவர், 2. திருமூலர், 3. கும்பமுனி, 4. வால்மீகி, 5. இடைக்காடன், 6. தன்வந்திரி, 7. மச்சமுனி, 8. கமலமுனி, 9. போகர், 10. கொங்கணர், 11. நந்தீசர், 12. பதஞ்சலி, 13. கோரக்கர், 14. சட்டைமுனி, 15. பாம்பாட்டி, 16. குதம்பை, 17. கருவூரார், 18. சுந்தரர்.

### பட்டியல் 19

1. அகத்தியர், 2. திருமூலர், 3. காலாங்கி, 4. போகர், 5. புலிப்பாணி, 6. சட்டை முனி, 7. மச்சமுனி, 8. இராமதேவர், 9. கமலமுனி, 10. உரோமமுனி, 11. கருவூரார், 12. இடைக்காடர், 13. சுந்தரானந்தர், 14. அகப்பேய்ச் சித்தர், 15. பாம்பாட்டிச் சித்தர், 16. தேரையர், 17. யூகி முனி, 18. யாக்கோபு.

### பட்டியல் 20

1. திருமூலர், 2. புலத்தியர், 3. நந்திதேவர், 4. இடைக்காடர், 5. அகத்தியர், 6. புண்ணாக்கீசர், 7. போகர், 8. புலிப்பாணி, 9. கொங்கணர், 10. அழுகண்ணி, 11. பாம்பாட்டி, 12. குதம்பைச் சித்தர், 13. கருவூரார், 14. அகப்பேய்ச் சித்தர், 15. தேரையர், 16. சட்டைமுனி, 17. பூனைக்கண்ணர், 18. காலாங்கி.

இப்பட்டியல்களின் மூலம் சித்தர்கள் பதினெட்டுப் பேர்கள் மாத்திரம் அல்லர், அதற்கும் மேற்பட்டோர் என்பது தெளிவாகிறது. சித்தர் பெரிய ஞானக்கோவை என வழங்கும் சித்தர் பாடல்கள் (அரு. இராமநாதன் பதிப்பு) என்ற நூலில் முப்பத்தி இரண்டு சித்தர்களின் பாடல்களும், மேலும் பெயர் தெரியாத சித்தர் களின் பாடல்களும் தொகுக்கப்பட்டுள்ளன. இந்நூல் குறிப்பிடும் பல சித்தர்கள் மேற்கூறிய பட்டியல்கள் எதிலும் இடம் பெறாதவர்கள் என்பதும் குறிப்பிடத்தக்கது. இனி இந்நூல் குறிப்பிடும் சித்தர் பட்டியல் வருமாறு:

1. பட்டினத்தார், 2. பத்திரகிரியார், 3. சிவவாக்கியர், 4. பாம்பாட்டிச் சித்தர், 5. இடைக்காட்டுச் சித்தர், 6. அகப்பேய்ச் சித்தர், 7. குதம்பைச் சித்தர், 8. கடுவெளிச் சித்தர், 9. அழுகண்ணிச் சித்தர், 10. கொங்கண நாயனார், 11. பீர்முகம்மது, 12. மதுரை வால சுவாமி, 13. சேஷ யோகியார், 14. சட்டை முனி, 15. திருவள்ளுவர், 16. கணபதிதாசர், 17. அகத்தியர், 18. உரோம ரிஷி, 19. திருமூல நாயனார், 20. சுப்பிரமணியர், 21. வால்மீகர், 22. நந்தீச்சுரர், 23. இராமதேவர், 24. கருவூரார், 25. கைலாயக் கம்பளிச் சட்டை முனி நாயனார், 26. காகபுசுண்டர், 27. சூரியானந்தர், 28. பூரணானந்தர், 29. இராமலிங்க சுவாமிகள், 30. குருஞான சம்பந்த சுவாமிகள், 31. அருணாசல குரு, 32. பட்டினத்தார்.

இப்பட்டியலிலும் இடம் பெறாத மேலும் பல புதிய சித்தர்களின் பெயர்களைச் **சித்தர் பாடல்கள்** (கோவேந்தன் பதிப்பு) என்ற தொகுப்பில் காண முடிகின்றது. அவை: உலோகாயதச் சித்தர், ஏனாதிச் சித்தர், காரைச் சித்தர், காளைச் சித்தர், தடங்கண் சித்தர் என்பனவாகும்.

மேற்கண்ட பட்டியலில் இடம் பெற்றுள்ள சித்தர் அனைவரது பெயரிலும் நூல்கள் காணப்படவில்லை. அவர்கள் நூல் இயற்றவில்லையா ? அல்லது இயற்றி அழிந்துபட்டனவா ? என்பது தெரியவில்லை. ஆனால் வழிவழியாக அவர்களும் சித்தர்களாக அறியப்பட்டு, பட்டியல்களில் இடம்பெற்று வருகிறார்கள்.

அகத்தியர், போகர், தன்வந்திரி, கருவூரார், திருமூலர், உரோமரிஷி, சட்டைமுனி, தட்சிணாமூர்த்தி, யூகிமுனி, கொங்கணர், இராமதேவர், புலிப்பாணி முதலிய சித்தர்களின் பெயரில் ஏராளமான மருத்துவ நூல்கள் வழங்கி வருகின்றன. உண்மையில் இவர்களது பெயர்களில் வழங்கி வரும் நூல்கள் யாவும் அவர்களாலேயே இயற்றப்பட்டன என்று கூறுவதற்கில்லை. பல்வேறு காலகட்டத்தில் வாழ்ந்தப் பல்வேறு சித்தர்களால் செய்யப்பட்டு, அவர்களே தம் நூலுக்குப் பெருமை சேர்க்கும் நோக்கத்துடன், அகத்தியர் முதலானோர் பெயரில் உலவவிட்டிருக்கலாம். அல்லது ஆசிரியர் யார் என்று அறிய முடியாத நிலையில் பிற்காலத்தார், அந்நூல்களை அகத்தியர் முதலானோர் செய்ததாகக் கருதி, அப்படியே வழங்கப்படுத்தியும் இருக்கலாம்.

## சித்தர்கள் பற்றிய தகவல்கள்

சென்னை அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகம், திருவனந்தபுரம் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகம், உ.வே. சாமிநாதையர் நூலகம், மதுரைத் தமிழ்ச் சங்கம், தஞ்சை சரசுவதி மகால் நூல் நிலையம் முதலியவற்றிலும் இன்னும் பல

தனியார்களிடத்தும் உள்ள சுவடிகளுள் சித்த மருத்துவம் பற்றிய சுவடிகளே மிகுதியாக உள்ளன என்பதும் குறிப்பிடத்தக்கதாகும். எந்தவொரு சித்தருக்கும் முற்றிலும் நம்பகத்தன்மையான, ஆதாரபூர்வமான வரலாறு இல்லை என்பதே உண்மை நிலையாகும். ஆதாரபூர்வமான வரலாறோ, காரண காரியத்தோடு விளக்கப்பட முடியாத நிலைமையோ ஏற்படும்போது, வெறுமையாக விடப்படுவதில்லை. அந்த வெற்றிடத்தை நிரப்புவதற்குக் கட்டுக்கதைகள் தோன்றிவிடுகின்றன என்பதே வரலாற்று நிகழ்வாகும். எனவே வரலாறு கிடைக்காதவர்களைப் பற்றி வழங்கி வரும் கதைகளை உண்மை வரலாறு என மயங்குதலும் கூடாது; அதேபோல் அவற்றை வெறும் கட்டுக்கதை எனப் புறந்தள்ளவும் கூடாது. கட்டுக்கதை என்பது சம்பந்தப்பட்டவரது வாழ்வின் ஏதோவொரு புள்ளியை மையமாகக் கொண்டே பின்னப்பட்டிருக்கும். உருவகத்தன்மை வாய்ந்த அக்கதைகளின் புராணத் தன்மையை அலசி ஆய்ந்து, பகுப்பாய்வு (demythification) செய்து பார்த்தால் ஓரளவுக்கு வரலாற்றுத் தன்மையை அறியலாம். சித்தர்களைப் பற்றித் தெரியவரும் செய்திகளை வெறும் கட்டுக்கதை எனப் புறந்தள்ளினால், அவர்களைப் பற்றிக் கூற ஒன்றுமே இராது. எனவே அவர்களைப் பற்றித் தெரியவரும் செய்திகள் தனித்தனிக் கட்டுரைகளாகப் பதிவு செய்யப்பட்டுள்ளன.

# 9

# அகத்தியர்

மரு. கு. கணபதி

## முன்னுரை

அகத்தியர் சித்தர்கள் வரிசையில் முதலாமவராகக் கருதப்படுகின்றார். இவர் கும்பத்தில் தோன்றியவர் என்பதால் கும்ப முனி என்றும், குறுகிய வடிவுடையவர் ஆதலால் குறுமுனி என்றும் அழைக்கப்படுகிறார். இதுவன்றி வண்டமிழ் மாமுனி, கும்ம மாமுனி, சந்தநூல் தமிழ் தந்தவர், குறியோன், பைந்தமிழ் முனிவன், அறிவன், முத்தண்டமிழ் தேர்முனி, தமிழர் கோமான், ஆதிமுனி என்பன அகத்தியரின் வேறு பெயர்களில் சில. இவர் தமிழ் மொழிக்கு இலக்கணம் வகுத்தவர் என்று கருதப்படுகிறது.

அகத்தியர் வடக்கேயுள்ள இமய மலையிலே நடைபெற்ற சிவன்–பார்வதி திருமணத்திற்குச் சென்றிருந்ததாகவும், அப்போது பக்தர்கள் அனைவரும் அங்கே கூடிப் பருவத மன்னன் மகளாகிய பார்வதியம்மையைச் சிவபெருமான் திருமணஞ்செய்து கொள்ளுகின்ற காட்சியைக் காண்பதற்கு நின்றார்கள் என்றும், அக்கூட்டமிகுதியினால் பூமியின் வடபகுதி சிறிது சாய்ந்ததாகவும், அதனை ஈடு செய்யும் பொருட்டுச் சிவ பெருமானுடைய திரு ஆணையால் அகத்தியர் பூமியின் தென் பகுதியாகிய பொதிகை மலைக்கு வந்தார் என்றும் புராணம் கூறும். இது பூமி உருண்டையானது என்பதை அறியாத மக்கள் கூற்றென்று ஆய்வாளர் கூறுவர்.

தென் மதுரையிலே கூடியது தலைச்சங்கம். அச்சங்கத்திருந்தோர் சிவபெருமானாகிய இறையனார், முருகவேல், அகத்தியனார் என்று கூறப்படுகிறது. **அகத்தியம்** என்ற சொல்லுக்குப் பொருள் 'இன்றியமையாமை' என்பது. இவர் தமிழ்

இலக்கணத்தை முதன் முதலாக வகுத்ததாகக் கூறப்படுகிறது. அக்காலத் தமிழ் இலக்கணத்தை அறிந்து கொள்ளுவதற்கு இன்றியமையாதது (அகத்தியம்) குறித்து அக்காலப் பெரியார் இந்நூலுக்கு அகத்தியம் என்றும் அதனை ஆக்கியவர் 'அகத்தியர்' என்றும் பெயரிட்டு அழைப்பாராயினர். இவ்வகத்தியரே இடைச்சங்க காலத்திலும் இருந்தவராவார்.

சித்தர் திலகராகிய அகத்தியனார் பொதிகை மலைக்கு வந்து முருகப் பெருமானுக்குத் திருக்கோயில் கண்டு வழிபட்டு, இன்றும் அடியார்களுக்குத் திருவருள் பாலித்து வருகிறார் என்று நம்பப்படுகிறது. பொதிகை மலையின் உயர்ந்த சிகரம் 'அகத்தியர் மொட்டை' (மொட்டை – முடி – சிகரம் Peak) என்ற பெயருடன் திகழ்கிறது. அகத்தியர் மொட்டையில் தோன்றுகின்றப் பேராறு, பொதிகை மலையின் நடுவே விளங்குகின்ற 'வானதீர்த்தம்' என்ற இடத்தில் அருவியாக விழுந்து, மேலும் இறங்கி ஓடிவந்து பழைய பாபநாசம் என்ற இடத்திலும் அருவியாக இறங்கிப் பின்னும் ஓடிவந்து மலையின் அடிவாரத்தில் இறங்குகிறது. இவ் வடிவாரமே பாபநாசம். பழைய பாபநாசத்தில் முருகன் கோயிலும், அகத்தியர் கோயிலும் இருக்கின்றன. பாபநாசத்தில் மிகப் பெரிய சிவன் கோயிலும் இருக்கின்றது. அங்கிருந்து 10–கிலோமீட்டர் தூரம் கிழக்கே வந்தால் அம்பாசமுத்திரம் என்ற பேரூர் உள்ளது. அங்கும் அகத்தியனாருக்குப் பெரிய கோயில் உள்ளது.

அகத்தியர் இசையிலும் தேர்ச்சி பெற்றவராயிருந்தார் என்பதைக் கீழ்க்கண்ட கதையின் மூலம் அறியலாம். மன்னன் இராவணன் மிகவும் புகழ் பெற்ற இசைப் புலவனும் ஆவான். ஒருசமயம் இராவணன் பொதிகை மலைக்கு வந்து அகத்தியரோடு இசைபாடப் போட்டிபோட்டான். இசைத்தமிழிலும் வல்லவராகிய முனிவர் அகத்தியர் பெருமான் இராவணன் கையிலிருந்து வீணையை வாங்கி இன்னிசை பாடினார். அதனைக் கேட்டு மெய்மறந்து நின்றான் இராவணன்.

இசை ஒலி கேட்டப் பறவைகளும், விலங்குகளும், மரஞ்செடி கொடிகளும் கூடத் தம்மை மறந்து அசையாது நின்றன. அப்போது பொதிகை மலையும் உருகிவிட்டது. அகத்தியர் அந்த வீணையை உருகிநின்றப் பாறையினுள்ளே புகுத்தி, இராவணனை நோக்கி இசை பாடிப் பாறையை உருகச் செய்து தன் வீணையை எடுத்துக்கொள்ளுமாறு கூறிவிட்டார். இராவணேசுவரன் மிகுந்த அச்சத்தோடு அவருடைய திருவடிகளிலே விழுந்து கும்பிட்டுத் தன்னுடைய சிறுமையை மன்னித்தருளுமாறு வேண்டிநின்றான். அகத்தியர் மீண்டும் தம் வீணையை மீட்டிப்பாடி, இளகி நின்ற மலையிலிருந்து இராவணனுடைய வீணையை எடுத்துத் தந்து, அவனை வாழ்த்தியருளினார். இராவணன் அவருடைய திருவடிகளில் பல முறை விழுந்து வணங்கிப் பின் இலங்கை சென்றான்.

அ. சாமி சிதம்பரனார் அவர்கள் தம்முடைய அகத்தியர் வரலாறு என்ற நூலில் சுமார் 37 அகத்தியர்கள் பல்வேறு காலங்களில் இருந்ததாகக் குறித்துள்ளார். அறிஞர் சுத்தானந்த பாரதி அவர்கள் மூன்றுக்கும் மேற்பட்ட அகத்தியர்கள் பல்வேறு காலங்களில் வாழ்ந்து, பல்வேறு இலக்கியங்களை இயற்றியுள்ளார்கள் எனக் குறிக்கின்றனர்.

ஏறக்குறைய இதே கருத்தை ரா. ராகவையங்கார் அவர்களும் கூறுகின்றார். இங்ஙனம் அறிஞர்கள் பலரும் கூறுவது உண்டு. அகத்தியர் பெயர் கொண்ட நூல்களை ஆராயின் அகத்தியர் என்ற பெயருடன் ஒன்றுக்கு மேற்பட்டவர்கள் இருந்திருத்தல் கூடும் என்பது உறுதியாகிறது. பிரமன் செய்த கும்பத்தில் தோன்றியவர் என்பதும், மித்திரன், ஊர்வசி மேல் மோகம் கொண்டு, வீரியத்தைக் கும்பத்திலிடத் தோன்றியவர் என்பதும், புலத்திய முனிவரின் சகோதரியாகிய உலோபா முத்திரை என்பவளை மணந்தவர் என்பதும், வில்லவன், வாதாபி என்னும் அரக்கர்களைக் கொன்றவர் என்பதும், கடலைக் குடித்து வற்றச் செய்தவரென்றும் இன்னும் இவைபோல்வனப் பலவும் பிற்காலத்தில் எழுந்த கதைகளாக இருக்கலாம். அகத்தியர் என்று ஒரு விண்மீன் உள்ளது. அதன் பயணப்பாதையைக் கொண்டு, அகத்தியரை மனிதராக உருவாக்கிவிட்டதாக ஓர் ஆராய்ச்சி உண்டு.

பல அகத்தியர் பற்றிய கருத்துகள் ஒன்றாகச் சேர்ந்து ஒரே அகத்தியருக்குச் சேர்ந்த சிறப்பாகத் தோற்றமளித்து மயக்குகின்றன. எது உண்மை, எது பொய், எந்தச் சிறப்பு எந்த அகத்தியரைச் சாரும் என்பது விளங்க முடியாத அளவு, அனைத்தும் கலந்து விட்டன.

## கந்த புராண அசுர காண்டத்தில்

1. *அகத்தியப் படலம்*, 2. *கிரவுஞ்சப் படலம்*, 3. *விந்தம் பிலம்புகு படலம்*, 4. *வில்வலன் வாதாபி வதைப்படலம்*, 5. *காவிரி நீங்கு படலம்*, 6. *திருக்குற்றாலப் படலம்* என்னும் ஆறு படலங்களில் அகத்தியர் வரலாறும், செயல்களும் பெருமைகளும் விவரிக்கப் பெற்றுள்ளன. இவர் விதர்ப்ப நாட்டு மன்னனின் மகளாகிய உலோபா முத்திரை என்னும் கற்பரசியை மணந்து இல்லறத்திருந்தவராகக் கூறுவர். இவருடைய தவப்புதல்வரே புலத்தியராவார். புலத்தியரைத் 'திண்மை சான்ற சித்தன்' என்று சிறப்பித்துள்ளமையால் மகனுரைக்கும் தந்தை நலத்தை' என்பதற் கிணங்க, தந்தையைப் போல மகனும் பெருஞ்சித்தராய்த் திகழ்ந்திருக்கலாம்.

திரிபில் சிந்தையன், தீது நான்கிற்படா ஒருமை கொண்ட உளத்தன், நம்மன்பருள் பெரியன்' – எனச் சிவபெருமானால் புகழப் பெற்றவர் அகத்தியர் என

நூல்கள் கூறும். மேலே குறிப்பிட்ட வரிகளில் உண்மையான சித்தரின் இலக்கணமும் விவரிக்கப்பெற்றுள்ளதையும் காணலாம்.

'நீண்ட தமிழால் உலகை நேமியிலளந்தான்' என்றும், 'ஈசன் நிகராய் உலகு சீர்பெற இருந்தான்' என்றும் 'என்றுமுள தென்றமிழ் இயம்பி இசை கொண்டான்' என்றும் அகத்தியர் புகழ்ந்து பாராட்டப்பட்டுள்ளார்.

அகத்தியர் தம்மைத் தேடிவந்து வணங்கிய இராமபிரானுக்கு மனமுவந்து பல மந்திரங்களை அருளிச் செய்து தம்மிடமிருந்த தெய்வீகம் பொருந்திய வில்லையும், கணைகள் நிறைந்த அம்பறாத் தூணியையும் தந்தருளி, இராவணனை வெற்றி கொள்ள ஆசியும் வழங்கினார் என்பது கம்பராமாயணம் கூறும் அகத்தியருடைய பெருமையாகும். இவர் யோகப் பயிற்சியில் இறுதிப்படியாகக் கூறப்பெறும் சமாதி நிலையை அனந்தசயனம் என்னும் தலத்தில் எய்தியிருந்ததாக நூல்கள் கூறும். சில நூல்களில் கும்ப முனிவர் என்று தனிப்படக்கூறி அவர் சமாதி எய்திய இடம் திருக்குடந்தை அதாவது கும்பகோணம் எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. இதனால் கும்பமுனி என்ற வேறொரு சித்தர் இருந்திருக்கலாமென்று எண்ண இடந்தருகிறது.

சித்தர்களுள் அகத்தியரின் பெயரில் வழங்கி வரும் நூல்களே மிகப்பலவாகும். உண்மையில் அத்துணை நூற்களையும் தனி ஒருவரே செய்திருக்க வாய்ப்பில்லை. காலந்தோறும் பல சித்தர்கள் தம் நூலுக்குப் பெருமை கிட்டும் என்ற எண்ணத்தில் அகத்தியர் செய்ததாகக் கூறியிருக்கலாம். அல்லது பல்வேறு காலங்களில் அகத்தியர் என்ற பெயரில் பல புலவர்கள் வாழ்ந்தும் இருக்கலாம். அல்லது பெயர் தெரியாத புலவர்களின் நூல்களைப் பிற்காலத்தார் பொதுவாக அகத்தியர் பெயரில் உலவவிட்டிருக்கலாம். எது எப்படியோ இன்று நமக்கு அகத்தியரின் பெயரில் வழங்கிவரும், அச்சேறியும், ஏறாமலும் இருக்கும் நூல்களின் தோராயமான பட்டியல் வருமாறு:

1. அகத்தியர் 1200
2. அகத்தியர் அகராதி
3. அகத்தியர் அனுபவ வைத்தியம்
4. அகத்தியர் அனுபோக சூத்திரம்
5. அகத்தியர் அறுசுவை நிகண்டு
6. அகத்தியர் அவிழ்த்த சாரம்
7. அகத்தியர் பாலவாகடம்
8. அகத்தியர் செந்தூரம் 300

9. அகத்தியர் எழுவகைத் தோற்றம்
10. அகத்தியர் குணவாகடம்
11. அகத்தியர் குருநாடி
12. அகத்தியர் குருநூல்
13. அகத்தியர் குருநூல் 60
14. அகத்தியர் குருநூல் முப்பு 50
15. அகத்தியர் குருநூல் வைத்தியம் 600
16. அகத்தியர் ஐந்து
17. அகத்தியர் ஐம்பதாயிரத்தில் சஞ்சீவி
18. அகத்தியர் ஐம்பது
19. அகத்தியர் கலைஞான சூத்திரம்
20. அகத்தியர் கலைஞான சூத்திரம் 1200 இல் வாத காண்டம்
21. அகத்தியர் கலைஞான சுருக்கம்
22. அகத்தியர் களங்கு 60
23. அகத்தியர் காமரூமி லேகியம்
24. அகத்தியர் கற்சுண்ணம்
25. அகத்தியர் கரிசால் 300
26. அகத்தியர் கர்மகாண்டம்
27. அகத்தியர் கர்மகாண்டம் 300
28. அகத்தியர் கர்மநிவர்த்தி நடு காண்டம்
29. அகத்தியர் கர்மநிவர்த்தி சூத்திரம்
30. அகத்தியர் கர்மசூத்திரம்
31. அகத்தியர் கர்ப்பக் கோள்
32. அகத்தியர் கர்ப்ப சூத்திரம்
33. அகத்தியர் கர்ப்பமுறை சூத்திரம்
34. அகத்தியர் கருக்கிடை சுருக்கம்
35. அகத்தியர் கருக்குரு 1000
36. அகத்தியர் கருமான சூத்திரம்
37. அகத்தியர் கட்டு வகைகள்
38. அகத்தியர் காயசித்தி வழலை சூத்திரம்

39. அகத்தியர் குளிகை
40. அகத்தியர் குளிர்ச்சி எண்ணெய்
41. அகத்தியர் குழம்பு
42. அகத்தியர் குழம்பு வகை வாகடம்
43. அகத்தியர் லேகிய வகை
44. அகத்தியர் மாந்திரீக நிகண்டு
45. அகத்தியர் முன் 80
46. அகத்தியர் முன்னூல் 80
47. அகத்தியர் முப்பத்தாறு
48. அகத்தியர் முப்பு
49. அகத்தியர் நாடி நிதானம்
50. அகத்தியர் நாடி பரீட்சை
51. அகத்தியர் நாடி வைத்தியக் குறிப்பு
52. அகத்தியர் நாலுகாண்டம் 1200
53. அகத்திய நாயனார் திரட்டு 80
54. அகத்திய நாயனார் வாகட வெண்பா
55. அகத்தியர் நேத்திர வாகடம்
56. அகத்தியர் நிகண்டு
57. அகத்தியர் நோயின் சாரம்
58. அகத்தியர் பச்சை
59. அகத்தியர் பச்சிலை மூலிகை
60. அகத்தியர் பாடல்
61. அகத்தியர் பலதிரட்டு
62. அகத்தியர் பற்பவகை
63. அகத்தியர் பற்பமும் செந்தூரமும்
64. அகத்தியர் பரிபாஷை
65. அகத்தியர் பரிபாஷை 5ஆம் காண்டம்
66. அகத்தியர் பரிபூரணம்
67. அகத்தியர் பரிபூரணம் 1200 (வைத்திய காண்டம்)
68. அகத்தியர் பதார்த்த குணாதிசய சூத்திரம் பதினாறு

69. அகத்தியர் பெருங்குழம்பு
70. அகத்தியர் பெருநூல் 1200
71. அகத்தியர் பெருநூல் முதற்காண்டம், இரண்டாங் காண்டம்
72. அகத்தியர் பிள்ளைப்பிணி வாகடம் 200
73. அகத்தியர் பின்னூல் 80
74. அகத்தியர் பூரண செந்தூரம்
75. அகத்தியர் பூரண காவியம்
76. அகத்தியர் பூரணம் 400
77. அகத்தியர் பூரண சூத்திரம்
78. அகத்தியர் பூரண திரட்டு
79. அகத்தியர் ரண வைத்தியம்
80. அகத்தியர் ரச குளிகை
81. அகத்தியர் ரச மணி
82. அகத்தியர் ரசவாத சூத்திரம்
83. அகத்தியர் ரத்தினச் சுருக்கம்
84. அகத்தியர் சஞ்சீவி
85. அகத்தியர் சப்த காண்டம்
86. அகத்தியர் சரக்கு 100
87. அகத்தியர் சரக்கு வைப்பு
88. அகத்தியர் சுருக்கம்
89. அகத்தியர் சூத்திரம்
90. அகத்தியர் சூத்திர வாதம்
91. அகத்தியர் சௌமிய சாகரம்
92. அகத்தியர் சௌமிய சாகர சுருக்கம்
93. அகத்தியர் தண்டகம்
94. அகத்தியர் தர்க்கம்
95. அகத்தியர் தர்க்க சாஸ்திரம்
96. அகத்தியர் தத்துவம்
97. அகத்தியர் திரட்டு 80
98. அகத்தியர் திரிபுவனக் கண்ணாடி

99. அகத்தியர் திராவக சூத்திரம்
100. அகத்தியர் தீட்சை நாடி சூத்திரம்
101. அகத்தியர் தீட்சை விதி 200 (மூதண்ட லேகியம்)
102. அகத்தியர் வாலை முப்பு 30
103. அகத்தியர் வாலை பரிபூரண வைத்திய நாடி சூத்திரம்
104. அகத்தியர் வாலை தீட்சை
105. அகத்தியர் வாலை வாகடம்
106. அகத்தியர் வாதம்
107. அகத்தியர் வாத சூத்திரம்
108. அகத்தியர் வாகடம்
109. அகத்தியர் வாகடம் வஜ்ஜிரகாயம்
110. அகத்தியர் வாகட சூத்திரம்
111. அகத்தியர் வாகட திரட்டு
112. அகத்தியர் வாகட வெண்பா
113. அகத்தியர் வாக்கியம்
114. அகத்தியர் வல்லாதி
115. அகத்தியர் வழலை
116. அகத்தியர் வைத்திய செந்தூரம் 300
117. அகத்தியர் வைத்திய சிந்தாமணி
118. அகத்தியர் வைத்திய கும்மி
119. அகத்தியர் வைத்திய பாடல்
120. அகத்தியர் வைத்திய பலதிரட்டு சூத்திரம்
121. அகத்தியர் வைத்திய பரிபூரணம் 400
122. அகத்தியர் வைத்திய பின்னூல்
123. அகத்தியர் வைத்திய ரத்தின சுருக்கம் 360
124. அகத்தியர் வைத்திய ரத்தின சுருக்கம் 360 (நாடி நிதானம்)
125. அகத்தியர் வைத்திய சதகம்
126. அகத்தியர் வைத்திய சரக்குப் பெயர் அகராதி
127. அகத்தியர் வைத்திய சாரம்
128. அகத்தியர் வைத்திய சூடாமணி

129. அகத்தியர் வைத்திய சுருக்கம்
130. அகத்தியர் வைத்திய சூத்திரம்
131. அகத்தியர் வைத்திய வாகடம்
132. அகத்தியர் வைத்திய வல்லாதி
133. அகத்தியர் வைத்தியம்
134. அகத்தியர் வைத்தியம் கர்மகாண்டம்
135. அகத்தியர் வைத்தியம் முன் 50
136. அகத்தியர் வைசூரி வாகடம்
137. அகத்தியர் வெண்கார மெழுகு
138. அகத்தியர் விஷபேதி வைத்தியம்
139. அகத்தியர் உதரக்கிரியை
140. அகத்தியர் உட்கரு சுருக்கம்
141. அகத்தியர் ஊழிக்கட்டு சூத்திரம்
142. அகத்தியர் அனுபவ வைத்திய முறை
143. அகத்தியர் அறுபத்து நாலு மூலிகை விபரம்
144. அகத்தியர் அசுவ வாகடம்
145. அகத்தியர் அட்டகர்ம மூலிகை வசீகரம்
146. அகத்தியர் அவத்தைக்குறி
147. அகத்தியர் ஔஷத முறை
148. அகத்தியர் பால சிகிட்சை
149. அகத்தியர் பேதி தைலம்
150. அகத்தியர் குரு செயநீர் 60
151. அகத்தியர் இந்திரஜால நிகண்டு 200
152. அகத்தியர் சோடசமாலை என்கிற அஷ்டாதி மாலை
153. அகத்தியர் கேசரி நூல் ஜாலத்திரட்டு
154. அகத்தியர் 12000
155. அகத்தியர் 5000
156. அகத்தியர் பட்சணி
157. அகத்தியர் பூஜாவிதி
158. அகத்தியர் வாத திறவுகோல் 48

159. அகத்தியர் வகாரத்திரய சூத்திரம் 200
160. அகத்தியர் வாக்கியம் – லேகிய வகை
161. அகத்தியர் வாக்கியம் – நெய் வகை
162. அகத்தியர் வாக்கியம் – சூரண வகை 50
163. அகத்தியர் அன்னசாரம் – தான்ய வர்க்கம்
164. அகத்தியர் அன்னசாரம் – ரச வர்க்கம்
165. அகத்தியர் அட்டவணை
166. அகத்தியர் சுவாமி காவிய நிகண்டு
167. அகத்தியர் சக்கர விதி
168. அகத்திய முனிவர் அருளிச் செய்த வைத்திய காவியம் 1500
169. அகத்திய முனிவர் அருளிச் செய்த அகண்டித அகராதி
170. அகத்திய முனிவர் அருளிச் செய்த அட்டகர்மம்
171. அகத்தீசுவரர் தீட்சைவிதி வைத்தியநூல்
172. அகத்திய நாயனார் அருளிச் செய்த சகல கலை ஞானம் 1200
173. அகத்தியர் பஞ்சபட்சி
174. அகத்தியர் வைத்திய கண்ணாடி.

# 10

# திருமூலர்

மரு. கு. கணபதி

திருமூலர் என்ற பெயர் மூலங்கிழார், ஐயூர் மூலங்கிழார், மூலங்கீரனார், மாமூலன் என்பவர்களைப் போன்று மூல நட்சத்திரத்தில் பிறந்து "திரு" என்ற சிறப்பு சேர்ந்து திருமூலராயிருக்கலாம் என்று உணர்த்துவதாகக் கொள்ளலாம். "திரு" என்பது இலக்குமி, செல்வம், சிறப்பு, அழகு, ஒளி, தெய்வத் தன்மை எனப் பல பொருள் உடையதாயினும் தெய்வத்தன்மை வாய்ந்த பெருமகன் என்றும் மூல நட்சத்திரத்தில் பிறந்தவர் இவர் என்றும் கொள்ளலாம்.

கயிலாயத்திலிருந்து அகத்தியரைக் காண சிவயோகியார் ஒருவர் வருகையில், சிதம்பரத்துக்கு அண்மையில் திருவாவடுதுறையில் மாடு மேய்த்துக் கொண்டிருந்த மூலன் என்ற பெயருடைய இடையன் இறந்து கிடக்க, அதைக் கண்ட ஆவினங்கள் வருந்தி ஓலமிட்டதைக் கண்டு பொறாமல் தம் ஆவியை அவ்விடையன் உடலில் செலுத்தித் தாமே இடையன் உடலுடன் இயங்கி, மாடுகளை ஓட்டிக்கொண்டு அவ்வவற்றின் வீடுகளில் சேர்த்துவிட்டு எங்கும் நில்லாமல் சிதம்பரம் (தில்லை) கூத்த பெருமான் ஆலயத்தில் யோக சமாதியில் ஆழ்ந்திருந்து திருமந்திரம் 3000 எழுதியருளினார் என்பர்.

திருமூலர் மூவாயிரம் ஆண்டுகள் வாழ்ந்து, ஆண்டொன்றுக்கு ஒரு பாடல் விகிதம் எழுதியவர் என்பர். ஆனால் இதுவும் ஆராய்தற்குரியது. கிடைக்கின்ற சான்றுகளைக் கொண்டு ஆராயின் இவர் கி.பி. 6ஆம் நூற்றாண்டின் முற்பகுதியைச் சார்ந்தவராய் இருத்தல் கூடும் என்பது புலனாகிறது.

'கயிலாயத்தொரு சித்தர் பொதியில் சேர்வார்' எனப் **பெரியபுராணம்** குறிக்கும் தொடர் கொண்டு சிலர் கயிலங்கிரியாகிய இமயத்திலிருந்து வந்தவர் எனப் பொருள் கொள்வார்கள். திருக்கயிலை மரபில் வந்தவர் எனப் பொருள் கொள்வதே பொருந்தும். 'கயிலை வழியில் வந்தேன் எனத் திருமுலர் சொல்வது இதனையே குறிக்கும். கயிலை மரபு என்பது சிவன் சக்திக்குச் சாத்திர முறையை அருள, சக்தி நந்தி தேவருக்கு அருள, நந்தி தேவர் சனற்குமாரர் முதலியவருக்கு அருள, அவர் அதை மெய்கண்ட தேவர்க்கு அருள இங்ஙணமாக வந்தப் பரம்பரையாகும். இந்தக் கயிலை பரம்பரையில் வந்தவரே திருமூலர் ஆவார். புராண இதிகாசக் கதைகளைக் கொண்ட இலக்கியங்களின் குறிப்புகளைக் கொண்டு ஆராயின், இவரது காலம் மிகத் தொன்மையானது என்னும் எண்ணத்தைத் தரும்.

தமிழில் விளங்கும் தொன்மையான தந்திர சாத்திர நூலான **திருமந்திரத்தின்** பகுப்பு தந்திரம் என்னும் பெயருடன் அமைந்துள்ளது. ஒன்பது தந்திரங்களில், மூவாயிரம் பாடல்களில் ஆகமக் கருத்துகள் கூறப்பட்டுள்ளன.

'அகர முதலாய் அனைத்துமாய் நிற்கும்', 'தன்னையொப்பா யொன்றும் இல்லாத் தலைமகன்', 'மற்றது பற்றிற் பரமனைப் பற்றுமின்' எனவரும் **திருமந்திரத்** தொடர்கள் **திருக்குறளில்** வரும் அகர முதல எழுத்தெல்லாம் ஆதி பகவன் முதற்றே யுலகு' 'தனக்குவமை யில்லாதான் தாள் சேர்ந்தார்க் கல்லால்', 'பற்றுக பற்றற்றான் பற்றினை' ஆகிய பாடல்களை நினைவுபடுத்துவன. அங்ஙனம் சுமார் 29 பாடல்களில் ஒத்த கருத்தோ, சொற்களோ இடம் பெறுகின்றன. இங்ஙனமே 20 தலைப்புகள் ஒத்துக் காணப்படுகின்றன.

பொதுப் பாயிரம்

வான் சிறப்பு

**முதல் தந்திரம்:**

கொல்லாமை

புலால் மறுத்தல்

பிறன்மனை நயவாமை

நல்குரவு

அன்புடைமை

கல்வி

கேள்வி

கல்லாமை

கள்ளுண்ணாமை

நடுவு நிலைமை

**இரண்டாம் தந்திரம்:**

பொறையுடைமை

பெரியாரைத் துணைக்கோடல்

**நான்காம் தந்திரம்:**

துறவு

தவம்

**ஏழாம் தந்திரம்:**

கூடா ஒழுக்கம்

**எட்டாம் தந்திரம்:**

வாய்மை

புறங்கூறாமை

அவாவறுத்தல்

**ஒன்பதாம் தந்திரம்:**

ஊழ்

சிவன் கயிலை மலையில் திருமணம் செய்து கொண்டபோது வடக்கே தாழ்ந்து, தெற்கே உயர்ந்தது என்றதனால் பூமியைச் சமப்படுத்தத் தெற்கே அகத்தியரை அனுப்பினார் என்பது புராணக் கதை. இதற்குத் திருமூலர் தரும் விளக்கம் வேறு. வடக்கு, தெற்கு என்பன முறையே இடகலை, பிங்கலையைக் குறிக்கும். அகத்தியான(முக்கியமான) மூலாக்கினியால் குண்டலினியை எழுப்பி மேல் அனுப்பும் யோகப் பயிற்சியால் இரண்டும் சமப்படும்.

*நடுவு நில் லாதிவ் வுலகஞ்சரிந்து*
*கெடுகின்ற தெம்பெரு மானென்ன ஈசன்*
*நடுவுள அங்கி அகத்திய நீ போய்*
*முடுகிய வையத்து முன்னி ரென்றானே*

என்பது திருமந்திரப் பாடல்.

இதே போல இறைவன் நஞ்சுண்டு கண்டம் கருத்தான் என்னும் கதையின் உண்மையையும் விளக்குகிறார்.

*கண்டங்கறுத்த கருத்தறி வாரில்லை*
*உண்டது நஞ்சென்றுரைப்பர் உணர்விலோர்*

என்பது திருமந்திரப் பாடல். பிராணாயாமப் பயிற்சியால் விந்தினை மேலேற்றி, யோக மார்க்கத்தில் அமுதமாக மாற்றும் உட்பொருளைக் கூறுவன இவ்வரிகள்.

விந்தற்பனம், விந்துசயம் என இரண்டு பகுதிகளைத் திருமூலர் ஏழாம் தந்திரத்தில் கூறுகின்றார். நஞ்சின் இயல்பு அழிப்பது. அமுதின் இயல்பு நெடிது வாழ வைப்பது. விந்தை இழப்பது மெல்ல இறத்தல் ஆகும். இங்கு விந்து நஞ்சு எனக் கொள்ளப்படுகிறது.

இராமலிங்க அடிகளும் இறவாமைக்கு வழி கூறும் போது ஆகாரம் முக்கால், மைதுனம் அரை, நித்திரை கால், பயம் பூச்சியம் எனக் கூறியிருப்பது நோக்கத்தக்கது. இது இல்லறத்தார்க்குக் கூறியது. மூலாக்கினியால் அழிக்கும் இயல்புடைய விந்தினை வீணாக்காமல் மேலேற்றி அமுதமாக்கிப் பருகினால் நெடிது வாழ்தல் கூடும், உறுப்பு இளகும், உரோமம் கருக்கும், இதனை “தமுரிதாரணை” என்னும் பகுதியால் குறிக்கின்றார்.

*இளகும் மேன இருளுள் கபாலமே* – தி.ம. 829

கண்டம் கறுத்தல் என்பது இருளும் கபாலத்தைக் குறிப்பது.

இறுதியில் திருமூலர் தம் குறிக்கோளுக்கிணங்க அகத்தியரைக் கண்டு சில காலம் அவருடைய ஆசிரமத்தில் தங்கிவிட்டுத் தில்லைக்கு மீண்டும் வந்து அங்கு சமாதி புகுந்தார் என்பது தெரியவருகிறது.

இவர் காலங்கி நாதரைச் சீடராக ஏற்று அவருக்கு எல்லா சித்திகளும் கைவர அருளிச் செய்தார். காலங்கி நாதருடைய சீடர் போகர், போகர் திருமூலரைப் பாட்டன் என்று தம் நூலில் மிக்க உரிமையுடன், அன்புடன் உறவு கொண்டாடுவதைக் காணலாம்.

பின்வரும் நூல்கள் இவர் பெயரில் வழங்கி வருகின்றன. இவை யாவும் திருமந்திரம் செய்த திருமூலரே இயற்றினார் என்பது உண்மையன்று. பிற்காலத்தில் திருமூலர் என்ற பெயரில் வாழ்ந்தச் சித்தர்களால் இயற்றப்பட்டிருக்கலாம் அல்லது வேறு பெயர்களில் வாழ்ந்தச் சித்தர்களால் இயற்றப்பட்டு, திருமூலர் என்ற பெயரில் வழக்கத்திற்கு கொண்டு வந்திருக்கலாம். பட்டியல் வருமாறு:

1. திருமூலர் எட்டு
2. திருமூலர் ஐந்நூறு
3. திருமூலர் குணவாகடம்
4. திருமூலர் கர்ப்ப உற்பத்தி
6. திருமூலர் கனவு நூல்
7. திருமூலர் நாடி சூத்திரம்
8. திருமூலர் பாடல் 8
9. திருமூலர் சொச்ச சூத்திரம்
10. திருமூலர் சூத்திரம்
11. திருமூலர் சூத்திரத் திரட்டு
12. திருமூலர் சூத்திரம் 50
13. திருமூலர் சூத்திரம் 800
14. திருமூலர் சூத்திரம் 1016
15. திருமூலர் தண்டகம்
16. திருமூலர் வாலை தீட்சை
17. திருமூலர் வாத சூத்திரம் 300
18. திருமூலர் வாகடம்
19. திருமூலர் வகார சூத்திரம்
20. திருமூலர் வகார திராவியம்
21. திருமூலர் வைத்தியம்
22. திருமூலர் வைத்திய முறை வசனம்
23. திருமூலர் 120
24. திருமூலர் திருமந்திரம் 1000
25. திருமூலர் வகார உபதேசம் 200
26. திருமூலர் உதிரக்கட்டு காஷாயம்
27. திருமூலர் சட்ட வர்க்கம்
28. திருமூலர் தத்துவம்
29. திருமூலர் வாரத்திரயம்

30. திருமூலர் ஆயுத வர்க்க நூல்
31. திருமூலர் கிரந்தி எண்ணெய்
32. திருமூலர் ஞானசுருக்கம்
33. திருமூலர் குருமுறை
34. திருமூலர் குளிகை
35. திருமூலர் நடாந்த குறிப்பு
36. திருமூலர் நாடி அந்தாதி
37. திருமூலர் நவரத்ன சிந்தாமணி
38. திருமூலர் நிகண்டு
39. திருமூலர் சிவயோக தீட்கை
40. திருமூலர் சௌமிய சாகரம்
41. திருமூலர் தம்பனக் குளிகை
42. திருமூலர் தீட்சா விதி
43. திருமூலர் நாடி இருப்பு.

# 11

# போகர்

மரு. கு. கணபதி

போகர் சீன நாட்டைச் சேர்ந்தவர் எனச் சொல்லப்படுகிறது. மண்பானை முதலியவை செய்யும் தொழிலர். இவர் காலாங்கி நாதருக்கு மாணாக்கர். இவர் புத்த சமயத் துறவி. சீனயாத்ரிகராக நம் நாட்டுக்கு 1600 ஆண்டுகளுக்கு முன் வந்து புத்தகயா, பாடலிபுத்திரம் முதலான இடங்களைத் தரிசித்துத் தமிழ்நாட்டுக்கு வந்தவர். இவர் பல நாடுகளைச் சுற்றி, பலப்பல மொழிகளைப் பயின்று மேலும் அந்தந்த நாட்டின் சிறந்த கலைகளைப் பயின்று தேர்ச்சி பெற்றவர். தென்தமிழ் நாட்டில் சோழ பாண்டிய நாடுகளுக்குச் சென்று பல காலம் தங்கித் தாம் அறிந்தவற்றைப் பல சீடர்களுக்குக் கற்பித்தும், தாம் அறியாதவற்றைத் தக்க ஆசான்களிடம் பயின்றும் வந்துள்ளதாகத் தெரிகிறது. இவரிடம் மருத்துவம் முதலான கலைகளைக் கற்ற மாணவர்கள், அவற்றைத் தமிழ்ப் பாடலாக இயற்றிப் "போகர் நூல்" என்று பெயர் சூட்டி வழிவழியாகப் பற்பல அனுபவ முறைகளை அவற்றுடன் கூட்டி நூலைப் பெருக்கி வந்தனர். பின்னர் அச்சிடப் புகுந்தோர் அவை யாவற்றையும் திருத்தியும், மாற்றியும், கூட்டியும், குறைத்தும் அப்பழைய நூல்களை அடியோடு மாற்றி விட்டனர் என்பர்.

போகர் நூல்களின் வாயிலாக இவருடைய பாட்டனார் திருமூலனார் என்றும் இவருடைய ஆசான் காலங்கி நாதர் என்பதும் அறியக் கிடக்கின்றது. இவருடைய ஆசான் எனப்பட்ட காலங்கி நாதரும் சீன நாட்டைச் சேர்ந்தவர் என்பது சில நூல் கருத்து. இவருடைய புதல்வரே கொங்கணச் சித்தர் என்பதும், இவருடைய சீடர் புலிப்பாணி என்பதும் பல நூல்கள் வாயிலாக அறியப்படுகிறது.

இவருக்கு மாணாக்கர் கொங்கணர், கருவூர்த்தேவர், சுந்தரானந்தர், மச்சமுனி, நந்தீசர், இடைக்காடர், கமலமுனி, சட்டைமுனி முதலியவராம். திருமாளிகைத் தேவரும் இவருடைய மாணவரே என்பர். இவரை அகத்தியரின் மாணவர் என்றும் கூறுவர். போகர் 7000 என்னும் நூலில் இவர் காலங்கி நாதரின் மாணவர் என்பது புலனாகிறது.

இவர் பல ஆண்டுகாலம் தம் சீடருடன் பழநியில் தங்கியிருந்து பல சித்து விளையாடல்கள் புரிந்துள்ளதாகவும், அக்காரணம் பற்றியே பழநிக்குச் 'சித்தன் வாழ்வு' என்னும் பெயர் உண்டாயிற்றென்றும் செவிவழிச் செய்தி நிலவி வருகிறது.

இவருடைய மருத்துவ வல்லமையைக் காட்ட வேண்டிப் பல பாடாணங்களையும் ஒருங்கு கூட்டி நீர், நெருப்பு முதலியவைகளுக்குக் கரைந்தும், புகைந்தும், உருகியும், ஆவியாகியும் போகாதவாறு திண்மையுறக்கட்டி, அக்கட்டைக் கொண்டே ஒரு பாலதண்டாயுதபாணி சுவாமி திருவுருவச் சிலை செய்து வைத்தார் என்றும், அந்தப் படிவம் தற்போது பழநி மூலவராய்ப் பிரதிட்டை செய்யப்பெற்று, இன்றும் நிலைத்து, ஆன்ம கோடிகளுக்கு அருட்சுரந்து வருவதாகவும் கூறப்படுகிறது.

போகர் உலகிலுள்ள பல நாடுகளுக்கும் சென்றுள்ளது போலச் சீன நாட்டுக்குப் பலமுறை சென்றிருந்தாரேயன்றி அவர் அந்த நாட்டவர் என்பது முற்றிலும் தவறானதாகும் எனக் கொள்ளுமாறும் உள்ளார். ஏனெனில் போகருடைய சமாதி பழநியில் இருப்பதாலும் அச்சமாதிக்கு இன்னும் பூசை நடந்து வருவதாலும் இவரைச் சீன தேயத்தவர் என்று கூறுவது பொருந்தாது.

இவருடைய சமாதிக்கு இன்றும் 'புலிப்பாணி சாமியார்' என்னும் ஒருவர் வழிவழியாக வழிபாடும் தொண்டும் செய்து வருவது குறிப்பிடத்தக்கது. எனவே இவருடைய சீடரே புலிப்பாணி என்பது வலியுறுத்தப் பெறுகிறது.

போகரின் சீடர் புலிப்பாணி வழிவந்த குயவர் குடியினரே பழநிக் கோயிலில் பூசை செய்து வந்தனர். மதுரை மன்னர் திருமலை அவர்களின் தளவாய் பழநி சென்றபோது, இதைக் கண்டு பொருத்துக்கொள்ள முடியாமல், கொடுமுடி, நாமக்கல், கரூர் ஆகிய ஊர்களிலிருந்து 5 அந்தணர் குடும்பங்களைப் பூசைக்கு அமர்த்தினார். (பழநித் தலபுராண நூலில் உள்ள பட்டயம் காண்க).

டாக்டர் இன்ஸ்லி (Dr. Ainsle) என்பவர் தம் நூல் ஒன்றில் பல்வேறு மருந்து தயாரிப்புப் பற்றி போகர் பாடிய நூல்களாக **போகர் யோக மார்க்கம், போகர் ஏழுநூறு, போகர் திருமந்திரம், போகர் நிகண்டு** ஆகிய நான்கு நூல்களையும் குறிக்கின்றார்.

கி.பி. முதல் நூற்றாண்டின் பிற்பகுதியில் போ (Fo) அல்லது போகி (Fohi) என்று ஒருவர் சீனாவுக்குச் சென்று புத்த மதத்தைப் பரப்பினார் என்று கூறப்படுகிறது. அவர்தான் இப்போகர் என்னும் கருத்தும் நிலவி வருகிறது. இக்கருத்தை வலியுறுத்தும் வேறு கருத்து இல்லையாதலால் இது சிந்தனைக்குரிய எண்ணமே.

தஞ்சை பிரகதீஸ்வரர் கோயிலின் விமானத்திலுள்ள கபாலக் கல்லின் சிற்ப வேலை முடிந்ததும் தலைமைச் சிற்பி இறந்தமையால் நெடுங்காலமாகக் கோயிலின் விமானக் கபாலக்கல்லை ஏற்ற வகையறியாது தயங்கிய சிற்பிகளுக்குப் போகர் தன் சீடர் மூலமாகப் பஞ்சு மூட்டைகளை உபயோகித்து மேலே ஏற்றும் உபாயத்தை கூறினர் என்பது வரலாறாகும். பிரகதீஸ்வரர் கோயில் கட்டப்பட்ட காலம் பத்தாம் நூற்றாண்டாகும். எனவே போகரின் காலத்தை இக்காலத்தை ஒட்டியதாகக் கொள்ளவே வாய்ப்பிருக்கிறது.

மேலும் நாகப்பட்டினத்துப் புது வெள்ளிக் கோபுரத்துச் சக்கரத்தை நிறுத்தி, அக்கோபுரத்துள்ளே வைக்கப்பட்டு நெடுங்காலமாகக் கிடந்த பொற்குவையை எடுக்கும் வகை தேர்ந்துகொள்ளப்படாதிருந்தது. இந்நிலையில் வாழைத்–தண்டையிட்டு சக்கரத்தை நிறுத்திப் பொற்குவையை எடுத்து ஏழ்மதில் திருப்பணி நடைப்பெற்றது என்னும் செய்தியும் உள்ளது.

**போகர் நிகண்டில்** திருமூலர், காலங்கி ஆகிய சித்தர்கள் குறிக்கப்படுவதால், இவர் அவர்கள் வாழ்ந்த ஆறாம் நூற்றாண்டில் வாழ்ந்தவராக இருக்கக் கூடும் என்ற கருத்தும் உண்டு. இவர் பெயரில் **போகர் கருக்கிடை நிகண்டு 1200, யோகம் 700** முதலான வேறு நூல்களும் கிடைக்கின்றன. போகர் இயற்றியதாக கூறப்பெறும் **போகர் எழுநூறு, போகர் ஜனன சாகரம்** என்னும் நூல்கள் உண்மையில் போகர் இயற்றியது அல்ல என்ற கருத்தும் நிலவுகிறது. ஆனாலும் **போகர் – 700**இல் அந்நூலாசிரியர் "விதமுற்ற போகரிஷி எனக்குச் சொன்னார்" என்றமையால் போகர் கூறியதால் அவரது சீடர்களால் எழுப்பப்பட்டன எனவும் கொள்ளலாம்.

போகர் பெயரில் வழங்கி வரும் நூல்கள் பின்வருமாறு:

1. போக முனிவர் வைத்தியம் 700
2. போக நாயனார் 762
3. போக நாயனார் 2ஆம் காண்டம்
4. போக நாயனார் நிகண்டு
5. போக நாயனார் சூத்திரம்
6. போக நாயனார் வழலை சூத்திர வெண்பா 20

7. போகர் வெண்பா
8. போகர் வெண்பா வைத்தியம்
9. போகர் வெண்பா யோக நூல்
10. போகர் 7000
11. போகநாதர் சரக்கு வைப்பு 700
12. போகர் ஆறாதாரக் கட்டளை
13. போகர் கன்ம சூத்திரம் 9
14. போகர் காரச் சுண்ணம்
15. போகர் கர்ப்ப விதி
16. போகர் காயகற்பம்
17. போகர் 4ஆம் காண்டம்
18. போகர் நவரத்தின வைப்பு சூத்திரம்
19. போகர் நிகண்டு
20. போகர் பச்சிலை மூலிகை வைத்தியம்
21. போகர் ஜெனன சாகரம்
22. போகர் சூத்திரம்
23. போகர் வாத சூத்திரம்
24. போகர் வழலை வெண்பா
25. போகர் நிகண்டு அட்டவணை
26. போக நாதர் ஷோடச சூத்திரம்
27. போகர் திரட்டு
28. போகர் வாதகாண்டம்
29. போகர் பூஜாவிதி
30. போகர் சூலைத்திறம்
31. போகர் அட்டகர்ம யோகம்
32. போகர் ஞானம்
33. போகர் சிகிச்சை வெண்பா
34. போகர் நட்டிரரோக தைலம்

35. போகர் சரக்கு வைப்பு
36. போகர் பரங்கி பாஷாண வைப்பு
37. போகர் சுடலை சூத்திரம்
38. போகர் உலோக நிதி
39. போகர் உபரச நிகண்டு
40. போகர் வேதாந்த சூத்திரம்
41. போகர் வைத்திய சூத்திரம்
42. போகர் கருக்கிடை நிகண்டு 1200.

## 12

# புலிப்பாணி

மரு. கு. கணபதி

புலிப்பாணி போகரின் சீடர்களில் ஒருவர். பழநிமலை மீதுள்ள முருகனுக்கு ஒரு புலியின் மீதேறி ஒரு குடம் நீர் எடுத்துச் சென்று நீராட்டுவித்த காரணத்தால் 'புலிப்பாணி' என்ற காரணப் பெயர் அமைந்ததாக இவருடைய நூல் வாயிலாக அறியலாம். பழநிமலையிலுள்ள போகர் சமாதிக்கும், போகர் வைத்துப் பூசித்ததாகக் கூறப்படும் சிவலிங்கத்துக்கும் பூசை செய்து வருபவருக்கும் 'புலிப்பாணி சாமியார்' என்ற பெயர் இப்போதும் வழங்கி வருகிறது.

புலிப்பாணி இயற்றியதாகக் கூறப்படும் நூல்கள் யாவும் திரட்டு நூல்களே. புலிப்பாணி சீன நாட்டவர் என்பதும் இவர் போகரோடு சீன தேசத்திலிருந்து வந்து, தமிழ் நாட்டிலேயே தங்கியவர் என்றும் கூறப்படுகிறது. இவரை வைத்தியம் ஜாலவித்தைகளில் வல்லவர் என்பர். வைத்திய சாஸ்திரத்தில் 500 செய்யுளும், பலதிரட்டில் 100 செய்யுளும், ஜாலத்திரட்டில் 200 செய்யுளும் உள்ளன. ஜாலத்திலே கண்கட்டு வித்தை, பச்சைப் பாம்பு வித்தை, மாம்பழ ஜாலம் ஆகிய ஜாலங்கள் பாராட்டப்படுகின்றன.

இவர் புலியை நட்பாக்கிக் கொண்டு ஜலத்தை திரட்டிக் கையில் கொண்டதால் இப்பெயர் பெற்றார் என்பது இவர் பெயர் கொண்டு கட்டப்பட்ட கதை. "பாணி" என்பது "பாதம்". புலியைப் போல பாதத்தோடு விளங்கியவர் என்பது இதன் பொருள். வியாக்கிரபாதர் என்ற பெயரோடு விளங்கியவரே இச்சித்தர் ஆகும். ஒன்று தமிழ் பெயர் மற்றொன்று அப்பெயரின் வடமொழியாக்கம்.

இவர் பொழுது விடிவதன் முன்னர் வண்டின் எச்சில் படாத பூக்களைப் பறிப்பதற்காக பூமரம் ஏறுவதற்கு வாய்ப்பாக புலியின் பாதத்தோடு விளங்கியவர் ஆதலால் இப்பெயர் பெற்றார் என்பது சித்தர் மத்தியில் உலவி வரும் கருத்து.

இவரது ஆசிரியரான போகரும், இவரும் பழநிமலை அடிவாரத்தில் வைகாவூரில் வாழ்ந்தனர் என்பது கொங்கு மண்டல சதகம் 36ஆம் பாட்டால் தெரிகின்றது.

இவர் பெயரில் வழங்கி வரும் நூல்கள் வருமாறு:

1. புலிப்பாணி கற்ப உற்பத்தி
2. புலிப்பாணி பாடல்
3. புலிப்பாணி பலதிரட்டு 100
4. புலிப்பாணி வைத்தியம் 150
5. புலிப்பாணி வைத்தியம் 500
6. புலிப்பாணி வைத்திய சூத்திரம் 300
7. புலிப்பாணி ஜாலம்
8. புலிப்பாணி தீட்சை
9. புலிப்பாணி மரண வைத்தியம்
10. புலிப்பாணி 500
11. புலிப்பாணி சாந்திமுறை
12. புலிப்பாணி வன்மவிதி
13. புலிப்பாணி மாந்திரீக வைத்தியம்
14. புலிப்பாணி சிதம்பர பூசாவிதி.

# 13

# கொங்கணர்

மரு. கு. கணபதி

கொங்கணர் போகருடைய திருமகனாகவும் அவருடைய மாணவராகவும் இருந்தார். இவர் சேர நாட்டுக்கு வடபாலுள்ள கொங்கண நாட்டின் மாதரசிக்கு போகருடைய அருளால் தோன்றியவர் என்பது தந்தை போக நாதர், என்று கூறுவதால் அறியலாம். இவர் பளிக்கிச் சாதியார். இவர் வீரட்டகாசமூர்த்தியின் சிரத்தில் தமது குளிகையை வைக்க, அச்சிவலிங்க மூர்த்தம் அக்குளிகையை நீறாக்காது மறைத்ததால் அச்சிவ மூர்த்தியைப் பூசித்துத் திரும்பவும் குளிகையைப் பெற்றவர்.

இவர் திருமழிசை ஆழ்வாரிடம் சென்று ரஸகுளிகை ஒன்று கொடுத்து இது காணி கோடியைப் பேதிப்பது என்று கூற, ஆழ்வார் தம் தேகத்து அழுக்கை உருட்டி இது காணி கோடியாக்கும் என்று கொடுத்தனர். சித்தர் அதைப் பரிசோதித்து அறிந்து களிப்புற்று ஆழ்வாரிடம் நட்பு கொண்டனர். இவர் கோயம்புத்தூருக்கு அருகில் இருந்ததாகக் கூறுவர். கொங்கணர் பெயரால் வழங்கும் செவி வரலாறு ஒன்று வருமாறு: “கொங்கணர் என்ற சித்தர் ஒரு சமயம் தவம் இருக்கும் போது தம்மீது எச்சமிட்ட கொக்கினைச் சினந்து நோக்க, அக்கொக்கு உடனே எரிந்து சாம்பலாகி விட்டது. அவர் தம்முடைய வித்தையைத் தாமே வியந்து தருக்குக் கொண்டிருந்தார். “தருக்கால் சித்தன் திறம் அழியும்” என்பதைத் தம் ஆணவத்தால் மறந்தார் போலும். சில நாள் சென்ற பின் வழக்கம் போல ஒரு வீட்டின் முன் நின்று பிச்சை கேட்டார். அவ்வீடு திருவள்ளுவருடையது என்பதை அவர் அறியவில்லை. கொழுநன் பணிவிடையில் ஈடுபட்டிருந்த வாசுகி அம்மையார் சிறிது காலந்தாழ்த்திப் பிச்சையிட்டார். கொங்கணர் பிச்சையைக் காலந்தாழ்த்தியிட்டமை காரணமாக அவ்வம்மையைச் சினந்து நோக்கினர். ஆனால் அம்மையாரின் கற்புத்தீயை இவர் பார்வை ஒன்றும் செய்யவில்லை.

தம்மைக் கோபத்தால் பார்த்த அவ் ஆடவனை எள்ளிப் பார்த்துக் குறுநகையுடன் "கொக்கென்று நினைத்தனையோ கொங்கணவா" என்று கேட்டார் வாசுகி அம்மையார். இதனைக் கேட்ட கொங்கணர் தம்மை விட சித்தியில் மேம்பட்ட நங்கையின் திறம் கண்டு நாணித் தான் கொண்ட செருக்கினைக் கண்டு வருந்தினார் என்பதாகும். இவ்வரலாற்றில் கூறப்பட்ட திருவள்ளுவர் காலத்தால் பிற்பட்டவராகலாம்.

இவர் கொங்கு நாட்டைச் சேர்ந்தவராக இருக்கலாம் ஆதலின் இப்பெயர் பெற்றிருக்கக் கூடும். இவர் பெயரில் வழங்கும் நூல்கள் வருமாறு:

1. கொங்கணர் துரிசிகுரு 31
2. கொங்கணர் வாத முறை
3. கொங்கணர் வாத விளக்கம்
4. கொங்கணர் வாதம்
5. கொங்கணர் வாகட முக்காண்டம்
6. கொங்கணர் வாகடம் முதற்காண்டம்
7. கொங்கணர் வகார சூத்திரம் 50
8. கொங்கணர் வாக்கிய கர்ப்ப சூடாமணி
9. கொங்கணர் வாக்கியம்
10. கொங்கணர் பூஜா விதி
11. கொங்கணர் தீட்சை விதி
12. கொங்கண நாயனார் பாடல்கள்
13. கொங்கண நாயனார் செய்த சூத்திரம்
14. கொங்கணர் கடைக்காண்டம்
15. கொங்கண தேவர் ஐந்நூற்றிரட்டு
16. கொங்கண நாதர் சூத்திரம்
17. கொங்கண நாயனார் 500
18. கொங்கண நாயனார் பிராணோற்பத்தி லயம்
19. கொங்கண நாயனார் சூத்திரம் 40
20. கொங்கண நாயனார் 100
21. கொங்கண நாயனார் வழலை சூத்திரம் 40
22. கொங்கணர் ஐந்நூல் திரட்டு

23. கொங்கணர் ஐந்நூற்றில் முதற்காண்டம்
24. கொங்கணர் 500 கர்ப்ப விபரம்
25. கொங்கணர் கடைக்காண்ட சூத்திரம் 60
26. கொங்கணர் கடைக்காண்ட சூத்திரம் 61.
27. கொங்கணர் கடைக்காண்ட சூத்திரம் 500
28. கொங்கணர் கடைக்காண்டம் 1000
29. கொங்கணர் கர்ப்ப உற்பத்தி
30. கொங்கணர் கர்ப்ப விதி
31. கொங்கணர் கர்ப்பம் 100
32. கொங்கணர் கர்ப்பம் 110
33. கொங்கணர் கரு அமைப்பு அகவல்
34. கொங்கணர் கரு சாஸ்திரம் 21
35. கொங்கணர் முப்பு தீட்சை
36. கொங்கணர் முப்பு தீட்சை 40
37. கொங்கணர் நடுக்காண்டம்
38. கொங்கணர் நூல் முதல் காண்டம் 1000
39. கொங்கணர் நூல் இரண்டாங் காண்டம்
40. கொங்கணர் சரக்கு 100
41. கொங்கணர் சரக்கு வைப்பு 100
42. கொங்கணர் சரக்கு வைப்பு 101
43. கொங்கணர் சூத்திரம்
44. கொங்கணர் தண்டகம்
45. கொங்கணர் அதிசய சூத்திரம்.

# 14

## மச்சமுனி

மரு. கு. கணபதி

இவர் மச்ச தேயத்தைச் சேர்ந்தவர். அத்தேயத்தை விராடபுரம் என்பாரும் உண்டு. இவர் பரதவர் குலத்தவர் (செம்படவர்) என்று சிலர் கூறுவர். இவர் அகத்தியர் காலத்தவர் என்றும் கூறுவர். ரசவாத வித்தையிலும், ஞான நூலிலும் தேர்ந்தவர் என்றும் போகரின் மாணாக்கர் என்றும் கூறுவர். இவர் திருப்பரங்குன்றில் சமாதி கூடியுள்ளார் என்றும், திருவானைக்கா, மயிரேசகர் என்னும் தலங்களில் சமாதி பெற்றார் என்றும் நூல்களில் காணப்படுகிறது.

கடற்கரையில் சிவமூர்த்தி பார்வதியாருக்குத் தாரக மந்திரம் உபதேசிக்கையில், அவளுக்கு நித்திரை உண்டாக அம்மந்திரத்தை மீன் வயிற்றிலிருந்த பிள்ளை கேட்டு மனித உருவாகி வெளியே வந்தது. அதைக் கண்ட சிவமூர்த்தி அதற்கு மச்சேந்திரனென்று பெயர் கொடுத்தனர். மச்சேந்திரருடைய மாணவர் கோரக்கர். மச்சேந்திரர் கோரக்கருடன் கூடி ஓர் அக்கிரகாரத்தில் வந்து ஓர் பார்ப்பினி வீட்டில் பிச்சை கேட்க, அவள் ஒரு வடை கொடுக்க, வடையை கோரக்கர் மச்சேந்திரருக்குக் கொடுத்தனர். அதை உண்ட மச்சேந்திரர் அதன் ருசியை எண்ணி மறுநாளும் அவ்வடையே வேண்டும் என்று கேட்க, கோரக்கர் அப்பார்ப்பினியிடம் போய்ப் பிச்சை கேட்க, அவள் தானியம் கொண்டு வந்து இட, கோரக்கர் அதை மறுத்து வடை வேண்டுமென்றனர். பார்ப்பினி இல்லை என்று மறுத்தும், பிடிவாதமாய்க் கோரக்கர் வடையே வேண்டுமென்றனர். அப்பார்ப்பினி "உம் கண்ணைக் குரு கேட்டால் கொடுப்பீரோ அது போல் இல்லாதது கேட்கின் எவ்வகை தரல்கூடும், அங்ஙனம் தருவீரேல் வடை தரலாகுமென்று சொன்னாள். உடனே கோரக்கர் தமது கண்ணைப் பெயர்த்து அவருக்குக் கொடுப்பதை உமக்கும் கொடுக்கிறேன் என்று கொடுக்கப் பார்ப்பினி பயந்து நெய்யில் வடைசெய்து கொடுக்கக் கொணர்ந்து குருவின் முன்

வைத்தார். மச்சேந்திரர் இவரை நோக்கி, உன்னொரு கண் எவ்வாறு நீங்கியதென, கோரக்கர் வரலாறு கூறக்கேட்டு இவரது உறுதிக்கு உள் மகிழ்ந்து கண்ணளித்தார். பின்பு மச்சேந்திர நாதர் மலையாளமடைய பிரேளமா என்பவள் இவரைத் தன் வசப்படுத்தி, இவரிடம் இன்பம் அனுபவித்திருக்கும் நாளில் இவளுக்கு 'மீனநாதன்' என்று ஒரு புதலவன் பிறந்தான், மச்சேந்திரர் இவளுடன் இன்புற்றிருக்கையில், என்னைக் கோரக்கன் அழைத்துச் செல்ல வருவான் என்று கூறக்கேட்டு, வருத்தமுடையவளாய் மந்திரிகளை நோக்கி, நம் நாட்டுக்குள் துறவிகள் யாரும் அணுகவொட்டாமல் தலை துமிக்கவெனக் கூறினாள். அவ்வாறு காத்துவரும் காலத்தில், ஒரு நாள் கோரக்கர் ஆசிரியரை அழைத்து வர மலையாளம் வந்து ஒரு வீட்டில் பிச்சை கேட்க, அவ்வீட்டிற்குரியர் இவரது அழகைக் கண்டு இரக்கமுடையவராய் அந்நகரத்தின் செய்தி கூறினர். இதனால் கோரக்கர் அஞ்சி ஒரு மரத்தின் நிழலில் சமயம் பார்த்திருக்கையில், கூத்தாடிகள் அவ்விடம் வந்து துயரத்துடன் இருத்தல் கண்டு, அவர்களை ஏன் வருந்துகின்றீரெனக் கேட்க, நாங்கள் இந்நகரத்தரசரிடம் பரிசு பெறலாமென்று வந்தோம். மத்தளம் முழக்குவோன் நோய் கொண்டனன், என் செய்வோமென கோரக்கர் நான் மருந்தளிக்கின்றேன். நீவிர் வருக என்று அவருடன் சென்று மத்தளம் கொட்டுகையில், மத்தளத் தொனியால் கோரக்கனென்று அறிந்த மச்சேந்திரர் தமது நாயகிக்குக் கூற, அவள் வருந்தியிருக்கும் காலத்தில் கோரக்கர் மச்சேந்திரரை அழைத்தனர். மச்சேந்திரர், நாயகியையும், குமாரனையும் நீங்க மனமில்லாமல் ஒருநாள் தன் நாயகியுடன் படுத்துறங்குகையில், குழந்தை அணையில் மலோபாதைச் செய்ய, மச்சேந்திரர் கோரக்கரை அழைத்துக் குழந்தையை நீரில் அலம்பி வா என்றனர்.

கோரக்கர் குழந்தையை எடுத்துப் போய் ஆற்றிலம்பிக் கல்லில் மோதி வெயிலிலுலர வைத்தனர். பின் மச்சேந்திரர் மீனநாதன் எங்கென்று வினவ, நீரில் துவைத்து வெயிலிலும் உலர வைத்தேன் என்று உரைத்ததும், மச்சேந்திரரும், தேவியும் வாயிலும் வயிற்றிலும் அறைந்து கொண்டு அழுதனர். மச்சேந்திரர் கோரக்கரை நோக்கி, மீனநாதனை அழைத்துவா என்றதும், இவர் கல்லின் மேல் துவைத்ததால் சிதறிய துகளெல்லாம் 108 மீனநாதனாய் எதிர்வந்து நின்றன. இவர்களைக் கண்ட தாய் என் வயிற்றில் பிறந்த மீனநாதன் எவன் என்ன, 108உம் ஒன்று சேர்ந்து ஒரு குழந்தையாக இணைந்தனர். பின் கோரக்கர் மச்சேந்திரரை அழைக்க, மச்சேந்திரர் இவனுடன் செல்லாதிருக்கில் இன்னும் விபரீதம் விளைவிப்பானோ என்று மனைவியிடத்து விடை கொண்டு புறப்படுகையில் மனைவி வழியில் செலவிற்கு என்ன செய்வார் எனக் கோரக்கர் அறியாது ஒரு பொற்பாள தத்தினை ஜோலியிலிட்டு அனுப்பினாள். இருவரும் வழிச் செல்லுகையில் ஒரு குளத்தருகே சென்று, மச்சேந்திரர் இவ்விடத்துக் கள்ளர் உளரோ எனக்கேட்டு ஜோளியை அவ்விடம் வைத்து அகல, கோரக்கர் அவ்வகைக் கேட்டதற்குக் காரணம்

என்னவென்று ஜோளியைப் பார்க்க, அதிலிருந்த பொற்பாளத்தைக் குளத்தி லெறிந்துவிட்டு அதன் எடைக்குத் தக்கக் கற்களை நிறைத்து வைத்தனர். பின் சிறிது தூரம் சென்று மச்சேந்திரர் இவ்வழியில் கள்ளர் உளரோ எனக் கேட்க, கோரக்கர் இப்பயம் உமக்கு ஏன் என்றனர். மச்சேந்திரர் ஜோளியைப் பார்க்க, கற்களாய் இருத்தல் கண்டு, கோரக்கா நீ நல்ல சீடனில்லை, மகனைக் கொலை புரிந்தாய், பொன்னைக் கொள்ளை கொண்டாய் என்னை விட்டுப் பிரிக என, சீடர் அவ்வழியிலிருந்த மலையின் மேல் ஏறி சிறுநீர் விட, அந்த இடம் தங்கமாக, குருவை நோக்கி உமது பொருளை எடுத்துக் கொள்க என்று கூற, மச்சேந்திரர் மாயை தீர்ந்து சீடனைப் புகழ்ந்தார். இது ஒரு கதை.

சிலர் மச்சக் கொடியை உடைய ஒரு பாண்டிய மன்னன் சித்திகள் கைவரப்பெற்று முனிவராய்த் திகழ்ந்திருக்கக் கூடுமென்றும் கருதுகின்றனர்.

இவர் இயற்றிய பெருநூல் ஒன்றில் தாம் மச்சதேயத்து அந்தணர் வகுப்பில் தோன்றியவராகக் கூறியுள்ளார். இந்த அகச்சான்றால் இவர் பரதவர் குலத்தவரல்லர் என்பதுவும் அறியப்படுகிறது.

மச்சேந்திரர் பற்றி மற்றொரு கதையும் உண்டு. இவர் சஞ்சாரியாய்த் திரிந்து கொண்டு வருகையில், ஒருத்தி இவரிடம் புத்திரப்பேறு வேண்டினள். சித்தர் இவள் மீது கருணை கொண்டு, விபூதி கொடுத்து அதனை உட்கொள் என்றனர். விபூதி கொண்டவள் அண்டை வீட்டுக்காரியிடம் நடந்தவைகளைக் கூற அவள் இத்தகைய மாய வேஷக்காரன் ஒருகால் உன்னை மயக்கித் தன் வழிக்கொள்ள அவ்வாறு செய்தல் கூடுமெனப் பயமுறுத்தி அதனை அடுப்பிலிடச் செய்தனள். அடுப்பிலிட மறந்துபோய் அவள் இருக்கையில் சில காலம் பொறுத்து மீண்டும் அவ்வழியில் சித்தர் வந்து அவ்விபூதி பெற்றவள் வீடு சென்று நான் உன் பிள்ளையைப் பார்க்க வேண்டும் என்றனர். விபூதி பெற்றவள் நடந்தவற்றை ஒளியாது கூறினள். சித்தர் அவ்வடுப்புச்சாம்பல் எங்குளது என அதனை வாரி வழக்கமாகக் கொட்டும் வீட்டின் புழக்கடையிலுள்ள குப்பையைக் காட்டினாள். சித்தர் அவ்விடம் சென்று "கோரக்கா" என, ஏன் என்னும் ஓர் ஓசை உண்டாயிற்று.

பலரும் இதனைக் கண்டு வியக்கச் சித்தர் குப்பையை அகற்றச் சொல்ல, அதில் சித்தர் தாம் திருநீறு கொடுத்த காலம் முதல் பிள்ளையைக் கண்ட காலம் வரையிலுள்ள ஆண்டுகள் நிரம்பப்பெற்ற சிறுவனை அப்பெண்ணுக்குக் கொடுத்தனர். இவரால் இயற்றப்பெற்ற நூல்கள் : பெருநூல் எண்ணு று என்ற தலைப்புடன் எட்டு நூல்கள் உண்டு என்பர். ஒரு நூல் திருமந்திரம் என்பதாகும் இது சரக்கு வைப்பைக் கூறும். தற்போது ஓலைச் சுவடியாக மூன்று பெருநூல்கள்

கிடைத்துள. அவற்றுள் ஒன்று சரக்கு வைப்பை விவரிக்கும் நூலாகவும், மற்றது மைவித்தை, ஜாலவசிய மந்திர நூலாகவும் அமைந்துள்ளன. இவை யாவும் இன்னும் அச்சேறவில்லை.

இவர் இயற்றியதாகக் கூறப்பெறும் நூல்கள் வருமாறு :

1. மச்சமுனி 8
2. மச்சமுனி 800
3. மச்சமுனி நிகண்டு
4. மச்சமுனி நிகண்டு 100
5. மச்சமுனி பாடல்
6. மச்சமுனி பெருநூல் 800
7. மச்சமுனி சரக்கு சுத்தி
8. மச்சமுனி சரக்கு வைப்பு 800
9. மச்சமுனி சுருக்கம்
10. மச்சமுனி சூத்திரம்
11. மச்சமுனி சூத்திர விதி
12. மச்சமுனி வாக்கியம்
13. மச்சமுனி விவரணம்
14. மச்சமுனி காமேசுவர லேகிய முறை
16. மச்சமுனி மலைமூலி 45க்குப் பெயர் (மாபுருட காண்டம்)
17. மச்சமுனி மந்திரம், வைத்தியம்
18. மச்சமுனி மருந்து அகராதி
19. மச்சமுனி மருந்து அட்டவணை
20. மச்சமுனி மருந்து வகைகள்
21. மச்சமுனி மாட்டு வாகடம்
22. மச்சமுனி மாட்டு வைத்தியம்
23. மச்சமுனி மாட்டு வைத்திய வாகடம்
24. மச்சமுனி மேக நிதானம்

25. மச்சமுனி மூலிகை அகராதி
26. மச்சமுனி மூலிகை வைத்தியம்
27. மச்சமுனி மூலிகை குணம்
28. மச்சமுனி முதற்குரு துருசி
29. மச்சமுனி முப்பு மகிமை
30. மச்சமுனி நாடி நிதானம்
31. மச்சமுனி நாடி நூல் 18
32. மச்சமுனி நாடி பரிட்சை
33. மச்சமுனி நாடி சாஸ்திரம்
34. மச்சமுனி நாடி திரட்டு
35. மச்சமுனி நாடி வகையறிதல்
36. மச்சமுனி அறுநூறு
37. மச்சமுனி எண்பது
38. மச்சமுனி எண்ணூறு
39. மச்சமுனி அட்டவிதி
40. மச்சமுனி நாயனார் 800
41. மச்சமுனி சூத்திரம்
42. மச்சமுனி தீட்சா விதி
43. மச்சமுனி மரண லட்சணம்
44. மச்சமுனி மரண கண்டி
45. மச்சமுனி மரண கண்டியில் கணித சூடாமணி
46. மச்சமுனி மரணக் குறிப்பு
47. மச்சமுனி மருந்து போகங்கள்
48. மச்சமுனி மருந்து யோகங்கள்
49. மச்சமுனி மருந்து செய்யும் முறையும் பத்தியமும்
50. மச்சமுனி மருந்து அகராதி
51. மச்சமுனி மருத்துவரியல்பு
52. மச்சமுனி நாடி நிதானம்

53. மச்சமுனி நாடி சாஸ்திரம்
54. மச்சமுனி நாடி சூத்திரம்
55. மச்சமுனி நாடி தொந்தம்
56. மச்சமுனி நானாவித மருந்து
57. மச்சமுனி நயன சிகிச்சை
58. மச்சமுனி நயனவிதி
59. மச்சமுனி பதார்த்த குண சிந்தாமணி
60. மச்சமுனி பிள்ளைப் பிணி மந்திர வாதம்
61. மச்சமுனி பிள்ளைப் பிணி வைத்தியம்
62. மச்சமுனி திருமந்திரம் அல்லது சரக்கு வைப்பு மருந்துகள்
63. மச்சமுனி ஜாலவித்தை
64. மச்சமுனி ஜாலம்
65. மச்சமுனி நிகண்டு
66. மச்சமுனி பெரு நூல்கள்
67. மச்சமுனி சரக்கு வைப்பு
68. மச்சமுனி தீட்சை
69. மச்சமுனி தீட்சாவிதி நிகண்டு
70. மச்சமுனி வைப்பு 800
71. மச்சமுனி சிகிச்சை
72. மச்சமுனி சிகிச்சா சார சங்கிரகம்
73. மச்சமுனி நிதானம்
74. மச்சமுனி ஞானம்
75. மச்சமுனி குணவாகடம்
76. மச்சமுனி குருமுத்திரை
77. மச்சமுனி ஜால காண்டம்
78. மச்சமுனி ஜனன நூல்
79. மச்சமுனி ஜால நிகண்டு
80. மச்சமுனி கரிசால்

81. மச்சமுனி கும்மி
82. மச்சமுனி மதிவெண்பா
83. மச்சமுனி நாதாந்த சாரம்
84. மச்சமுனி நாடி நிதான சிந்தாமணி
85. மச்சமுனி பரிபூரணம்
86. மச்சமுனி பெருநூல் காவியம்
87. மச்சமுனி பெருநூல் சூத்திரம்
88. மச்சமுனி பெருநூல் வைத்திய காவியம்
89. மச்சமுனி புராணம்
90. மச்சமுனி சன்னி கியாழம்
91. மச்சமுனி சரக்கு வைப்பு
92. மச்சமுனி சூலை மருந்து
93. மச்சமுனி வாத காண்டம்
94. மச்சமுனி வெள்ளை
95. மச்சமுனி திராவகம்
96 மச்சுமுனி மகா கோடா குளிகை.

15

# பாம்பாட்டிச் சித்தர்

மரு. மொ. லோகமணியன்

இவர் அணிமாதி அட்ட சித்தி பெற்று, அதனால் யாதொரு ஆன்ம லாபமும் கிட்டாமை கண்டு ஞான மார்க்கத்தில் ஈடுபாடு கொண்டு சீவன் முத்தராகத் திகழ்ந்தவர். இவருடைய இயற்பெயர் தெரியவில்லை. இவர் பெரும்பாலும் ஞான நூல்களையே இயற்றியுள்ளார். இவர் தவ வலிமையால் தம் மனக்கண் முன் கூத்தப் பெருமானின் ஆட்டத்தையே அனவரதமும் கண்டவர். ஆதலால் இவர் கூறும் பாடல் யாவற்றிலும் "ஆடு பாம்பே, ஆடு" என்று ஆடுகின்ற பாம்பையே முன்னிலைப்படுத்தி இசைப்பர். இக்காரணம் பற்றியே இவரைப் பாம்பாட்டிச் சித்தர் என்றனர்.

இவர் நஞ்சு முறிவு மருத்துவத்திலும், மந்திரத்திலும் மிக்க வல்லவர் என்று புகழ்ந்து கூறப் பெற்றுள்ளாரேனும் அதற்குச் சான்றாக இவர் இயற்றிய நூல் யாதொன்றும் கிடைக்கவில்லை.

இவரைச் சிலர் பதஞ்சலி என்றும் நாகமுனி என்றும் கூறுவர்.

இவர் கோசாயி மரபினர் என்பது சில நூல்களில் காண்கிறது. இவர் திருமுதுகுன்றத்தில் சமாதி கூடி இருக்கிறார் என்பது சித்தர் நூலின் முடிவு. இவர் திருஞாலம் என்ற தளத்திலும், தண்டுவரை என்னும் துவாரகையிலும் சமாதி கூடி இருந்தார் என்பதும் சில நூல் வாயிலாய் அறியப்படுகிறது.

*ஆலடிப் பொந்தினிலே வாழ்ந்த பாம்பே*
*அரசடிப் பொந்தினிலே புகுந்து கொண்டாய்*
*வாலடி தன்னிலே பார்த்துப் பார்த்து*
*வாங்கியே தூங்கி நின் றாடுபாம்பே.*

*நாலு தெருவினிலே நாலு கம்பம்*
*நடுத்தெரு வினிலேயோர் பொன்னுக்கம்பம்*
*போலும் விளங்கு பொன்னுக் கம்பத்தினுக்கே*
*பூமாலை சூட்டியே நின் றாடு பாம்பே.*

இவ்வாறு சுமார் 130 பாடல்களில் பாம்பை விளித்துப் பாடியதாகச் சித்தர் ஞானக் கோவையில் காணப்படுகிறது.

மூலாதாரமாகிய பாம்பினை யோகப் பயிற்சியினால் எழுப்பி மேலேற்றும் திறம் பற்றிப் பாடியதால் இவர் பாம்பாட்டி எனப்பட்டார் எனலாம். அல்லது மனத்தைப் பாம்பாக உருவகம் செய்து அடக்குவதாகப் பாடியதால் இப்பெயர் பெற்றார் எனவும் கூறலாம்.

இவரை அந்தண குலத்தில் பிறந்தவர் என்பர். கொங்குநாட்டில் மருத மலையில் தவம் செய்ததாகக் கூறுவர். இன்னமும் பாம்பாட்டிச் சித்தர் குகை என்று இவர் பெயரில் அங்கு ஒரு குகை காணப்படுகிறது.

இவரைச் சட்டை முனியின் மாணவர் என்பர். சித்தர் ஆரூடம், நயனரோகவிதி, சியேராரோகவிதி முதலியன இவர் பெயரில் காணப்படுகின்றன.

கப்பல், சுக்கான், துப்பாக்கி, சவாரி, ஒயில் முதலிய 14 ஆம் நூற்றாண்டு சொற்கள் இவரது பாடல்களில் பயின்று வருவதால் இவர் காலம் இதுவாக இருக்கலாம் என்பர் மு. அருணாசலம் அவர்கள்.

இம்முறையில் சொல்லை வைத்து ஆராய்வது ஓரளவுதான் பொருந்தும். துப்பாக்கி என்ற சொல் திருக்குறளிலும் இடம் பெறுகிறது. இதை வைத்துக் கொண்டு, அது காலத்தால் பிந்தியது என்பது எவ்வாறு பொருந்தும்? துப்பு ஆக்கி எனப் பிரித்து அல்லவா பொருள் காணுகிறோம்? இவ்வண்ணமே சித்தர் நூல்களில் காணலாகும் சொற்களை வைத்துக் கொண்டு ஆராய்வது பொருளற்றது. ஒன்று அச்சொல் குழூஉக் குறியாகப் பயன்படுத்தப்பட்டிருக்கும். அல்லது அதனைத் தக்க முறையில் பிரித்துப் பொருள் காணும் வகையில் இருக்கும்.

இவர் திருக்கோகர்ணத்தில் பிறந்தவர் என்ற கருத்தும் நிலவி வருகின்றது. இவர் பாண்டிய நாட்டில் இருந்ததாகவும் கூறுவர். ஒரு முறை நவரத்ன பாம்பைப் பிடிக்கச் சென்றபோது சட்டை முனி அங்கு வர, அவரிடம் தீக்ஷை பெற்றுச் சமாதியிலிருந்து மீண்டும் எழுந்து பல சித்துகள் செய்தவர், ஓர் அரசன் இறந்த போது அவன் உடலிற் புகுந்து அவன் மனைவியுடன் இருந்தவர்: செத்த பாம்பு ஒன்றை ஆட்டியதால் இப்பெயர் பெற்றார் என்றெல்லாம் இவரைப் பற்றிய கதைகள் வழங்கி வருகின்றன.

இவர் பெயரில் மருத்துவ நூல் எதுவும் வழங்கவில்லை. ஞான சித்தராகவே இவர் பிரபல்யம் அடைந்துள்ளார்.

# 16

# அகப்பேய்ச் சித்தர்

மரு. மொ. லோகமணியன்

இவர் ஞான மார்க்கத்தில் மிக்க ஈடுபாடுடையவராவார். இவர் தம் மனத்தைப் பேய் என விளித்து அறிவுரை கூறுவது போலத் தம் பாடல்களில் 'அகப்பேய்' எனக் கூறுவர். அக்காரணம் பற்றி இவர் இயற்பெயரை அறியாமல், அகப்பேய்ச் சித்தரென்று அழைக்கப்பட்டுள்ளார்.

இவர் வேளாள மரபினரென்றும், அழகர் மலையில் சமாதி நிலை பெற்றார் என்றும் சில நூல்கள் கூறும். சில நூல்கள் இவர் எட்டுக் குடியிலும், திருவையாற்றிலும் சமாதியில் இருந்ததாகவும் கூறும்.

யோக நிலையின் மூலம் சித்தி பெறலாம் என்பது மற்ற சித்தர்களின் கருத்து. ஆனால் தன்னைத்தான் அறியும் அறிவைக் கொண்டே முக்தி பெற முடியும் என்பது இவரின் கருத்து.

இவர் மனித மனம் பேயாக அலையும் தன்மைப் பற்றிப் பேயாக உருவகப்படுத்தி, அலையாது நிற்க என அறிவுரை கூறிப் பாடியதால் இப் பெயர் பெற்றார் எனக் கருதலாம். இவரது பாடல்களின் இறுதியில் அகப்பேய் என்னும் சொல் முடிவு காணப்பெறுகிறது. சங்க காலத்தில் குப்பைக்கோழியார், காக்கைப் பாடினியார், செம்புலப் பெயல் நீரார், தேய்புரிப் பழங்கயிற்றியார் எனப் பெயர் பெற்றது போல இவரும் பாடல் மூலமாகப் பெயர் பெற்றவரேயாதலின் இவரது இயற்பெயரை அறியமுடியவில்லை. மற்ற சித்தர்களைப் போல இவரும் மறை பொருள் சொற்களைக் கொண்ட பாடல்கள் பலவற்றைப் பாடியுள்ளார்.

*தன்னை யறிய வேணும் அகப்பேய்*
*சாராமற் சார வேணும்*
*பின்னை யறிவதெலாம் அகப்பேய்*
*பேயறி வாகுமடி*
*தாறை நின்றவிடம் அகப்பேய்*
*சைவம் கண்டாயே*
*சைவம் ஆருக்கடி அகப்பேய்*
*தன்னை யறிந்தவர்க்கே.*

என வரும் கருத்துகள் இவரது பாடலில் பொதிந்துள்ள உயர் கொள்கையாகும்.

சித்தர் ஞானக் கோவையில் இவர் பெயரில் காணப்படும் 100 பாடல்களைத் தவிர வேறு தனி நூல்கள் காணப்படவில்லை.

# 17

## குதம்பைச் சித்தர்

மரு. மொ. லோகமணியன்

இவர் ஞான மார்க்கத்தில் மிக்க ஈடுபாடுடையவர். இவர் தம் பாடலில் 'குதம்பாய்' என்னும் ஒரு மகடூஉ முன்னிலையைப் பலமுறை கூறுவார். குதம்பை என்பது பனையோலைச் சுருளுக்குப் பெயர். அதைப் பெண்கள் காதுகளில் அணிவது மரபு. அதை அணிந்த பெண்ணே என்று பொருள் பயக்கும் வண்ணம் 'குதம்பாய்' என்று விளித்துப் பாடல் இசைத்தமையே இந்தச் சித்தருக்குக் குதம்பைச் சித்தரெனப் பெயரைத் தந்ததாகக் கருதப்படுகிறது.

இவர் பல்லாண்டு இல்லறத் துறவியாக இருந்து பின் அழகர்மலை என்னும் திருப்பதியில் சமாதி கொண்டுள்ளார் எனச் சில நூல்களில் காணப்படுகின்றது.

*ஆதாரமான அடிமுடி கண்டோர்க்கு*
*வாதாட்ட மேதுக் கடி – குதம்பாய்*
*வாதாட்ட மேதுக் கடி*

*செத்தாரைப் போலத் திரியுமெய்ஞ் ஞானிக்கும்*
*கைத்தாள மேதுக்கடி – குதம்பாய்*
*கைத்தாளமேதுக் கடி*

*மாங்காய்ப்பா லுண்டு மலைமேலிருப்போர்க்குத்*
*தேங்காய்ப்பா லேதுக்கடி – குதம்பாய்*
*தேங்காய்ப் பாலேதுக்கடி.*

இங்ஙனம் சித்தர் ஞானக் கோவையில் சுமார் 32 பாடல்கள் இவர் பெயரில் காணப்படுகின்றன. வேறு நூல்கள் இயற்றியதாக எந்தக் குறிப்பும் காணப்படவில்லை.

# 18

# உரோமரிஷி

மரு. மொ. லோகமணியன்

உரோமரிஷி ரோம் நாட்டிலிருந்து நம் நாட்டுக்கு வந்து தங்கிச் சித்தர்களிடம் உபதேசம் பெற்றுச் சித்தி பெற்றவராக இருக்கலாம் என்று கருதப்படுகிறது. இவருடைய குரு புசுண்டர் என்று இவரே தம் நூலில் கூறியுள்ளார். 'தம்பரத்தி லெனையாண்ட புசுண்டர் பாதம் சதாநிதம் பூசை பண்ணி' என்றும் 'என் குருவாண்டவர் புசுண்டரது கிருபையாலே உண்மையென்ற சூதமது கிடைக்கா விட்டால் உத்தமனே பறங்கி வைப்பு லிங்கமாகும்' என்றமையாலும் அறியலாம். இவர் பெயர் உரோமசன் என்றும் சிலர் கூறுவர்.

வைத்திய நூல் வல்லுநராகிய இவரைப் புசுண்டரின் மகன் என்பர். உரோமரிஷி 500 என்னும் நூலில் 'புசுண்டருடைய பிள்ளை ரோமன்' என்று தம்மைத் தாமே சுட்டிப்பாடுவதால் இதனை அறிய முடிகிறது. சித்தர்கள் பாடிய நூல்களைச் சட்டை முனி பறித்துக் கிழித்தபோது புசுண்டர் தம் புத்திரராம் இவரது பாடல்களைத் தம் சட்டையுட் சொருகி ஒளித்துப் பொதிய மலைக்குக் கொண்டு போய் அகத்தியருக்குக் காட்ட, அவரதை வாங்கி குகைக்குள் ஒளித்தனர் என்றும், மறுபடி நெடுங்காலம் அவருக்குத் தொண்டு செய்து அவரிடம் இவர் அதை வாங்கினார் என்பதையும் 'உரோமரிஷி 500' என்னும் நூலுள் 164, 165 ஆம் பாடல்கள் வாயிலாக அறியலாம். இந்நிகழ்ச்சி கொண்டு இவரைச் சட்டை முனி காலத்தவர் என எண்ண வேண்டியுள்ளது. எந்தவிதமான அக, புறச் சான்றுகளும் இல்லாததால் காலத்தைக் கணிப்பது மிகவும் அரிது. எனினும் சித்தர்கள் இயக்கம் கி.பி. 6ஆம் நூற்றாண்டுக்குப் பிறகே முழு வளர்ச்சி பெற்றது. ஆதலின் இக்காலத்திற்குப் பின்னர் இவர் தோன்றி இருத்தல் கூடும்.

சித்தர் ஞானக் கோவையில் சுமார் 15 பாடல்கள் இவர் பெயரில் காணப்படுகின்றன.

*பாரையா குதிரைமட்டம் பாய்ச்சல் போச்சு*
*முழுவதுமன் வந்ததுபோல் பிரசங்கித்து*

முதலிய காலத்தால் மிகப் பிற்பட்ட சொற்கள் இவர் பாடல்களில் காணக் கிடக்கின்றன. எனவே, காலத்தால் மிகப் பிற்பட்ட யாரேனும் இதனை இப்பெயரில் எழுதிச் சேர்த்திருக்க வேண்டும் என எண்ணத் தோன்றுகிறது.

இவருடைய உடம்பெல்லாம் உரோமமாயிருந்ததென்றும், ஒரு பிரமன் இறந்தால் ஓர் உரோமம் உதிரும் என்றும், இங்ஙனம் மூன்றரை கோடி பிரமன் இறக்கின் இவர் ஆயுள் முடியும் என்றும், இவர் இறக்கின் அஷ்டகோணரிஷி என்பவரது கோணம் ஒன்று நிமிரும் என்றும் கூறும் கதை ஒன்றும் வழங்கி வருகிறது.

இவர் பெயரில் வழங்கி வரும் நூல்களாவன:

1. உரோமரிஷி கர்ப்ப முறை 20
2. உரோமரிஷி சுருக்கம்
3. உரோமரிஷி சூத்திரம்
4. உரோமரிஷி வாதம்
5. உரோமரிஷி வைத்தியம்
6. உரோமரிஷி வாத பஸ்பங்கள்
7. உரோமரிஷி வாத கர்ப்பம்
8. உரோமரிஷி வாத மருந்து
9. உரோமரிஷி வாத முறை சாஸ்திர அகராதி
10. உரோமரிஷி வாதார்த்த சிந்தாமணி வைத்தியம்
11. உரோமரிஷி வாகட சாஸ்திரம்
12. உரோமரிஷி வாகட சூத்திரம்
13. உரோமரிஷி வாலக் கிரியை
14. உரோமரிஷி வண்ணச்சுவடி
15. உரோமரிஷி வன மூலிகைப் பிரயோக வண்ணம்
16. உரோமரிஷி கருமான சூத்திரம்

17. உரோமரிஷி நாயனார் சூத்திரம்
18. உரோமரிஷி வகார வைத்திய அட்டவணை
19. உரோமரிஷி வாதம் எண்பதுக்குப் பெயர்
20. உரோமரிஷி வாலை பொதுக் காண்டம்
21. உரோமரிஷி அருளிய சூத்திரம்
22. உரோமரிஷி 500
23. உரோமரிஷி சிவனார் வேம்பு தைலம்
24. இராமரிஷி ஞானம்
25. இராமரிஷி குருநூல்
26. இராமரிஷி கர்ப்பமுறை
27. இராமரிஷி கருமான சுருக்கம்
28. இராமரிஷி மதனிவன சுருக்கம்
29. இராமரிஷி முப்பு சூத்திரம்
30. இராமரிஷி பரிபாஷை
31. இராமரிஷி இரத்தினச் சுருக்கம்
32. இராமரிஷி திருமந்திரம்.

## 19

# கருவூரார்

**மரு. மொ. லோகமணியன்**

இவரைக் கரூர்த்தேவர் எனவும் வழங்குவர். இவர் கருவூரில் பிறந்ததால் கருவூரார் என்று பெயர் பெற்றார். இவர் கொங்கணரின் சீடர் என்று சில நூல்கள் கூறுகின்றன. சிவமார பாண்டியனின் காலத்தில் வாழ்ந்தவர் என்று திருநெல்வேலி யில் உள்ள கல்வெட்டுத் தெரிவிக்கிறது. திருநெல்வேலியின் மக்கள் இவரைப் பரிகாசம் செய்ததால் அவ்வூரை சபித்தார் எனவும் கூறப்படுகிறது. இவர் ஆசான் போகர் என்றும் வேறு நூல்கள் கூறுகின்றன. இவர் மறவர் இனத்தைச் சேர்ந்தவர் எனவும், இவர் தந்தை மாயன் என்றும் பாட்டனார் தேவத்தன் என்றும் தெரிய வருகின்றது. இவர் இராஜ இராஜ சோழனோடு சேர்ந்து தஞ்சைப் பெரிய கோயில் கட்டும் பணியில் ஈடுபட்டார் எனவும் தெரிகின்றது. இடைக்காட்டுச் சித்தரின் பாடல்கள் மூலம், அவரின் ஆசான் கருவூரார் என்று தெரிய வருகிறது. திருசல்லாதி இவர் சமாதி அடைந்த ஊர் என்று சித்தர் ஞானக்கோவை என்ற நூல் மூலம் அறியலாம். கருவூரார் கொங்கணரிடமும், கோரக்கரிடமும் சித்த மருத்துவ ஞானத்தைக் கற்ற பிறகு, தென் தமிழ் நாட்டிற்குச் சென்றபோது நலம் பெரிய முனி (அகத்தியராய் இருக்கக் கூடும்) என்பவரின் சாபத்திற்கு ஆளானார் எனவும் கூறப்படுகிறது. இவருடைய கோயில் தஞ்சாவூர் பெரிய கோயில் பின்னால் அமைந்துள்ளது. ஒரு சமயம் இவர் திருநெல்வேலி சென்று நெல்லையப்பரையும் காந்திமதி அம்மையாரையும் தரிசித்து மானூரில் தங்கியிருந்தார். அப்போது நெல்லையப்பரும் காந்திமதி அம்மையாரும் இவருக்கு நடனக் காட்சியைக் காட்டியருளினர் என்று நெல்லைத் தலபுராணம் கூறும். இவர் திருவிசைப்பா ஆசிரியருள் ஒருவர்.

சைவர்கள் போற்றும் திருமுறைகளில் **ஒன்பதாம் திருமுறையில் பத்து** பதிகங்கள் இவர் பெயரில் காணப்படுகின்றன. இவர் பாடிய பதிகங்களின் இறுதியில் 'கருவூரன்', 'கருவூரனேன்' என்று தம்மைக் குறித்துக் கொள்ளுகிறார். பத்துப் பாடல்களின் மூன்றாவது தவிர பிறவற்றில் தம் பெயரைக் குறிக்கின்றார். நெல்லைத் தலபுராணத்திலும், கருவூர்த் தலபுராணத்திலும் இவரது வரலாற்றை விரிவாகக் காணலாம்.

**கருவூர்த் தலபுராணத்தில்** காணப்படும் கருவூரார் அல்லது கருவூர்த்தேவர் அகத்தியருடன் வாழ்ந்ததாகக் குறிக்கப்படுவதால், இவர் சங்க காலத்தைச் சார்ந்தவர் எனக் கொள்ள வாய்ப்பு உண்டு. எனினும் எந்த அகத்தியர் காலத்தவர் என்ற ஐயம் எழுகின்றது. திருவிசைப்பா பாடிய கருவூர்த் தேவர் 9–10 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தவர் என்பதால் கருவூர்த் தலபுராணம் கூறும் அகத்தியர் இக்காலத்தவரே என்பது தெளிவு.

தஞ்சையில் இராஜ இராஜ சோழன் கட்டிய கோயிலில் சிவலிங்கப் பிரதிஷ்டைக்கு இவரே அஷ்டபந்தனம் செய்வித்தார் என்று ஒரு செய்தி வழங்கி வருவது கொண்டு, அவரது காலம் கி.பி. 11ஆம் நூற்றாண்டு என்பர்.

**ஒன்பதாம் திருமுறையில்** காணப்பெறும் கருவூர்த் தேவரது பாடல்களின் நடை, போக்கைக் கருவூர்ச் சித்தர் பாடல்களின் நடை, போக்கோடு ஒப்பிட்டுப் பார்க்கின் இரண்டும் வேறு வேறானவையாகத் தோன்றும்.

எனினும் இருவரும் வேறுப்பட்டவர் என்னும் முடிவுக்கும் வர முடியவில்லை. இராமலிங்க அடிகள் பாடிய திருவருட்பாவின் முதல் திருமுறை, நான்காம் திருமுறை, ஆறாம் திருமுறை இவற்றை ஆராய்ந்தால் இவற்றின் இடையே கருத்து முதலியவற்றில் பெரிய வேறுபாடு தெளிவாகத் தெரியும். குறிப்பாக முதல் ஐந்து திருமுறைகளைப் படித்தவர்கள் ஆறாம் திருமுறையைப் படிப்பின் கருத்தில் காணப்படும் மாற்றம் மட்டும் கொண்டு நோக்குவாரானால் இரண்டு பகுதியும் வேறு வேறு ஞானியரால் பாடப்பட்டன என்பர். ஆதலின் இங்ஙனமே கருவூர்த்தேவரது பாடலும் கருவூரார் பாடலும் கருத்தில் வேறுபடினும் இயற்றியவர் ஒருவர் எனக் கொள்ளவும் இடமுண்டு. சமயத் துறையில் ஈடுபட்டிருந்த போது கருவூர்த்தேவர் என்ற பெயரோடும், பின்னர் சமயம் கடந்த ஆன்மீக நெறியில் தொடர்ந்த போது கருவூரார் என்ற பெயரிலும் பாடியிருக்கலாம் எனக் கொள்வது பொருத்தமாக உள்ளது.

திருமழிசை ஆழ்வாராக விளங்கியவர் ஆன்மீக நெறி பற்றிய பின்னர் சிவவாக்கியராக ஆனார் என்பதால் நம் கருத்து வலுப்பெறுகிறது.

இவர் அந்தணர் குலத்தில் பிறந்தவர் என்றும் போகரது மாணவராய் இருந்தார் என்றும் கூறுவர்.

**கருவூரார் பூஜாவிதி** என்ற பெயரில் 30 பாடல்கள் சித்தர் ஞானக் கோவையில் காணப்படுகின்றன.

*புகலுவார் வேதமெல்லாம் வந்ததென்று*
*பொய்பேசிச் சாத்திரங்கள் மிகவும் கற்றே*
*அகலுவார் பெண்ணாசை விட்டோமென்றே*
*அறிவுகெட்டே ஊர்தோறுஞ் சுற்றிச் சுற்றிச்*
*சகலமுமே வந்தவர்போல் வேடம் பூண்டு*
*சடைமுடியுங் காசாயந் தன்னைச் சாற்றி*
*இகலுமன மடங்காமல் நினைவு வேறாய்*
*எண்ணமெல்லாம் பெண்ணாசை பூசை தானே*

எனப் போலிச் சாமியார்களைக் கண்டிக்கும் பாடல் ஒன்று இப்பாடல் திரட்டில் காணப்படுகிறது. குழூஉக் குறியமைந்த பாடல்கள் நிறைந்துள்ளன.

இவர் வாமியாதலால் (சக்தி உபாசகர்) மதுவூனருந்துவரெனச் சிலப் புன்மதி வேதியரிகழ அவர்களுக்கு மதியூட்ட மழை பொழிவித்தும், நதியைப் பெருக்கியும், திருக்கோயிலின் திருக்கதவைத் திறப்பித்தும், பூதங்கள் குடை பிடித்து வரச் செய்தும், அற்புதங் காட்டிக் காடு, மலை முதலிய இடங்களிலும் பல புண்ணிய பூமிகளிலும் சிவ தலங்களிலும் சஞ்சரித்து வந்து, தாமிரபரணி நதி தீரத்திலே குருகூரென்னும் வைணவ ஆலயத்தை அடைய, திருமால் அதன் முன்னரே அடியவர் கனவில் தோன்றி இவரை உபசரிக்கச் செய்தனர். நெல்லையப்பர் நேரே தரிசனம் கொடுக்கப் பெற்றவர். திருவிடை மருதூரில் சிவபிரானே அழைத்துத் தரிசனம் கொடுக்கப் பெற்றவர். முன்றீசரை வணங்கி மது வேண்டுமெனக் கேட்க, காளி கொண்டு வருக என கிடைக்கப் பெறாமை கூற, அங்கிருந்த வன்னி மரத்தை நோக்கி மீன்மாரி சொரிக என, அங்ஙனம் சொரிவித்து அவர்களை நோக்கி நீங்கள் இவ்வாறு செய்யாது மதுவருந்தலென்னையென, அவர்கள் முத்திநெறியை அருள்க எனப் பொதிய மலைக்கு வரக் கட்டளையிட்டுச் சென்று, ஒரு விஷ்ணு ஆலயத்தில் நாராயணனை விளித்து வராமையால் வெகுண்டு "நீ பூசையறுக" என்று சபித்து விட்டுப் பொதிகை அடைந்து அகத்தியரைத் தரிசித்து அங்கொருகால் இருக்கையில், தஞ்சையில்

சோழ ராசன் அமைத்த பெரியதோர் ஆலயத்தில் சிவப்பிரதிட்டைச் செய்யப் பலவாறு முயன்றும் மருந்திளகி பந்தனமாகாது வருந்த, ஆகாசவாணியால் கருவூர்த் தேவர் வந்தாலன்றிக் காரியஞ் சித்தியாதென உணர்ந்து, அங்கிருந்த போகமுனிவர் சீட்டொன்றை எழுதி காக்கையின் காலில் கட்டிவிடுத்துக் கருவூர்த்தேவரை வருவிக்க, தேவர் போகர் முதலியோர் அனுமதி கொண்டு ஆலயத்துட் சென்று சிவலிங்கப் பெருமானை ஆவுடையாளுடன் சேர்த்து நிறுத்தித் தமது வாய்த் தம்பலத்தை உமிழப் பந்தனமாகிப் பசும்பொன்னுருக்கி அமைத்தது போலிருத்தல் கண்டு யாவரையும் மகிழ்வித்தவர்.

பின்னர் தேவர் திருவானைக்காவைப் பணிந்து திருவரங்கத்தை அடைய அங்கிருந்தப் பொதுமடந்தை ஒருத்தி தேவர் திவ்விய உருவில் மோகம் கொண்டு பணிந்து தன் கருத்தை உணர்த்த, உடன்பட்டு இரண்டு தினங்கள் அவள் போகத்தை நுகராது நுகர்ந்து, திருவரங்க நாதர்பால் ஓர் இரத்தின வடத்தைப் பெற்று அதனை அவளுக்கு ஈந்து செல்லத் தொடங்குகையில், அவள் பிரிவாற்றாது வருந்த "நீ நினைப்புழியெல்லாம் வருவல்" எனக்கூறிச் சென்றனர். விடிந்தவுடன் அரங்கேசர் சந்நிதியில் காணப்பெறாத இரத்தின வடத்தை அம்மங்கையணிந்து கொண்டு செல்வது கண்டு இஃதுனக்கு யாரால் கொடுக்கப்பட்டதென வினவ அவள் "ஓர் அந்தணர் தந்தனர் என்றும் இன்றும் வருவர்" என்றும் கூறக் கோயில் ஆட்கள் சில காவலரை அவள் வீட்டின் புறத்திருத்தி "அக்கள்வனைப் பிடித்து வருக எனக் கட்டளையிட்டனர்." அன்றிரவு கருவூர்த் தேவர் வர, அக்காவலர் அவரைக் கொண்டு போய் தேவஸ்தானத்தார் முன்விட, இவ்விரத்தின மாலையை நீரோ இவட்குத் தந்தவர்? உமக்கு இஃது எவ்வாறு கிடைத்தது என, திருவரங்கத்தீசரே எனக்குக் கொடுப்ப, யானிவட்குக் கொடுத்தேனென, இஃதுண்மையாயின் அரங்கநாதன் இவ்வவையில் கூறல் அவசியமென, தேவர் திருமாலை வேண்டத் திருமால் ஆகாயத்தில் தோன்றி அசரீரியாகத் தாமே தந்தோம் எனக் கூறக் கேட்டு அவர்கள் அவரடியிற் பணிந்து மன்னிக்க வேண்டினிர்: அங்ஙனமே மன்னித்தார்.

தேவருடைய இனத்தவராகிய சில வேதியர் அரசன்பால் சென்று எமது குல ஒழுக்கம் மாறிய கருவூர்த் தேவரைக் கண்டிக்க வேண்டும் என, அரசன் கருவூராருடைய ஆசிரமத்தை அடைந்து ஒவ்வோரிடத்தையும் பரிசோதித்து வைதிக கருமங்கட்குரிய பல பொருள்களும் மலிந்து கிடக்கக்கண்டு, தேவரை வணங்கித் தன்னை மன்னிக்கும்படி மன்றாடிக் கேட்டுக் கொள்ளத் தேவர் அவ்வந்தணர்கள் இருக்கைகளையும் நீ கண்டு வருக என, அரசன் சென்று கண்டவிடமெல்லாம் மதுவும், புலாலும் மச்சமுமாயிருக்கக் கண்டு அவர்களை நகரை விட்டு நீங்குமாறு

கூறினர். அவ்வந்தணர் ஆன்பொருநை நதிக்கரையில் திரண்டு தேவருக்குத் தீங்கிழைக்கக் காத்திருக்கையில் கருவூர்த்தேவர் அங்கடைந்து திரு ஆநிலைக் கோயிலுட் செல்ல, அவர்களும் பின் செல்ல, கதியடைய வேண்டிய காலம் நேர்ந்தமையின் தேவர் பசுபதீச்சுவரரரைத் தழுவிக் கொள்ள சிவபெருமான் தம்முள்ளே இரண்டறக் கலந்து கொள்ள அருளப் பெற்றவர். அது கண்ட அந்தணர் அவரது மெய்யன்புக்கு வியந்தும் தமது அபசாரத்திற்குப் பயந்தும் நிற்க, உங்கள் குற்றங்கள் மன்னிக்கப்பட்டன என ஆகாயவாணி கூறக் கேட்டு மகிழ்ந்து சென்றனர். இவ்வாறு இவரைப் பற்றிய கதைகள் நிலவி வருகின்றன.

இவர் செய்ததாக அறியப்பெறும் நூல்கள் வருமாறு :

.1. கருவூரார் இலவண குளிகை
2. கருவூரார் கருக்கிடை மை
3. கருவூரார் மை விபரம்
4. கருவூரார் மூலிகைத் தைலம்
5. கருவூரார் நொண்டி
6. கருவூரார் பலதிரட்டு
7. கருவூரார் பலதிரட்டு 300
8. கருவூரார் பலதிரட்டு சூத்திரம்
9. கருவூரார் ரசவாதம்
10. கருவூரார் ரசவாத நொண்டி
11. கருவூரார் சூத்திரம்
12. கருவூரார் வைத்தியம்
13. கருவூரார் வைத்திய நொண்டி மாலை
14. கருவூரார் காசவிதி நூல்
15. கருவூரார் கட்டு வகைகள்
16. கருவூரார் காயகல்பம்
17. கருவூரார் அட்டகர்மம்
18. கருவூரார் ஞானம்
19. கருவூரார் கருக்கிடை

20. கருவூரார் பலதிரட்டு
21. கருவூர் நாயனார் ஞானம்
22. கருவூரார் அட்டமசித்து
23. கருவூரார் மாந்திரிகம்
24. கருவூரார் பூஜாவிதி
25. கருவூரார் சாந்த நாடகம்
26. கருவூரார் வாத காவியம்
27. கருவூரார் வைத்திய நொண்டி நாடகம்

# 20

# இராமதேவர்

மரு. மொ. லோகமணியன்

இவரே பின்னர் யாகோபு என்ற பெயருடன் விளங்கியவர் எனத் தெரிகிறது.

**யாகோபு வைத்தியவாத சூத்திரம் 400** என்னும் நூலில் இவர் மக்கா சென்றதற்கான காரணத்தை 397, 398, 399 ஆம் பாடல்களின் மூலம் அறியலாம். இவர் சதுரகிரியில் ஆசான் அகத்தியரோடு தங்கி இருக்கும்போது **கயிலாச சட்டை நாதர் தீட்ஷை 200** என்னும் நூல் எழுதி ரிஷிகளுக்கெல்லாம் மன்னவராம் திருமூலரிடத்தில் கொடுக்க, அதை அவர் கிழித்துப் போட, அகத்தியர் உட்பட ரிஷிகள் எல்லோரும் ஏன் கிழித்தீர் என்று கேட்க, திருமூலர் பதில் ஏதும் கூறாமல் இருந்தார் என்றும், இவர் கேட்க 'நீ கேட்க வேண்டாம் மேட்டினம் செய்யாதே நீ போபோ' என்று கோபித்துக் கொண்டார் என்றும், அதைக் கேட்ட பின்னரே இவர் மக்கா வந்தார் என்றும் கூறப்படுகிறது.

இவர் பிறப்பினாலேயே முகம்மதியர் எனவே இவர் காலம் கி.பி. 14 ஆம் நூற்றாண்டுக்குப் பிறகு இருக்கலாம் என்ற கருத்து அறிஞர் மத்தியில் வழங்குகிறது.

சித்தர் ஞானக் கோவையில் **இராமதேவர் பூஜாவிதி** என்ற பெயரில் 10 பாடல்கள் காணப்படுகின்றன. இவை மாந்திரீகம் பற்றியன என்பது குறிக்கத்தக்கது.

*சித்தான மூன்றெழுத்துச் செயலாஞ் சோதி*
*சீரியவை யுங்கிலியும் சவ்வுமாகி*
*முத்தான லட்சவுரு செபிக்கச் சித்தி*
*முற்றிடுமே யெதிரியென்ற பேய்கட்குந்தான்*

*வித்தான வித்தையடா முட்டும்பாரு*
*விரிவான முக்கருவு மூன்று கேளு:*
*சத்தான அதன்கருவும் சிலையில் வைத்துச்*
*சதுரான விதிவிவர மறியக்கேளே*

என்னும் இப்பாடல் சான்று ஆகும்.

இவர் நாகப்பட்டினத்தில் வீற்றிருந்து சிவபூசையில் சித்தரானார் என்ற கருத்தும் வழங்குகிறது.

இவர் பெயரில் வழங்கி வரும் நூல்கள் பின்வருமாறு:

1. இராமதேவர் ஆயிரம்
2. இராமதேவர் எண்பத்திரண்டு
3. இராமதேவர் பரிபாஷை 18
4. இராமதேவர் ஐம்பது
5. இராமதேவர் ஐந்நூறில் வைத்தியம்
6. இராமதேவர் கருக்கிடை
7. இராமதேவர் கடை சூத்திரம் 500
8. இராமதேவர் கருக்கிடை சூத்திரம் 600
9. இராமதேவர் கருமான சுருக்கம்
10. இராமதேவர் கேசரி 50
11. இராமதேவர் முப்பு விபரம்
12. இராமதேவர் நிகண்டு
13. இராமதேவர் பலதிரட்டு
14. இராமதேவர் பலதிரட்டு சூத்திரம்
15. இராமதேவர் பரஞானகேசரி
16. இராமதேவர் பரஞானகேசரி வினோதம் 100
17. இராமதேவர் பதினெண் பரிபாஷை
18. இராமதேவர் சிவயோகம்

19. இராமதேவர் சூத்திரம்
20. இராமதேவர் தண்டகம்
21. இராமதேவர் வைத்தியம்
22. இராமதேவர் வைத்திய சூத்திரம்
23. இராமதேவர் ரசவாதம்
24. இராமதேவர் ரசவாத நூல்
25. இராமதேவர் ரசவாதத் திரட்டு
26. இராமதேவர் ரசவர்க்கம் பதார்த்த குண சிந்தாமணி
27. இராமதேவர் ரத்தினச் சுருக்கம்
28. இராமதேவர் ருது சாத்திரம்
29. இராமதேவர் சாப நிவர்த்தி 150
30. இராமதேவர் சாப நிவர்த்தி தீட்சை
31. இராமதேவர் சகல வைத்திய அட்டவணை
32. இராமதேவர் சண்டமாருத குழம்பு
33. இராமதேவர் சங்கமுனி வைத்தியம்
34. இராமதேவர் சனி எண்ணெய்க் காப்பு
35. இராமதேவர் சன்னி பதிமூன்றுக்கும் கவி
36. இராமதேவர் சரக்கின் பெயர்
37. இராமதேவர் சரக்குக்கட்டு அட்டவணை
38. இராமதேவர் கர்ப்பராஜன் வைத்தியம்
39. இராமதேவர் சாத்திரம்
40. இராமதேவர் ஆயிரத்தில் சூத்திரம்
41. இராமதேவர் அஷ்டாங்க பட்சணி
42. இராமதேவர் சிவயோகம்
43. இராமதேவர் நிகண்டு வைத்தியம்
44. இராமதேவர் பாடல் – வைத்தியம் 500

45. இராமதேவர் பாடல் – மாந்திரீகம் 50
46. இராமதேவர் அதீதவிநோத சூட்சுமம்
47. இராமதேவர் கருக்கிடைச் சூத்திரம்
48. இராமதேவர் யோகம்
49. இராமதேவர் பூஜாவிதி
50. இராமதேவர் கேசரி
51. இராமதேவர் பெருநூல்
52. இராமதேவர் பட்சணி.

# 21

# தேரையர்

மரு. மொ. லோகமணியன்

## முன்னுரை

இவர் பெயரைப் பற்றிப் பலவிதமான கருத்துகள் மக்களிடையே உலவி வருகின்றன..

ஓயாத மண்டையிடி உடையவனின் மண்டை ஓட்டின் உள்ளே இருந்த தேரையை நீக்கினதால் தேரையர் என்ற பெயர் சூட்டப் பெற்றதாகக் கூறப்படும். இப்பெயரை வடமொழியில் மண்டூக மகரிஷி என்று மொழிபெயர்த்து, அதை மிக்க உயர்வாகக் கருதி வழங்கியும் உள்ளனர்.

இவர் நூலில் தாம் தருமசௌமியரின் சீடரெனக் கூறிக் கொள்ளும் காரணத்தால், இவரும் இவருடைய குருவைப்போல ஒரு சமணத் துறவி என்பது சிலர் கருத்தாகும். தேரையரை வணிகர் என்பாருமுண்டு.

இவர் மருத்துவக் கலையிலும் பல மொழிகளிலும் கற்றுத் தேர்ச்சி பெற்றவர் என்ற காரணம் பற்றித் தேரர் என்ற பெயர் வந்ததென்பதும் சிலர் கருத்தாகும்.

பாலி மொழியில் தேரன் என்ற சொல் பௌத்தத் துறவிகளைக் குறிக்கும். ஆதலால் இவர் ஒரு பௌத்தத் துறவி என்றும் சிலர் கருதுகின்றனர். இவர் வாழ்ந்த காலத்தில் தேரன் என்ற பெயருடைய பலர் இருந்ததாகவும் தெரிகிறது.

இவரால் இயற்றப் பெற்றன எனக் கூறப்படும் நூல்கள் இரு தரத்தனவாக உள்ளன. ஒருவகை நூல்கள் : **தேரையர் கரிசல், தேரையர் காப்பியம், தேரையர் யமகம், சிகாமணி வெண்பா** போன்றவை உயர்ந்த இலக்கிய இலக்கண நயம்

பொருந்தியனவாக உள. இதற்கு மாறாக மற்றொரு வகை நூல்கள் : **தேரையர் வைத்திய காவியம் 1001**, தேரையர் வாகடம் என்பவை இலக்கண வரம்புக் கடங்காத பாடல்களைப் போல் இருக்கின்றன. ஆகவே மேற்படி நூல்களை ஒருவரே இயற்றினார் எனக் கூறுதற்கு இடந்தரவில்லை என்று சிலர் கருதுவர். **நளவெண்பா** இயற்றிய புகழேந்தியாரே **அல்லியரசானி மாலையையும்** இயற்றியவராகக் கருதப்படுவதுபோல், **யமகமும், சிகாமணி வெண்பாவும்** இயற்றிய அதே தேரையரே, **தேரையர் வைத்திய காவியம் 1001, தேரையர் வாகடம்** ஆகிய நூல்களையும் இயற்றியிருக்கலாம் எனக் கருதுகின்றனர் சிலர்.

இவர் தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம், துளுவம், வடநூல் ஆகிய மொழிப் புலமையும் சோதிடம், ஐம்புள் சாத்திரம், கன்ம காண்டம், அளவை, சாங்கியம், வேதாந்தம், சித்தாந்தம் ஆகிய அறிவியல் நூல்களில் மிக்க தேர்ச்சி பெற்றவர் என்பதும் இவருடைய நூலைக் கற்பவர்க்குத் தெள்ளிதின் விளங்கும்.

மருத்துவத்தின் நால்வகை அமைப்பாகிய யோகம், ஞானம், வாதம், வைத்தியம் என்னும் நான்கிலும் உள்ள உட்பிரிவுகளில் நல்ல ஆய்வுத் திறனுடன் கூடிய புலமை பெற்றவராக இவருடைய நூல்கள் மிளிர்கின்றன.

இவருடைய ஞானாசிரியன் தருமசௌமியரென இவருடைய நூல் வாயிலாகத் தெரிகிறது. இவருடைய சீடர் யூகிமுனிவர் என்பது **யூகி சிந்தாமணி 800** என்னும் நூலால் அறிவிக்கப்படுகிறது. ஆயினும் தேரையர் நூலில் புலத்தியரின் சீடர் தருமசௌமியர் என்றும், தரும சௌமியரின் மாணாக்கர் தேரையர் என்றும் கூறியுள்ளமை சிந்திக்கற்பாலது.

தேரையர் தொண்டைவள நாட்டில் பாலியாற்றின் வடகரையிலுள்ள திரிமலைச் சேரி என்னும் சிற்றூரில் உதித்தவர். இவருடைய தந்தையார் நம்பி பூபதி என்பவர். இவர் மகாபாரதத்தில் மிக்க ஈடுபாடுடையவர் என்பது இவரியற்றிய **மருத்துவ பாரதம்** என்ற நூலால் அறியலாம்.

## தேரையர் யமக வெண்பா

இந்நூலுள் நோயாளியின் அசாத்திய, சாத்தியக் குறிகள், கற்ப முறைகள், சரக்குகளின் சுத்தி முறைகள், பற்ப செந்தூர முறைகள், அவைகளின் துணை மருந்துகள், பத்திய வகைகள் முதலியன விரிவாகக் கூறப் பெற்றுள்ளன.

மருத்துவத் துறையில் இவ்வகைப் பாடல்கள் வேறு யாராலும் இயற்றப் பெற்றில. இவ்வாசிரியர் தமிழ் மொழிப் புலமையும் மருத்துவத் துறையில் எல்லா அங்கங்களிலும்

தேர்ச்சிமிக்கப் புலமையும் ஒருங்கே அமையப் பெற்ற ஒப்பற்றவர் என இவ்வரியற்றிய நூலே எடுத்துக்காட்டும். இவர் சைவ, வைணவ ஒருமைப்பாட்டில் நாட்டமும், முருகனிடம் பக்தியும், சிவபக்தியும் நிறைந்தவராக இந்நூலில் பல இடங்களில் கண்டறியலாம். இவர் பாசுபதாத்திரத்தின் பெருமையைப் பல பாடல்களில் எடுத்துக்காட்டி விளக்கியுள்ளது குறிப்பிடத் தகுந்த ஒன்றாகும். இவருக்கு மகாபாரதத்தில் மிக்க ஈடுபாடு உண்டு என்பதையும் இந்நூலில் பற்பல இடங்களில் காணலாம். இந்நூலுக்கு உரை ஒன்றும் எழுதப்பட்டுள்ளது. உரையாசிரியர் பற்றிய குறிப்பு எதுவும் கிடைக்கவில்லை. இவ்வுரை ஆசிரியரும் தேரையரைப் போலவே தமிழ்த்துறையிலும் மருத்துவத் துறையிலும் புலமை பெற்றும் பன்மொழிப் புலவராகவும் இருந்திருக்க வேண்டுமென்று உணரலாம். இவ்விருவரின் பிறப்பிடம் முதலியவைகளை அறிய இவர் நூலில் யாதொரு அகச்சான்றும் இல்லை. இவ்விரு ஆசிரியர்களும் தொண்டை நாட்டைச் சேர்ந்தவர் என்பது செவிவழிச் செய்தி யாகும்.

தெலுங்குக் கவிஞர் வேமனரைப் பற்றித் தேரையர் 'உத்தம மஞ்சிவாரு சுவாமி நீவென வேமனர் வடுகில் உரைத்தல் போல்' என்று தேரையர் கரிசல் என்னும் நூலில் கூறி இருப்பதால், இவர் வேமனர் காலத்தவர் அல்லது அவருக்குச் சற்றே பிற்காலத்தவர் என்று யூகிகலாம். வேமனர் கி.பி. 1486-1505 க்கு இடைப்பட்டக் காலத்தவர். மேலும் இந்நூலில் "உருளைக்கிழங்கு கற்பம்" பற்றி கூறியிருப்பதாலும், உருளைக்கிழங்கு தென் இந்தியாவுக்கு வந்தது கி.பி. 16–ஆம் நூற்றாண்டு என்று அறிவதாலும் தேரையர் இக்காலத்திற்குப்பின் வாழ்ந்தவர் என்று கருதலாம்.

*தேரனைத் தேரான் மருத்துவத்திற் சேரான்*

என்று புகழ்ந்து பாராட்டப்படும் வகையில் இப்போது கிடைத்துள்ள தேரையரின் சில நூல்களே சான்று பகிர்கின்றன.

## தேரையர் வாகடம்

இந்நூலில் ஆங்காங்குப் பற்பல நோய்களின் சிற்சில குணங்கள் காணப் பெறுகின்றன. இதில் கண்ட நோயின் குறிகுணங்கள் பெரிதும் பயன்தரத் தக்கதாய் உள்ளமையைப் படிப்பவர்கள் தெளிவார்கள்.

## தேரையர் வைத்திய காவியம்

சில நோய்களுக்கான மருத்துவம், பற்பம், ஆசனம் முதலியவற்றைக் கூறியுள்ளார்.

## தேரையர் வெண்பா

வைத்தியம் கற்பதற்கும், மருந்துகளின் செய் முறைகளை அறிவதற்கும் மருத்துவ மாணவர் முதலாவதாகப் படித்தறிய வேண்டியது கருப்பொருள்களைப் பற்றித்தானாகும். அக்கருப்பொருள்களையே தேரையர் தாம் இயற்றிய இவ் வெண்பா நூலின் முதற்பகுதியில் 416 செய்யுட்களில் கூறி இருக்கிறார். இரண்டாம் பகுதியில் உள்ள 342 செய்யுட்களில் முதற்பகுதியில் கூறப்பெற்றக் கருப் பொருள்களின் செய்முறைகள் இடம் பெறுகின்றன.

இந்நூலில் தேரையர் 419ஆம் செய்யுளில் "முன் சொன்ன வெண்பா முறை நிகண்டும் அச்சொல்லின் ......." எனவரும் வெண்பாவில் "வெண்பா முறை நிகண்டு" என்று கூறுவதால் இந்நூலே அவர் கூறிய பிற மருத்துவ நூல்களுள் வைத்து நிகண்டு என்றும் பெயர் கூறுதற்கேதாகுமோ என்று எண்ணக் கிடக்கிறது. இக்கருத்தோடு நூலினை ஆய்ந்து நோக்குவோமெனின் மிகப்பலவான செய்யுட் களில் பரியாயப் பெயர்களுடன் இணைந்துள்ள இயற்பெயர்களை நன்குணரலாம். உதாரணம்: தோன்றியெனும் காந்தள் (46), காமமெனுந்திப்பிலி (47), சேர்ந்தாரைக் கொல்லியெனுந்தீ (48) என்பனவாகும். இன்னும் இந்நூலில் வந்துள்ளப் பரியாயப் பெர்களான பரிபாஷைச் சொற்களும் மிகப்பலவாம். அவற்றுள் சில வருமாறு: 'மாலெச்சில் (16)', 'மால்மனை' (40), 'தந்தி' (54), உறைக்கனி' (224), 'யாமினி' (359), 'தறிமுதற்கிரிகை (55), 'ஐம்முகனார் வெற்றி' (56), 'தராபதி (59), 'காமரூபி' (140), திரிபுனா (265), பாதுகைப்பதம் (328) என்பனவாகும்.

இந்நூலாசிரியர் அறநூல்கள், காப்பியங்கள், புராணங்கள், இதிகாசங்கள், மறைகள், ஆகமங்கள், கணித நூல்கள், இலக்கண நூல்கள், ஆகிய எல்லா நூல்களையும் நன்கு பயின்று தேர்ச்சி பெற்றுள்ளாரென்பது இவர் தம் நூல் களில் ஆங்காங்கே கூறும் ஆட்சிகளாலும், மேற்கோள்களாலும், சொல்நயம், பொருள்நயங்களாலும், அணி வகைகளாலும் எடுத்தாளும் கருத்துகளாலும் விளங்குவதாகும். யாப்பு வகையின் பொருள்கோள்களுள் ஆற்றுநீர், நிரல்நிரை, விற்பூட்டு, கொண்டுகூட்டு, தாப்பிசை முதலியவைகளும், யமகம், திரிபு முதலிய சொல்லணிகளும் ஏற்ற பெற்றியாயமைத் துள்ளமை இவ்வாசிரியரின் புலமைத் திறனை விளக்குகின்றன.

அன்றியும் நாடிகளின் குணம், அவற்றின் நடை, சாத்திய–அசாத்தியம், ஐம்பூதக் குணம், தாது, தாவர, சங்கமப் பொருள்களின் சிறப்புப் பண்புகள் ஆகியவைகளும் அங்கங்கே விளக்கப் பெறுகின்றன. நோயினால் அனுசரிக்க வேண்டிய பத்தியம், உபதை, அனுபானம், மருந்து கொள்ளும் நாள், மாதம், உறைவிடம் தங்கும் நிலம்

முதலியனவும் நோய்களின் சாத்தியம், அசாத்தியங்களும் இடையிடையே கூறப் பெற்றுள்ளன. இங்ஙனமே நோய் நீக்கும் மருத்துவர் இலக்கணங்களாக அவர்தம் நற்பண்பு, மதிநுட்பம், நோயறிதிறமை, மருந்தியற்றும் வன்மை, தன்னலம் கருதாமை, நோய் கண்டஞ்சாமை ஆகியனவும் அவர் கையாளும் கட்டு, களங்கு, இரச குளிகை, பூபதிமாத்திரை, தாளக மாத்திரைப் போன்ற பலவகை மாத்திரைகள், சந்தனாதி போன்ற தைல வகைள், மகாவில்வாதி போன்ற இலேகிய வகைகள், காந்தம், அயம், வங்கம், தங்கம், வெள்ளி முதலிய உலோக பற்ப செந்தூரங்களின் செய்முறைகள், எண்ணெய் வகைகள், குடிநீர்கள், கிருதம், வற்றல், வேது, புட்டு, கண்மை, கற்பம், சூரணம், பற்று, வசியம் முதலியன பயன்களுடன் கூறப் பெற்றள்ளதோடு நஞ்சுகளுக்கு ஏற்ற முறிவுகள், கால்நடை உயிர்களின் நோய்க்குச் சிகிச்சை எனப் பலவகை மருத்துவ நுட்பங்களும் இடம் பெறுகின்றமையின் இந்நூல் சித்த மருத்துவர்கட்கும், மருத்துவத் துறையில் மேற்படிப்புப் படிப்பவர்க்கும் முதன்மையாகக் கையாளத் தகும் நிறவுகோல் போல்வதாம்.

இந்நூலில் ஒவ்வொரு செய்யுளும் அடி மோனையைக் கொண்டதாகும், மோனை பொருந்தி வருவதற்கென்றே இந்நூலைப் பாடினார் என எண்ணவும் படுகின்றது. அதனால் சில இடங்களில் பொருள் கொள்வது மிகக் கடினமாக இருக்கிறது. எடுத்துக்காட்டாக "பாஷான மாத்திரை" செய்முறைப் பற்றிக் கூறும் செய்யுளின் ஒன்பதாவது அடியில்'' பாசரையிலும் அவ்வாறே'' என்றிருப்பதை ''பசரையிலும் (பசரை–பசரைக்கீரை) அவ்வாறே என்று கொள்ள வேண்டும். இல்லையேல் சரக்குத் தெரியாமல் திண்டாட வேண்டியதுதான். மோனையை நோக்கிப் பசரை என்ற சொல் பாசரை என்று நீண்டதென்று கொள்ளவேண்டும். இவர் பெயரில் வழங்கி வரும் நூற்கள் வருமாறு :

1. தேரையர் வாகடம்
2. தேரையர் வைத்தியம் 500
3. தேரையர் வைத்தியம் 1001
4. தேரையர் திரட்டு வாகடம்
5. தேரையர் அந்தாதி யமகம்
6. தேரையர் சிகிச்சை கிரமம்
7. தேரையர் எண்ணலளவை
8. தேரையர் எதுகைப்பா
9. தேரையர் காப்பியம்
10. தேரையர் கரிசால்

11. தேரையர் மகாகுணபாடம்
12. தேரையர் மருத்துவ பாரதம்
13. தேரையர் மேகவண்ணம்
14. தேரையர் நான்மாலை
15. தேரையர் நாடகம்
16. தேரையர் நெய்குறி
17. தேரையர் நீர்க்குறி
18. தேரையர் நிகண்டு
19. தேரையர் நோய் மருத்துவ அளவை
20. தேரையர் பிரதான குணமூலி தரு
21. தேரையர் சேகரப்பா
22. தேரையர் சிகாமணி வெண்பா
23. தேரையர் தரு
24. தேரையர் தினக்கிரமலங்காரம்
25. தேரையர் தைல வர்க்க சுருக்கம்
26. தேரையர் வைத்திய பள்ளு நாடகம்
27. தேரையர் யமக வெண்பா
28. தேரையர் வைத்திய காவியம் 1001
29. தேரையர் வெண்பா.

# 22

# யூகி முனிவர்

மரு. மொ. லோகமணியன்

## முன்னுரை

இவர் எழுதிய மருத்துவ நூல்களைப் பற்றியும், நோய் கணிப்புக்கு இவர் ஆற்றிய அரும்பணியும் சொல்லிமாளாது. அவற்றைக் காண்போம்.

## யூகி முனிவர் வைத்திய சிந்தாமணி (பெருநூல் 800)

நீலகண்ட மாமுனிவர், சமதக்கினிமுனி குமாரரான திரணாக்கிய முனிவருக்கு உபதேசித்ததாகிய **யூகிமுனி சிகிச்சாசாரம்** என்னும் இந்நூலை உலகிலுள்ள மருத்துவர்க்கு உதவுமாறு கூறியுள்ளார். இந்நூல் கருத்துகள் பின்வருமாறு:

## பாயிரம்

பூவின் மணம் போலவும் மணிகளின் ஒளி போலவும், பாடலின் பொருள் போலவும், பாலின் சுவையைப் போலவும் உள்ள பராசக்தியையும் சித்தர்களையும் வணங்கி உலகோரை நோயினின்று காக்க வேண்டி மருத்துவத்தின் சுருக்கத்தைக் கூற வேண்டும் என்பது என் ஆசையாகும் எனக் கூறியுள்ளார்.

## அவையடக்கம்

அறிவிலியாகிய யான் ஆசை மிகக் கொண்டு இந்நூலைக் கூற வந்தது குருடன் இரத்தினப் பரீட்சை செய்ய முற்பட்டதை ஒத்த செயலாகவும் கூறுகிறார்.

## ஆக்கியோன் பெயர்

இந்நூலை ஆக்கியவர் யூகிமுனி என்றும், நூலின் பெயர் **சிகிச்சாசாரம்** என்றும் நவின்றுள்ளார்.

## மருத்துவரை அழைக்கும் திக்கு

களிப்புடன் இருக்கும் மருத்துவரை அழைக்க வரும் தூதுவன் கிழக்கில் நின்று, கிழக்கு நோக்கி இருந்து அழைத்தல் நன்று என்றும், அன்றி தென்கிழக்கு, தெற்கு, தென்மேற்கு ஆகிய திசைகளில் நின்று மருத்துவரை அழைத்தால் நோயாளி இறக்கும் குறிப்பை உணர்த்தும் என்றும் யூகி கூறியுள்ளார்.

தூதுவன் மேற்குத் திக்கில் நின்று அழைத்தால் நன்று என்றும், வட மேற்கு மத்திமம், வடக்கும், வடகிழக்கும் நற்குணம் தரும் என்றும் தம் நூலில் யூகி முனி தெளிவுபடுத்தியுள்ளார்.

## மருந்து கொடுக்கத் தகாதவர்கள்

பிறன்மனை நயந்தவன், வெறி பிடித்தவன், கட்குடியன், பாவச் செயல்களில் ஈடுபட்டவன், செய்ந்நன்றி மறந்தவன், மான உணர்ச்சி கெட்டவன், பிறர் வாழ்வை கெடுப்பவன், கொடியவன், உலோபி ஆகிய இவர்களை, மருந்துகளைக் கையால் தொடக் கூட அனுமதிக்கக்கூடாது என்று யூகிமுனி தம் நூலில் கூறியுள்ளார்.

## மருந்து பாகமறியாத பண்டிதருக்கு அறிவுறுத்தல்

மருத்துவ அறிவியல் நூல்களைக் கற்க வேண்டும்; நாடிகளைப் பார்க்கும் நுணுக்கம் அறிய வேண்டும்; நோய்களின் தீரும், தீராத தன்மைகளை அறிய வேண்டும்; எண்விதத் தேர்வைக் கொண்டு நோய் அறிதல் வேண்டும்; நோய்களின் குறிகுணங்களை ஆராய வேண்டும்; மருத்துவ நுணுக்கத்தை அறிந்து நோய் தீர்த்தல் வேண்டும்; இவைகளை அறிந்தவர்கள் பிணி தீர்ப்பவர்கள் ஆவார் என்று யூகிமுனி எடுத்தியம்பியுள்ளார்.

## வைத்தியர் பிண்ட நிலையறிதல்

மருந்துகளைத் தூய்மை செய்யும் விதமும், தசவாயு, அறுசுவை, பிண்ட நிலை, தொந்தம் முதலியவைகளையும் மருத்துவன் அறிந்து கொள்ள வேண்டும் என்றும் கூறியுள்ளார்.

## மருத்துவ இலக்கண விதி அறியா மருத்துவர்

மருத்துவத்தின் கூட்டும், மருந்து சரக்குகளின் கூட்டு நெறியும், அறியாதவர்கள், மிகவும் தெரிந்தவர் போலப் பிதற்றுபவர்கள், நாடி அறியாத மூடர்கள் கையை தொட்டுப் பிடித்து வீண் பேச்சு பேசுபவர்கள், பிணிகளின் தீருந் தீராத் தன்மையை அறிந்தவர்களைப் போலப் பைத்தியக்காரப் பேச்சுப் பேசித் தவறு செய்பவர்கள் ஆகியோர் நோய்களை முறையாகத் தீர்க்கமாட்டார்கள் என்றும், அத்தகைய மருத்துவர்களுக்கு மிகத் துன்பம் ஏற்பட்டு நரகம் சம்பவிக்கும் என்றும் கூறியுள்ளார்.

சாத்திய, அசாத்தியத்தை அறிந்து மேலான மருந்துகளைக் கொடுத்தல் வேண்டும், வேறுபட்டத் தேர்வுகள் செய்து மருந்து கொடுத்து நோய்களைத் தீர்க்காவிட்டால் உலகோர் பழிகளை ஏற்றுப் பாவமிகுதியால் நரகில் வீழ்வது நிச்சயமாகும் என்றும் யூகி தம் நூலில் கூறியுள்ளார்.

மருந்துகளின் தூய்மை செய்முறைகளை அறிந்து கொண்டும், நோயாளியின் உடற் கூறுகளைக் கண்டறிந்தும், கைநாடியை நன்கு பார்த்தும், தெளிவடைந்த பெரியோர்களின் அறிவுரையைக் கேட்டு அதன்படி நோய்களைத் தீர்க்காதவர்களின் 21 தலைமுறையினரும் நரகம் புகுவர் என்றும் கூறியுள்ளார்.

## நோயைப் போக்கடித்தல்

தோன்றிய பிணியின் அளவையும், குறிகுணங்களையும் ஆராய்ந்து,விரைந்து பிணிதீர வேண்டி மந்திரம், மருந்து, தெய்வபலம் முதலியவைகளின் மூலம் நோயைக் குணமாக்க வேண்டும். மேலும் 1. நாடி பார்த்தும், 2. அகப்புறக் கருவிகளின் செயல்திறம் அறிந்தும், 3. துணைக்கருவிகளின் துணையுடனும், 4. காலத்தின் கூறுகளுக்கேற்பவும், 5. மருந்துகளின் பதம், நச்சுத்தன்மை நீக்குதல் அறிந்து மருத்துவம் செய்தும் நோயைப் போக்க வேண்டும் என வழிகாட்டியுள்ளார்.

## மருத்துவன் குருவணக்கம் செய்தல்

- குருவை நினைத்து, கடவுளை வணங்கி, நாடிபேதம் அறிந்து பிணி தீர்க்க மருந்து கொடுக்க வேண்டும்.

## மருத்துவர்க்கு ஆடை அணிகள்

பட்டு, மரவுறி, செந்நிறம், கருநிறம், பல நிறப்புள்ளிகள் உள்ள துணிகளை அணியலாகாது. வெண்ணிற ஆடை சிறந்தது.

## மருத்துவருக்கு உரிய பரிமள நல்லொழுக்க நடைகள்

குளித்தல் மூன்று வேளைக் கிரமம், ஆசிரியர், கடவுளை வணங்குதல், உடலின் மேல் நறுமணப்பூச்சுகளுடனும் மருத்துவம் செய்யலாம்.

## மருத்துவருக்கு அறிவுறுத்தல்

வாய், கை சாமார்த்தியத்தாலும், முட்டாள் தனத்தின் முதிர்ச்சியாலும் மருந்து தந்தால் அவன் குலம் அழியும்.

வாதியின் மகன் மருத்துவம் செய்வானாகில் பக்குவமாக நோய்களை அகற்றுவான். வைத்தியரின் மனமுவக்க மிக்க பக்தியுடன் நோயாளி நடந்து கொண்டால் அவனுடைய பிணி தீருவதோடு கிழத்தனமும் அகலும் எனக் கூறியுள்ளார்.

மருந்துக்குப் பத்தியம் மிகவும் அவசியம். நோயாளியின் மனம் நோகச் செய்தவனுடைய குடியும், குலமும் அழிந்துவிடும்.

## மருத்துவருக்குரிய நற்பண்பு

- இனிய சொற்களை உடையவனாகவும்,
- மூத்தோர்களைத் தந்தை போலவும்,
- மற்ற பெண்களைத் தங்கை, தாய்போல் எண்ணியும்,
- நோயை நன்கு ஆராயும் வல்லமையும்,
- ஈகை கண்ணோட்டத்துடன் இருத்தலும்,
- பொய் பேசாமையும்,
- உண்மையும், நிலையான பழக்கமுடைமையும்,

மருத்துவர்க்குரிய நற்பண்புகளாம்.

## வாய்மை, அருட்தன்மை

இருபாலாருக்கும் தாய், தந்தை போல இருந்து நேர்மையாக வைத்தியம் செய்தால் நோய்கள் விலகும்.

## மருந்து பலிக்காத பேர்கள்

பாவச் செயல், வலிந்து பணம் பறிப்பு, உலக இயல்புக்கு ஒவ்வாத சொற்கள் கூறல், பிற மாதர்கள் மேல் காதல் கொள்பவன், சினம், ஒழுக்கமில்லான், கருமி, பொய்யன், ஒளித்து வைப்பவன், இவர்களுக்கு மருத்துவம் பலிக்காது.

## பிணிதீராத பேர்கள்

பாவச் செயல் செய்வோர், பலர் பலிப்புக்கு இலக்கானவர்கள், சண்டை போடுபவர்கள், நாணயத்திற்குப் புறம்பானவர்கள், தவறாமல் மருந்து சாப்பிட்டுக் குறை கூறுபவர்கள், வஞ்சகர், கள் குடிப்பவர், தகாத காதல் உள்ளவர், பிறருக்கு நஞ்சு கொடுப்பவர்.

## வைத்தியம் செய்ய வேண்டிய உத்தமர்

தீரா நோயினர், தர்மசிந்தனை உடையவர், நற்செயல் உடையவர், உண்மை உரைப்பவர் கபடமில்லாதவர், தாளாத் தன்மையுள்ளவர், அந்தணர், ஆசான், கவிகள், நீதிமான்கள், தவத்தினர், சிவயோகிகள், கட்டுப்பாடும், ஒழுக்கமுடையவர்கள்.

## மருந்து செய்யவும், உண்ணவும் நாளறிதல்

வெள்ளி, சனி, திங்கள், புதன் தீது. செவ்வாய், வியாழன், ஞாயிறு பிணி தீரும்.

## உணவு உண்ணும் விதி

அறுசுவை உணவு உண்பது இன்பம் தரும். புளியைக் குறைத்து, உப்பைப் பிரித்து, கார்ப்பு மிகாமல் இயற்கையான துவர்ப்போடு மிளகு கூட்டி, இனிப்புச் சுவை சேர்த்து உண்ணவும். 8 வாய்த் தண்ணீர், வெந்நீர் உண்பது அமுதம்.

## காலில் நீர் விடுவதற்கு விதி

நெடுந்தொலைவு நடந்து, உலாவி, களைப்பாறிய பின் கால்களைக் கழுவ உடல் உரமும், அக மகிழவும் பெறும்.

## தாம்பூல விதி

முதலில் சுரக்கும் விடநீரை துப்பிவிடவேண்டும்.

2ஆவது பித்ததோடம்.

3ஆவது அமுதம்.

## புணர்ச்சி, நித்திரை விதி

பகலில் உறக்கம், பெண்மோகம் நோயாளி ஆவார்கள். மிகுந்த வெய்யிலில் திரிதல், பசப்பால் இளைத்தல், கலவியை விரும்புதல் குடியைக் கெடுக்கும், உண்டபின் உலவல் நலம்.

## நல்ல நிமித்தங்கள்

இசைக்கருவிகள், வெற்றிலை, சந்தனம், மங்களப் பாட்டு, இராசாளி, மன்னன், வெண்தாமரைப்பூ, குரங்கு, பானை, கண்ணாடி, பைத்தியம், சுமங்கலி, தாயார், வளையல்காரன், பால், தயிர், பாலாடை, அன்னம், பல்லக்கு.

## வடநாட்டு வைத்தியர்கள்

தன்வந்திரி, அஸ்வினி, இந்திரன், சுகர், பராசரர், அகஸ்த்தியர், புலத்தியர், சனிகர், சௌமியர், பௌமர், அக்கினிவேசர், கௌதமர், காசிபர், மரிசி ஆர்த்திரையர், காசியபர், சிசுருதர், மனு, சாயம்பு, அத்திரியர், கண்ணுவர், விசுவாமித்திரர், வசிட்டர், வியாசர், தட்சர் போன்றவர்கள் யூகிமுனிவரால் குறிப்பிடப்பட்டுள்ளனர்.

## தமிழ்நாட்டு வைத்தியர்கள்

அகத்தியர், திருமூலர், போகர், தேரையர், சட்டைமுனி, மச்சமுனி, கொங்கணர், இடைக்காடர், கோரக்கர், சுந்தரநாதர், பாம்பாட்டிச் சித்தர், இராமதேவர் போன்றோர்.

## வடமொழி நூல்கள்

உமாகலம், அசுவனியம், சூடாமணி, வைத்திய ரசாயன முத்தார வலி, காசிபவசுவதாரிட்டம், சுர சிந்தாமணி, ஆரோக்கிய சிந்தாமணி, குமார தந்திரம், மதன காம ரத்தினம் இவை போன்ற மற்றும் பல நூல்கள்.

## தென்மொழி நூல்கள்

அகத்தியர் பெருந்திரட்டு, மூன்று காண்டம், வைத்திய சிந்தாமணி, சிவசாலகாவியம், மணி நாலாயிரம், வைத்தியர் கண்ணாடி, பற்பமுறை 200 தண்டகம், பட்சினி, திருமந்திரம், நாடிநூல், மகாகுணபாடம், வண்ணம், மருத்துவ பாரதம், நீர் நிறக்குறி, நெய்க்குறி பெருந்திரட்டு, போகர் ஏழாயிரம், உபரச நிகண்டு,

தைலவருக்கச் சுருக்கம், சரக்கு வைப்பு இராமதேவர் பெருநூல்இ மச்சமுனி 800 போன்ற மற்றும் பல இந்நூலில் குறிப்பிடப்பட்டுள்ளன.

## நூல் பிறந்த விவரம்

தன்வந்திரி சொன்ன முறைகளாகிய ஆயுளைப் பற்றி 4 வேதங்களுடன் 5ஆவது வேதமாக மருத்துவக் கலை நுணுக்கங்களை வெளிப்படையாகக் கூறுவேன். சதாசிவனார் தன் தேவிக்கும், தேவி நந்தி தேவருக்கும் நந்தி தன்வந்திரிக்கும் அகத்தியர் புலத்தியர், தேரையர், யூகிக்கும் உண்மைகள் உபதேசிக்கப்பட்டன, போன்றவை யூகி வைத்திய சிந்தாமணிப் பெருநூல் 800இல் கூறப்பட்டுள்ளன.

இவர் பெயரில் காணப்படும் நூல்கள் வருமாறு :

1. யூகிமுனிவர் பிடிவாதம் 1000
2. யூகிமுனிவர் வாதகாவியம் முதற்காண்டம் 1000
3. யூகிமுனிவர் வாதகாவியம் இரண்டாம் காண்டம் 1000
4. யூகிமுனிவர் வாத வைத்திய உலா 1000
5. யூகிமுனிவர் வாத வைத்தியக் கும்மி 1000
6. யூகிமுனிவர் பரிபூரணம் 200
7. யூகிமுனிவர் வாதாங்க தீட்சை 300
8. யூகிமுனிவர் வாதவைத்திய விளக்கம் 200
9. யூகிமுனிவர் மதிவெண்பா 100
10. யூகிமுனிவர் கரிசாலை 36
11. யூகிமுனிவர் வைத்திய சிந்தாமணி 800
12. யூகிமுனிவர் சாரசங்கிரகம்
13. யூகிமுனிவர் ஆனந்தக் களிப்பு 1000
14. யூகிமுனிவர் மூதுரை
15. யூகிமுனிவர் சிங்கிவைப்பு 100
16. யூகிமுனிவர் வகுப்பு 32
17. யூகிமுனிவர் பூரணம்

18. யூகிமுனிவர் வாதசிந்தாமணி

19. யூகிமுனிவர் வாத காண்டம் மூன்று

20. யூகிமுனிவர் வாத காண்டம் ஐந்து

21. யூகிமுனிவர் வாத காண்டம் ஆறு

22. யூகிமுனிவர் வாதம்.

# 23

## சிவவாக்கியர்

மரு. கு. கணபதி

இவர் பாடல்களுக்கு "சிவவாக்கியம்" என்று பெயர். இவர் பாடல்கள் யாவும் மெய்ஞ்ஞான போதமாகிய உயர்ந்த வேதாந்த சிந்தனைக் கருத்துகளாகும். அதற்கு எடுத்துக்காட்டாகக் கீழ்வரும் பாடல் ஒன்றைக் காண்போம்.

*நட்ட கல்லைத் தெய்வமென்று நாலுபுட்பம் சாத்தியே*
*சுற்றி வந்து முணமுணென்று சொல்லு மந்திரம் ஏதடா ?*
*நட்ட கல்லும் பேசுமோ ? நாதனுள் ளிருக்கையில்*
*சுட்ட சட்டி சட்டுவம் கறிச்சுவை யறியுமோ.*

தத்துவம் அறியாதவர் மேற்படிப் பாடலைக் கொண்டு சிவவாக்கியர் உருவ வழிபாட்டை வெறுத்து ஒதுக்கியவரென்றும், கடவுளென்னும் நம்பிக்கை இல்லாதவ ரென்றும் கூறுவர்.

உண்மையில் இப்பாடலில் ஆண்டவன் என்ற கடவுள் ஆன்ம வடிவாக மனிதன் உள்ளேயே வீற்றிருக்கும்போது கற்சிலையை மந்திரம் ஓதி, பூ முதலியன சார்த்தி வழிபடுவது ஏன் ? அது தன்னைத்தான் அறியாவதவன் செயல் அல்லவா ? கறி சுட்ட சட்டியும், சட்டுவமும் கறிச் சுவை அறியாதது போல் மனிதனும் தன்னுள்ளே இருக்கும் ஆண்டவனையறியாது திகைத்து, வேண்டாத வேலை எல்லாம் செய்து காலத்தை வீணாக்குகிறானே. அதனால் மனிதன் அடையும் பயன் யாது ? என்று வினவித் தெளிவுறுத்துகிறார்.

சிவவாக்கியர் பிறக்கும் போதே "சிவ சிவ" என்று சொல்லிக் கொண்டே பிறந்தார். ஆதலின் இப்பெயர் பெற்றார் என்பர். சித்தர் ஞானக் கோவையில் சிவவாக்கியர் பாடியனவாக 520 பாடல்கள்இ சிவவாக்கியர் பாடல்கள் என்ற தலைப்பில் காணப்படுகின்றன. இப்பாடல்களைத் தவிர சிவவாக்கியர் நாடி பரீட்சை, சிவவாக்கியர் நாடிசூத்திரம் என்பன இவர் பெயரில் வழங்கி வருகின்றன.

இவர் தம் பாடல் தொகுப்புக்குச் "சிவவாக்கியம்" என்ற பெயர் சூட்டியிருத்தல் வேண்டும் என்று எண்ணத் தோன்றுகிறது. சிவவாக்கியம் ஆயிரம் என்ற தலைப்பில் 1000 பாடல்களுடன் சில பதிப்புகளும் வந்துள்ளன. இவரது பாடல்களை ஊன்றிப் படித்தால்தான் விளங்கும். பல பாடல்கள் அந்தாதி அமைப்பில் காணப்படுகின்றன.

கருத்து, நடை, சொல்லாட்சி இவற்றில் முற்றிலும் முரண்பட்டப் பாடல்கள் மிகவும் காணப்படுகின்றன. இவர் சிவவாக்கியம் பாடியுள்ளதால் சிவவாக்கியர் என்னும் பெயர் பெற்றிருத்தல் கூடும் எனக் கருத வேண்டியுள்ளது.

மேலும் இவர் தம் பாடல்களில் சுமார் 50 இடங்களில் 'சிவாயம்' என்ற சொல்லைப் பயன்படுத்தியுள்ளார்.

இவர் வாழ்க்கை பற்றிய அக, புறச் சான்றுகள் எதுவும் கிடைத்தில. செவி வழியாகவும், புராணங்கள் வழியாகவும் சில கதைகளைக் காண முடிகின்றது.

புலவர் புராணம் என்னும் நூல் கூறும் சிவவாக்கியர் வரலாறு பின்வருமாறு:

நற் பிராமணர் குலத்தில் நான்முகன் பிறந்தாலெனப் பிறந்த ஒருவர் காசியாத்திரை விருப்புற்றுச் செல்லும்போது கடைக்குலத்துப் பிறந்த ஞானி ஒருவரைச் சந்தித்தார். அந்த ஞானியோ ஏசினார்க்கும், ஏத்தினார்க்கும் இன்சொல் ஓதும் தன்மை உடையவர். அவர் நான்முகக் குலத்துதித்தாருக்கு உபதேசம் செய்து, பெண்ணோடு சேர்ந்தின்பம் நுகரும் வாழ்வு வேண்டுமா ? அன்றி வீடு தோறும் சென்று இரந்து உண்டு வாழும் துறவு வாழ்வு வேண்டுமா என்று வினா எழுப்பினார். அவ்வந்தணரும் பெண்பால் இன்பம் நுகருவது சிறுமதி என்னும் எண்ணம் பெற்றேன் இல்லை எனலும், இரு நாழி மணலும், படுசுரைக்காயும் கொடுத்து இவற்றைச் சுவையான உணவாகச் சுட்டுத் தருவாளை மணந்து இன்பம் நுகர்க என்று சொல்லி விடை பெற்றகன்றார். அந்த ஞானியின் வாக்கினால் இறையொன்றே என்னும் உண்மையை உணர்ந்தார் அந்தணர்.

தம் ஞானாசிரியர் அளித்த மணலையும் சுரைக்காயையும் கையில் ஏந்திக் கொண்டு கன்னியர் பலரிடமும் காட்டிச் சோறு அடுமாறு கேட்ட வண்ணம் சுற்றினார் அந்தணர். எள்ளி நகையாடினர் சிலர். யாராலும் இயலவில்லை.

பின்னர் குறவர் இனத்தைச் சேர்ந்த சேரியுள் சென்றார். அங்குப் பால் வழிந்தனைய மொழிப் பெண்ணைக் கண்டார். அவளை நோக்கி உன் அன்னையும் அத்தனும் எங்குச் சென்றனர் என்றார். அவள் 'அவர் எங்ககன்றனரோ அறியேன்' என்றாள். அவர் இம்மணலையும் சுரைக்காயையும் அட்டுப் படைத்து பொங்கிப் பசி தீர்த்தால் புண்ணியமுண்டு என்றார். அவள் மற்ற பெண்டிரைப் போல் நகைக்க வில்லை. அதை வைத்து சமைத்துப் படைத்தாள். அவரும் அதை உவகையோடு உண்டு அங்கிருந்தார்.

அப்போது அவளைப் பெற்றவர்கள் வந்தனர். அவர்களைக் கண்டதும், நாம் இவளைப் புணர்ந்து போகம் துய்க்கவிடுவாரோ அன்றி மரபிற்கு ஒவ்வாது என விடுவாரோ என்று எண்ணியிருந்த போது பெற்றவர்கள் துறவியின் கால்களில் வீழ்ந்து பணிந்து நின்றனர்.

பின்னர் எனது தவம் உமது தயவினால் பெரிதும் ஈடேற வேண்டும் என்று இரந்தார். அவர்களும் யாதெனக் கேட்க, உ ம் மகளைக் கேட்டேன் என, அவர்களும் சற்றும் சிந்தியாது அளித்தோம் என்றனர். மணம் புரிந்த பின்னர் எமது சேரிக் குடியிலேயே இருத்தல் வேண்டும் என்றனர். சிவவாக்கியரும் அதற்கிசைந்தார். மணம் நடைபெற்றது. அவர்களும் தனது தொழிற் கருவி முதலியன தந்து ஊக்கினர். மெய்ம்மை உணர்த்தும் ஓர் இச்சை மேவியதால் இவ்வினை தாங்கினார்.

அக்குறப் பெண்ணின் உண்மைத் தன்மையறியாமல் பொய்ச்சுகம் விழைந்து அந்தணர், குறவர் புலக்குடில் புகுந்தனை எனப் பலர் பழித்தனர். இவ்வாறு வாழ்ந்து வரும் நாளில் சிவவாக்கியரும் குறவர் தொழில் கற்றுத் தொழில் செய்து வந்தார். ஒரு நாள் கானகத்தில் ஒரு பெருமூங்கிலைத் தறித்த போது பத்தரை மாற்றுப் பொன் உதிர்ந்தது. அளவில் மிகுதியான அப்பொன்களைக் கண்டு ஓடியகன்றார். அதனைக் கண்ட நால்வர் அஞ்சி விரைந்தோடி வந்து காரணம் வினவியபோது மூங்கிலில் ஆட்கொல்லி தோன்றியதெனக் கூறவும், அவர்கள் விரைந்து அவ்விடம் சென்று பார்க்க, அவர் அவ்விதம் குறித்தது பொன்னையே என அறிந்து அவரை எள்ளி நகையாடி அப்புறம் அனுப்பினர்.

ஒரு முறை கொங்கணர் சிவவாக்கியர் வீட்டுக்கு வந்து அவருடைய மனைவியிடம் கருவி செய்து கழிந்த இரும்பையெல்லாம் கொண்டு வருமாறு

சொன்னார். அவளும் அவ்வாறே செய்தாள். அவர் அவற்றையெல்லாம் செம்பொன்னாய்ச் செய்தார். அவளும் தன் நாயகன் வந்ததும் அவற்றைக் காட்டி வகைபடச் சொன்னாள். உடனே அவரும் ஊர்ப் புறத்துள்ள பாழுங்கிணற்றில் போடுமாறு சொன்னார். அவளும் எவ்வித மனவிகர்ப்பமும் இல்லாமல் போட்டு வந்தாள். இவ்வாறு சிவவாக்கியர் அக்குற மகளுடன் ஏழு பருவம் மட்டும் இன்பம் துய்த்து அதன் பின் தனித்துச் சஞ்சரிக்கத் தொடங்கினார்.

சிவனை ஒரு கால் பாடுவார். நெடுமாலை ஒரு கால் பாடுவார். தண்ணீரும் தீயும் அவன் சொரூபம் என்னும் ஞானத்தோடு தொண்டு செய்தார்.

கச்சியில் கணிவண்ணன் எனும் பெயருடைய மன்னன் செங்கோலோச்சி வந்தனன். அவனைக் காணச் சிவவாக்கியர் சென்றார். இவர் சென்ற நேரத்தில் அவன் ஒரு நாட்டிய நங்கையின் கலை அழகில் மூழ்கியிருந்தான். ஆதலால் அவர் வெகுண்டு அவ்வூர்க் கோயிலில் குடி கொண்ட கோவிந்தனைக் கண்டு மனைவியும் மாசுணப் பாயும் சுருட்டி வா என்றார். அவர் பின்னர்த் திருமாலும், மனைவியும் பின் தொடர்ந்தனர். இறைவனை இழந்த ஆலயத்தை வேதியர் கண்டனர். வேந்தனிடம் சென்று முறையிட்டனர். மாயவன் மீண்டும் கோயில் கொள்ளுமாறு செய்தல் வேண்டும் என இறைஞ்சினர். அரசனும் தன் பிழை உணர்ந்தான். சிவவாக்கியரைத் தேடி விரைந்தான். வேதியர் முதலியோரும் பின் தொடர்ந்து சிவவாக்கியரிடம் பிழை பொறுக்க வேண்டினன். திருமாலைக் கோயில் கொள்ளுமாறு செய்தல் வேண்டுமெனப் பணிந்து வேண்டினர். இன்றேல் அத்துணை பேரும் இறப்போம் என்று அழுதனர். மன்னனும் அவ்வாறே பலவிதம் அழுதும் தொழுதும் கூறினான். சிவவாக்கியரும் அவர்கள் வேண்டியவாறே பிழைபொறுத்துத் திருமாலைக் கோயில் கொள்ளுமாறு செய்தார். கவிஞன் சிறுபாடல் கேட்டு யாவருக்கும் முன் மாயன் போனான். அவன் பின் அருந்தவன் போனான். அவன் பின் அரசன் சென்றான். அருந்தவன் அரசனின் விருந்தாளியாகத் தங்கி அவனை உய்வித்து அருளுபதேசம் செய்து அங்கு அகன்று பல பகுதிகளுக்குச் சென்றார்.

சைவர்களால் சிவவாக்கியர் என்றும், வைணவர்களால் திருமழிசை ஆழ்வார் என்றும், கல்விமான்களால் செந்நாப்புவர் என்றும் வழங்கப் பெறுவர். இதுவரைக் கண்ட இக்குறிப்புகள் அனைத்தும் 1840–1899 காலவரையறைக்குள் திருநெல்வேலி வேளாண்குடியில் தோன்றிய முருகதாச சுவாமிகளால் பாடப் பெற்றப் புலவர் புராணம் என்னும் நூலில் காணப்படுபவை.

இக்குறிப்பின் மூலம் திருமழிசை ஆழ்வார் என்ற பெயரோடு சமயவாழ்வைத் தொடங்கி சிவவாக்கியர் என்ற பெயரில் தமது ஆன்மீக வாழ்வை அமைத்துக்

கொண்ட ஞானி இவர் என்பது புலனாகிறது. அகஸ்தியர் பெருமான் தமது 12000 என்ற பெருநூல் காவியத்தில் சிவவாக்கியரைப் பற்றிக் கூறியுள்ளார். சிவவாக்கியரின் பெற்றோர்கள் சித்தர்களை அடுத்து வாழ்ந்ததாலும், தெய்வச் சிலைகள் செய்து பிழைப்பு நடத்தியதாலும் பெற்றோர்கள் தக்க குருவைத் தேடி கண்டுபிடித்து முறையாகக் கல்வி கற்பிக்கும்படி வேண்டிக் கொண்டார்கள். அதன் பயனாக

*பையவே ஞானப்பா லமிர்தமேறி*
*பாலனுக்கு சின்மயத்தின் மயக்கம் கொண்டு*
*வெய்யபுகழ் பதினெண்பேர் சார்பிற்சென்று*
*வேதாந்த சிவவாக்கிய ரானார் காணே.*

இந்தப் பாடலில் சிவவாக்கியர் பதினெண் சித்தர்கள் மரபில் சென்று வேதாந்த சிவவாக்கியராக ஆனார் என்று கூறப்பட்டுள்ளது.

சீவனே சிவன் என்னும் சித்தர் நெறியை உறுதிப்படுத்தும் வண்ணம் சிவவாக்கியர் பாடல்கள் உள.

பிற நூல்களின் கருத்துப்படி **சிவவாக்கியம்** கூறிய சிவவாக்கியரின் சரித்திரச் சுருக்கம் யாதெனில் துவாபரயுகத்திலே திருமழிசையிலே அத்திரி, பிருகு, வசிஷ்டர் முதலான முனிவர்களுடன் நித்திய வாசம் பண்ணிக் கொண்டிருந்த பார்கவா முனிவருக்குச் சர்வேஸ்வரனுடைய கிருபையால் அவருடைய பத்தினியாரிடமாகப் பன்னிரண்டு மாதம் கர்ப்பத்திலங்கிய மகவு பிறந்தது. அஃது ஒரு பிண்டம் போல் ரூபங்கள் தோன்றாமலிருந்தபடியினாலே பார்கவரும் அவரது பத்தினியாரும் வெறுப்புற்றவர்களாக அங்கிருந்த பிரம்புப் புதரின் கீழே போட்டுவிட்டுப் போனார்கள். மூட்டை போலிருந்த அந்தப் பிண்டத்தை இரட்சிப்பார் ஒருவருமின்றி இலட்சுமி தேவியார் அனுக்கிரகத்தாலே சர்வாங்கமும் பெற்ற குழந்தை, பசி தாகங்களுக்கு உட்பட்டு முலைப்பால் வேண்டி அங்ஙனே அழுது கொண்டிருக்க, அங்கு ஜகத்ரட்சகனான பரந்தாமன் எழுந்தருளிப் பசி, தாகம் தீர்த்துத் தன்னையும் காட்டி மறைந்தார். அக்குழந்தையாகிய ஆழ்வார் அவரை விட்டுப் பிரிந்தது சகிக்க மாட்டாமல் மறுபடியும் அழத் தொடங்கினார். அங்கே பிரம்பறுக்க வந்த திருவாளன் என்பான் அவ்வழுகைக் குரலைக் கேட்டு ஓடோடியும் வந்து குழந்தையைக் கண்டு தாவி எடுத்துச் சென்று மிகுந்த ஆசையோடு அக்குழந்தையை வளர்க்க இச்சை கொண்டான். பிள்ளையாகிய ஆழ்வாரோ பால் முதலியன அருந்துதலின்றி சதா சர்வேஸ்வரனையே தியானித்தவராய்ப் பேசுவதும் அழுவதும் மலமூத்திராதி களுமில்லாமல் எல்லா அவயங்களும் பரிபூரணமாய் எழுந்தருளியிருந்தார். இவ்வாச்சரியத்தைத் திருமழிசையில் புத்திரனில்லாதிருக்கும் ஒரு கிழவன் கேட்டு, தினமும் தவறாது பாலமுதங்காய்ச்சி எடுத்துக் கொண்டு தன் பத்தினியுடன் வந்து

ஆழ்வாருக்களித்து அமுது செய்யச் சொல்லி மகிழ்ச்சி அடைந்து வந்தார். ஒரு நாள் அக்கிழவனுடைய மனோபாவத்தை ஆழ்வார் அறிந்து அன்று அவர்கள் கொண்டு வந்தப் பாலமுதை அமுது செய்து மிஞ்சுகின்றப் பாலை இதை நீங்கள் அருந்துங்கள், உங்களுக்கு நல்ல புத்திரன் உண்டாவான் என்று கொடுத்தருள, அவர்களும் அப்படியே அருந்த, யௌவனத்தையடைந்து ஒரு பிள்ளையைப் பெற்று அப்பிள்ளைக்கு "கணிகண்ணன்" என்ற திருநாமஞ் சாற்றி மகிழ்ச்சியுடன் வளர்த்து வரலாயினர். பின்பு ஆழ்வாரும் எல்லாத் திசைகளிலும் சென்றவாறே, அஷ்டாங்க யோகாப்பியாசத்தில் மனமாகி இவ்வுலகில் நிலவிவரும் பற்பல சமயங்களையும் புக்குணர்ந்து ஆராய்ந்து பார்த்து இவற்றில் யாதொரு பசையுமில்லை என்று கழித்து வரும் போது, சைவ சமயத்திலும் சில நாளிருந்து "சிவவாக்கியம்" என்ற இந்தப் பாடல்களைப் பாடி "சிவவாக்கியர்" என்ற நாமந்தரித்துப் பின்னர் இந்தச் சமயமும் "நிலை நில்லாது" என்று கைவிட்டு, ஸ்ரீ வைஷ்ணவராகி, ஸ்ரீ விஷ்ணு பரமாகத் திருப்பாசுரங்களைப் பாடி அனேக அற்புதங்களையுஞ் செய்து நாலாயிரத் தெழுநூறு ஆண்டுகள் இவ்வுலகத்தாரை வாழ்வித்து அருளினார் என்பது ஒரு கதை.

மு. அருணாசலத்தின் கருத்துப்படி இவரது காலம் கி.பி. 14ஆம் நூற்றாண்டு ஆகும். சித்தர் வரலாற்றில் திருமூலரை அடுத்து நீண்ட இடைவெளிக்குப் பின் தெரிய வரும் பெரும் சித்தர் இவரே. இவரே சித்தர் மரபை மட்டும் தழுவி முழு நூல் செய்த முதல் சித்தராகவும் அமைகின்றார்.

# 24

## தன்வந்திரி

மரு. கு. கணபதி

தேவர்களும் அசுரர்களும் திருப்பாற்கடலைக் கடைந்தபோது அமுத கலசத்துடன் திருமாலாய்த் தோன்றியவர். பின் அடுத்த பிறவியில் தீர்க்க தருமன் என்பவரின் புதல்வராகப் பிறந்தார் எனவும் நூல்கள் கூறுகின்றன.

அகத்தியர் பன்னீராயிரத்தில் விஷ்ணு பகவானே தன்வந்திரியாக உலக நன்மைக்காகப் பிறந்தார் என்று கூறுகிறார். ஆயுள் வேதத்தின் தந்தை என இவர் அழைக்கப்படுகிறார்.

மருத்துவத்தில் சிறந்த ஆற்றல் உள்ளவரைத் 'தன்வந்திரி' என அழைக்கப் படுவதால் (சிறப்பிப்பது) இவர் மருத்துவத்துறைக்கு ஒப்புயர்வற்ற சேவை புரிந்துள்ளார் எனக் கருத வேண்டும்.

இவர் தமிழில் பல நூற்கள் இயற்றியுள்ளது போல் வட மொழியிலும் பல நூல்கள் இயற்றியுள்ளார். எனவே இவர் ஒரு பன்மொழிப் புலவராக இருத்தல் வேண்டும். தமிழ் நூல்கள 'தன்வந்திரி கருக்கிடை நிகண்டு' குறிப்பிடத்தக்கது. இந்நூலில் இவர் வட நாட்ட வர் என்றும், இவர் இயற்றிய வடநூல்களை இவரே தமிழிலும் இயற்றியுள்ளதாகக் கூறப்படும். அதன் ஆதாரப்பாடல்

*என்தேயம் உத்திரதேயம்*
*நலம்புரிய என்னுடைய கிரந்தம் சொன்னேன்*
*உள்ளிடா அதைப் பிரித்துத் தமிழால் சொன்னேன்*

*நாரணன் என் போன் தட்சிணாயன்*
*நாமான ஆயிரத் திரு நூறென்றே*

சில நூல்கள் இவரை ஆதி சைவ அந்தண குலத்தவர் (குருக்கள்) என்றும் இவர் வைத்தீசுவரன் கோயிலில் சமாதியோகம் பெற்றவர் என்றும் கூறுகின்றன.

இதுவரை இவர் தமிழில் இயற்றியதாகக் கூறப்படும் நூல்கள்:

1. தன்வந்திரி முப்பு 48
2. தன்வந்திரி சிந்தாமணி அமர வெண்பா அல்லது அந்தாதி
3. தன்வந்திரி சகலஞானம் 140
4. தன்வந்திரி கலைஞானம் 500
5. தன்வந்திரி கருக்கிடை 200
6. தன்வந்திரி கருக்கிடை நிகண்டு 300
7. தன்வந்திரி முப்பு 44
8. தன்வந்திரி நாடி சாஸ்திரம்
9. தன்வந்திரி நாடி சூத்திரம்
10. தன்வந்திரி நிகண்டு 300
11. தன்வந்திரி செயநீர் 50
12. தன்வந்திரி சிமிட்டுரத்தின சுருக்கம் 360
13. தன்வந்திரி சூத்திரம்
14. தன்வந்திரி தண்டகம்
15. தன்வந்திரி வாலை சூத்திரம்
16. தன்வந்திரி வாதம், அறுவகை குணம்
17. தன்வந்திரி வாகட சுரநூல்
18. தன்வந்திரி வாகடம்
19. தன்வந்திரி வாக்கியம்
20. தன்வந்திரி வாக்கியம் முப்பு 40
21. தன்வந்திரி வைத்திய சிந்தாமணி 70
22. தன்வந்திரி வைத்திய சிந்தாமணி 1500
23. தன்வந்திரி வைத்திய காவியம்
24. தன்வந்திரி வைத்திய சாஸ்திரம்

25. தன்வந்திரி வைத்தியம் 500
26. தன்வந்திரி எழுபத்தீராயிரம் நாடி இருக்கும் வகை
27. தன்வந்திரி குணவாகடம்
28. தன்வந்திரி குருநாடி
29. தன்வந்திரி ஐவகை வலிப்பு குணம்
30. தன்வந்திரி இலிங்க மெழுகு வகை வசனம்
31. தன்வந்திரி இஞ்சி லேகிய முறை
32. தன்வந்திரி இரும்பு உருக்கு முறை
33. தன்வந்திரி ஜாலத்திரட்டு
34. தன்வந்திரி ஜாலத்திரட்டு 1200
35. தன்வந்திரி சோதிடமும் வைத்தியமும்
36. தன்வந்திரி கண் வைத்திய நூல்
37. தன்வந்திரி கர்ப்ப சிந்தாமணி
38. தன்வந்திரி கர்ப்பக் கூறு
39. தன்வந்திரி கர்ப்ப விதி
40. தன்வந்திரி கரு அமைப்பு அகவல்
41. தன்வந்திரி கருட பஞ்சாட்சரம்
42. தன்வந்திரி கரு சாத்திரம்
43. தன்வந்திரி கர்ப்பூர சலசித்து
44. தன்வந்திரி கர்ப்பூர சலகட்டு பற்பவகை
45. தன்வந்திரி இன்பரச மாலை (கர்ப்பம் தரியுங் குணம்)
46. தன்வந்திரி இந்திரசால நிகண்டு 200
47. தன்வந்திரி கயறு சூத்திரம் (மணிக்கடை)
48. தன்வந்திரி சிந்தாமணி.

# 25

# தட்சிணாமூர்த்தி

மா. மதியழகன்

அகத்தியரின் வேறு பெயரே தட்சிணாமூர்த்தி என **தட்சிணாமூர்த்தி கலைஞானம்** என்ற நூலின் வாயிலாகத் தெரிய வருகிறது. என்றாலும் இருவரும் ஒருவரே என்பதற்குப் போதிய ஆதாரமில்லை. எனவே இவரைத் தனிச் சித்தராகக் கருதலாம். தட்சிணாமூர்த்தி சனக, சனந்தனாதியர் நால்வருக்கும் வாய்ப் பேச்சின்றி மோன உபதேசம் செய்தவர்; திருமந்திரம் பாடியவர்; நர்மதை நதிக் கரையில் சமாதி கொண்டவர் என்று போகர் கூறுகிறார். சித்தராகிய சிவபெருமான் தென்றிசைக் கடவுளாகத் தோன்றித் தட்சிணாமூத்தி என்ற பெயருடன் சித்த மருத்துவத்துக்கும் சித்தர்களின் யோகம், ஞானம், வாதம் என்னும் கலைகளுக்கும் ஆக்கந்தரும் பனுவல் பல இயற்றியவர் ஒருவர் உண்டு. அவரைத் தனவந்திரியின் பேரன் என்றும் பதினெண் சித்தர்களில் ஒருவரென்றும் மெய்ஞ்ஞானத் திருமந்திரம்–1500 என்னும் நூல் கூறும். இவர் இயற்றியதாகக் கூறப்படும் நூல்கள்:

1. தட்சிணாமூர்த்தி கடைக்காண்டம்
2. தட்சிணாமூர்த்தி நாடி சதகம்
3. தட்சிணாமூர்த்தி நட்டாமுட்டி சூத்திரம்
4. தட்சிணாமூர்த்தி நிகண்டு116
5. தட்சிணாமூர்த்தி பாடல் பின் 80
6. தட்சிணாமூர்த்தி பரிபாஷை
7. தட்சிணாமூர்த்தி ரசவாதம் 16
8. தட்சிணாமூர்த்தி சுத்தி

9. தட்சிணாமூர்த்தி சுருக்கம்
10. தட்சிணாமூர்த்தி சூத்திரம்
11. தட்சிணாமூர்த்தி வாலை 30
12. தட்சிணாமூர்த்தி வகார சௌமிய சாகரம் 500
13. தட்சிணாமூர்த்தி வகிகர் பட்சிணி 81
14. தட்சிணாமூர்த்தி வாக்கியம் 16
15. தட்சிணாமூர்த்தி வழலை 30
16. தட்சிணாமூர்த்தி வைத்திய ஆனந்த பூர்ண சூத்திரம்
17. தட்சிணாமூர்த்தி வைத்திய கடைக்காண்டம் 600
18. தட்சிணாமூர்த்தி வைத்திய மெய்ஞானம் 1500
19. தட்சிணாமூர்த்தி வைத்திய சூத்திரம் 16
20. தட்சிணாமூர்த்தி வைத்தியம்
21. தட்சிணாமூர்த்தி வைத்திய வல்லாதி
22. தட்சிணாமூர்த்தி குணவாகடம்
23. தட்சிணாமூர்த்தி ஆறு காண்டத்தில் பூரண காவியம்
24. தட்சிணாமூர்த்தி ரச குளிகை
25. தட்சிணாமூர்த்தி பாடல்
26. தட்சிணாமூர்த்தி சகல பரிபூரண வைத்தியம்
27. தட்சிணாமூர்த்தி பரிபாஷை
28. தட்சிணாமூர்த்தி சோதிடம், வைத்தியம்
29. தட்சிணாமூர்த்தி மாட்டு வாகடம்
30. தட்சிணாமூர்த்தி நாடி பரீட்சை
31. தட்சிணாமூர்த்தி அகவல்
32. தட்சிணாமூர்த்தி காவியம்
33. தட்சிணாமூர்த்தி மெய்ஞான சுருக்கம்
34. தட்சிணாமூர்த்தி நிகண்டு
35. தட்சிணாமூர்த்தி பூஜாவிதி

36. தட்சிணாமூர்த்தி பூரணம் 1200
37. தட்சிணாமூர்த்தி சண்முகஜாலம்
38. தட்சிணாமூர்த்தி திறவுகோல்
39. தட்சிணாமூர்த்தி வைத்திய காண்டம்
40. தட்சிணாமூர்த்தி வைத்திய கர்ம காண்டம்
41. தட்சிணாமூர்த்தி வைத்திய காவியம் 1000
42. தட்சிணாமூர்த்தி வைத்திய ரத்தின சுருக்கம்
43. தட்சிணாமூர்த்தி விருத்தம்
44. தட்சிணாமூர்த்தி கலைஞானம்
45. தட்சிணாமூர்த்தி பட்சணி
46. தட்சிணாமூர்த்தி ரசமணி
47. தட்சிணாமூர்த்தி சாயதர்சனம்
48. தட்சிணாமூர்த்தி சௌமிய ஜாலத் திரட்டு
49. தட்சிணாமூர்த்தி சௌமிய சாகரம்
50. தட்சிணாமூர்த்தி தீட்சை
51. தட்சிணாமூர்த்தி திருமந்திரம்
52. தட்சிணாமூர்த்தி உடற்கூறு முறை
53. தட்சிணாமூர்த்தி உடற்கூறு சூத்திரம்.

# 26

# நந்தீசர்

மா. மதியழகன்

சித்தர் கணத்துள் ஒருவராகிய இவரைப் பற்றிய வரலாற்றுக் குறிப்புகளோ, இவரைப் பற்றிய கர்ண பரம்பரைக் கதைகளோ எதுவும் புழக்கத்தில் இல்லை. சித்தர் மரபில் இறைவன் சிவனே முதல் சித்தராகக் கருதப்படுகின்றார். அவர் சித்தர் தத்துவத்தை நந்திக்கு உபதேசிக்க, நந்தியின் மூலம் மற்றவர்களுக்கு உபதேசிக்கப் பட்டது என்றே கருதப்படுகின்றது. சித்தர் மரபில் இது கைலாயப் பரம்பரை என்று வழங்கப்படுகிறது. இறைவனுக்கும் நந்தீசன் என்ற பெயர் வழக்குண்டு. எனவே நந்தீசர் என்ற பெயரில் ஒருவரோ அல்லது பலரோ இருந்து நூல் செய்திருக் கலாம். அல்லது வேறு பெயரில் வாழ்ந்த சித்தர்/ சித்தர்கள் தம் நூலுக்குப் பெருமை சேர்க்கும் பொருட்டு இறைவனாகிய நந்தீசனின் பெயரைச் சூட்டி இருக்கலாம். எப்படியோ இன்று நமக்குக் கணிசமான அளவில் நந்தீசர் செய்ததாகப் பல மருத்துவ நூற்கள் கிடைத்து வருகின்றன. அவை வருமாறு:

1. நந்தீசர் கரகைப்பா 500
2. நந்தீசர் மதிகைப்பா 100
3. நந்தீசர் முப்பு 51
4. நந்தீசர் திருமந்திரம்
5. நந்தீசர் வைத்தியம்
6. நந்தி தேவர் தண்டகம்
7. நந்திகேசுவரர் சூத்திரம்
8. நந்தி கடை சூத்திரம்

9. நந்தி சதுர வாகடம்
10. நந்தி நூல்
11. நந்தி வாத காண்டம்
12. நந்தி வாத சூத்திரம்
13. நந்தி நயன வைத்திய விதி
14. நந்தி நயன விதி
15. நந்தி நெய்சீலை நாடி 10
16. நந்தி ஒடிவு முறிவு சாரி
17. நந்தீசர் ஞானம் 10
18. நந்தீசர் ஞானம் 100
19. நந்தீசர் ஞானம் 1000
20. நந்தீசர் முப்பு சூத்திரம்
21. நந்தீசர் சதகம்
22. நந்தீசர் தத்துவம்
23. நந்தி நாடி
24. நந்தீசர் கலைஞானம்
25. நந்தீசர் கரச்சைப்பா வெண்பா
26. நந்தீசர் கருக்கடை
27. நந்தீசர் கைத்தல சூத்திரம்
28. நந்தீசர் முப்பிரணவ சூத்திரம்
29. நந்தீசர் நீலகண்ட வாலை சூத்திரம்
30. நந்தீசர் நீர்த்தினக் குரு
31. நந்தீசர் நிகண்டு
32. நந்தீசர் பாடல்
33. நந்தீசர் பூஜாவிதி
34. நந்தீசர் பிரணவம்
35. நந்தீசர் பிரணவ நூல் மூல நிகண்டு

36. நந்தீசர் பிரணவ சூத்திரம்
37. நந்தீசர் புராண சைத்திய வைத்தியம்
38. நந்தீசர் பூர்வ முப்பு சூத்திரம்
39. நந்தீசர் சகல விஷ குளிகை
40. நந்தீசர் தண்டகம்
41. நந்தீசர் தத்துவ நாடி
42. நந்தீசர் திராவகம்
43. நந்தீசர் உதயதீதகம் (உதிச்சய சூத்திரம்)
44. நந்தீசர் உதிச்சயம் (ஓசை நிகண்டு)
45. நந்தீசர் உதிச்சயம் சூத்திரம்
46. நந்தீசர் வைத்திய சூத்திரம்
47. நந்தீசர் வாத சூத்திரம்
48. நந்தீசர் வழலை
49. நந்தீசர் வைத்திய சூத்திரம் திருவாரணம்.

27

## சட்டைமுனி

மரு. கு. கணபதி

சட்டைமுனியை சட்ட நாதர் என்றும், இவர் சிங்களவர் என்றும், பிறப்பால் சேணியர் என்றும் கூறுவர். மதுரை வாலைசாமி என்பவர் இவரைத் தம் குரு எனக் குறிக்கின்றார்.

"எங்கள் குரு சட்டை முனியாரிரு நூறும் பாரடி ஞானப் பெண்ணே!"

என்பது அவர் பாடல்.

சித்தர் ஞானக் கோவையில் கயிலாயக் கம்பளிச் சட்டை முனி நாயனுர் செய்த *முன் ஞானம் – 100, பின் ஞானம் – 100* என 200 பாடல்கள் காணப்படுகின்றன. இவர் பெருமையைப் புகழ்ந்து கூறும் கர்ணபரம்பரைக் கதை திருவரங்கன் சந்நிதியில் கூறப்படுகிறது. எனவே அங்கேயே சமாதியில் ஆழ்ந்து இன்றும் அருவராக மக்களுக்கு அருள் கூர்ந்து வருகிறார். இவர் சீர்காழியில் சமாதி எய்தினார் என்பதுவும் சிலர் கருத்து. இவர் இயற்றியதாகத் தெரியவரும் நூல்கள்:

1. சட்டை முனி ஆயிரத்தில் தாது பிறந்த மாலை
2. சட்டை முனி கர்ப்பமுறை
3. சட்டை முனி கர்ப்ப விதி
4. சட்டை முனி கர்ப்ப வகை
5. சட்டை முனி கர்ப்பம்
6. சட்டை முனி காய சித்தி
7. சட்டை முனி மூலிகை நிகண்டு

8. சட்டை முனி நாயனார் சூத்திரம்
9. சட்டை முனி நிகண்டு
10. சட்டை முனி பாடல் 100
11. சட்டை முனி சரக்கு வைப்பு 105
12. சட்டை முனி சூத்திரம் நிகண்டு
13. சட்டை முனி சூத்திரம்
14. சட்டை முனி தர்க்கம்
15. சட்டை முனி உப்புக் கட்டு
16. சட்டை முனி வாத நூல்
17. சட்டை முனி வாத காவியம்
18. சட்டை முனி வாதம்
19. சட்டை முனி வாக்கியம்
20. சட்டை முனி சித்தாதி எண்ணெய்
21. சட்டை முனி சித்தராரூடம்
22. சட்டை முனி சித்தர் பன்னூல் பாடல் திரட்டு
23. சட்டை முனி சித்தர் வெண்பா
24. சட்டை முனி சில்லறை வைத்தியம்.
25. சட்டை முனி சவுக்காரத் திறவுகோல்
26. சட்டை முனி சௌமிய சாகர சுருக்கம் 300
27. சட்டை முனி சௌமிய சாகரத்தில் பாஷாணக்கட்டு
28. சட்டை முனி சௌமிய சாகரம்
29. சட்டை முனி வாத காவியம் 1000
30. சட்டை முனி ஞான சூத்திரம் 200
31. சட்டை முனி கர்ப்பநாத பலதிரட்டு
32. சட்டை முனி சித்தர் ஆரூடம்
33. சட்டை முனி சித்தாரூட நொண்டிச் சிந்து

34. சட்டை முனி வைத்திய சிந்தாமணி
35. சட்டை முனி வைத்திய பரிபூரணம்
36. சட்டை முனி நிகண்டு ஞானம்
37. சட்டை முனி ஆயிரத்து இருநூறு
38. கைலாய சட்டை முனி ஞானம்
39. சட்டை முனி முன்பின் ஞானம்
40. சட்டை முனி சடாக்கரக் கோவை
41. சட்டை முனி வாத சூத்திரம்
42. சட்டை முனி தண்டம்
43. சட்டை முனி வைத்திய காவியம்
44. சட்டை முனி நவரத்ன வைப்பு
45. சட்டை முனி தீட்சாவிதி
46. சட்டை முனி திரு காண்டம்
47. சட்டை முனி சரக்கு வைப்பு
48. சட்டை முனி வாத காவியம்
49. சட்டை முனி புராண சூத்திரம்.

28

# பிரம்மமுனி

மா. மதியழகன்

சித்தர் கணத்துள் ஒருவராகிய இவரைப் பற்றிய வாழ்க்கைக் குறிப்புகள் கிடைத்திலவாயினும் இவர் பெயரிலும் பல நூல்கள் காணப்படுகின்றன. அவை :

1. பிரம்மமுனி சூத்திர வெண்பா
2. பிரம்மமுனி சூத்திரம்
3. பிரம்மமுனி சூத்திரம் 360
4. பிரம்மமுனி சூத்திரம் 380
5. பிரம்மமுனி சூத்திரம் – குறள் 41
6. பிரம்மமுனி வாகடம்
7. பிரம்மமுனி வாகடம் 700
8. பிரம்மமுனி வைத்திய சதகம்
9. பிரம்மமுனி வைத்திய சூத்திரம் 380
10. பிரம்மமுனி வைத்தியம்
11. பிரம்மமுனி வைத்தியம் 700
12. பிரம்மமுனி வைத்தியம் கருக்கிடை சூத்திரம்
13. பிரம்மமுனி சிந்தாமணி குணவாகடம்
14. பிரம்மமுனி சிந்தாமணி நாடி சாஸ்திரம்

பிரம்மமுனி சிந்தாமணி தாது நிதானம்

பிரம்மமுனி செந்தூர பஸ்ப வகைகள்

பிரம்மமுனி சிகிட்சா விதி

பிரம்மமுனி சிந்தூராதி மருந்து வகை

பிரம்மமுனி அட்டவணை

பிரம்மமுனி எண்ணூறு

பிரம்மமுனி ஐம்பது

பிரம்மமுனி கைமுறை அட்டவணை

பிரம்மமுனி கருக்கிடை

பிரம்மமுனி கருக்கிடை சூத்திரம்

பிரம்மமுனி முன்னூற்று எண்பது

பிரம்மமுனி முன்னூற்று ஐம்பது

பிரம்மமுனி சாத்திரம்

பிரம்மமுனி வைத்தியம் பலதிரட்டு

பிரம்மமுனி வைத்திய நாடி

பிரம்மமுனி வைத்திய அட்டவணை

பிரம்மமுனி பெருநூல்.

29

# சுந்தரானந்தர்

மா. மதியழகன்

சித்தர் கணத்தைப் பற்றிக் கூறும் பெரும்பாலான பட்டியல்களிலும் சுந்தரர், சுந்தரானந்த தேவர், சுந்தரானந்தர் என்ற பெயர்களில் இடம்பெற்றிருக்கும் இவரது பெயரில் கதைகள் எதுவும் வழக்கத்திலில்லை. ஆனால் பல நூல்கள் காணப்படுகின்றன. அவை :

1. சுந்தரானந்தர் அதீத சூத்திரம் 36
2. சுந்தரானந்தர் கேசரி 48
3. சுந்தரானந்தர் கேசரி வைத்தியம்
4. சுந்தரானந்தர் முப்பு 26
5. சுந்தரானந்தர் பரமூலிகை பாடல்
6. சுந்தரானந்தர் சூத்திரம்
7. சுந்தரானந்தர் தண்டகம்
8. சுந்தரானந்தர் வினோத சூத்திரம்
9. சுந்தரானந்தர் சுரசூத்திரம்
10. சுந்தரானந்தர் சுரோணித கட்டுக்கு விளக்கெண்ணெய் வைப்பு முறை
11. சுந்தரானந்தர் சூரிய வாகட வெண்பா
12. சுந்தரானந்தர் தைல முறைகள்
13. சுந்தரானந்தர் தாது புஷ்டி குளிகை
14. சுந்தரானந்தர் தர்க்கப்பாட்டு

15. சுந்தரானந்தர் சுரநூல்
16. சுந்தரானந்தர் ஆயிரத்தில் ஐம்பத்தாறு
17. சுந்தரானந்தர் ஞானம்
18. சுந்தரானந்தர் தத்துவம்
19. சுந்தரானந்தர் வாக்கிய சூத்திரம்
20. சுந்தரானந்தர் திருப்பதிக் கோவை
21. சுந்தரானந்தர் அட்டகர்மம்
22. சுந்தரானந்தர் ஜீவரத்னஞானம்
23. சுந்தரானந்தர் மணிகண்டம்
24. சுந்தரானந்தர் பூஜாவிதி
25. சுந்தரானந்தர் தீட்சாவிதி
26. சுந்தரானந்தர் வைத்திய திரட்டு
27. சுந்தரானந்தர் வேதை
28. சுந்தரானந்தர் வினோத சூத்திரம்
29. சுந்தரானந்தர் ஆயுர்வேத பொதுவிதி.

30

# சித்த மருத்துவக் கல்லூரிகள் தோற்றமும் வளர்ச்சியும்

மரு. ச. முத்தரசன்

## தொடக்க நிலை

1921–ஆம் ஆண்டின் இறுதியில் மறைந்த பனகல் இராஜா அவர்கள், தாம் சென்னை இராஜதானியின் முதலமைச்சரும், நல்வாழ்வுத்துறை அமைச்சருமாக இருந்த காலத்தில் வெளியிட்ட அரசு ஆணை G.O.Ms.No.964 P.H.Dt.10.8.1921 & G.O. Ms.No.1351.P.H..Dt. 1 7.10.1931 ஆகியவற்றின் படி செயலாற்றிய உஸ்மான் கமிட்டியின் பரிந்துரையின்படி, அரசு ஆணை G.O.Ms.No.1581, P.H.Dt.03.11.1924 இல், டாக்டர் ஜி. ஸ்ரீனிவாசமூர்த்தி அவர்களை முதல்வராகக் கொண்டு, அரசு இந்திய மருத்துவ முறைப் பள்ளி (Government Indian Medical School) எழும்பூரில் வாடகைக் கட்டடத்தில் ஆரம்பிக்கப் பெற்றது. அப்பள்ளியில் ஆயுர்வேதா, சித்தா மற்றும் யுனானி முறைகளுக்குத் தனித்தனியாக மூன்றாண்டுகள் பயிலும் வகையில் மாணவர்கள் சேர்க்கப்பட்டனர். அவர்களுக்கு Diploma of Licentiate in Indian Medicine (L.I.M.) எனும் பெயரில் சான்றிதழ் வழங்கப்பட்டு வந்தது. 1926–இல் பூவிருந்தவல்லி நெடுஞ்சாலை, கீழ்ப்பாக்கத்தில் பெரியதோர் வாடகைக் கட்டடத்திற்கு அப்பள்ளி மாற்றப்பட்டது. அரசு ஆணை G.O.Ms.No.2188, P.H.Dt.28.10.25 இன் படி மாற்றப்பட்ட அப்பள்ளியின் பயிற்சிக் காலம் மூன்று ஆண்டுகளிலிருந்து நான்காண்டுகளாக உயர்த்தப்பட்டதோடு, அலோபதி முறை மருத்துவமும், அறுவை மருத்துவமும் கற்றுக்கொடுக்கப்பட்டன. 1942–இல் டாக்டர் ஜி. ஸ்ரீனிவாசமூர்த்தியைப் பின் தொடர்ந்து டாக்டர் பி.வி. கிருஷ்ணாராவ் முதல்வரானார். 1944-இல் டாக்டர் பி.வி. கிருஷ்ணாராவின் மறைவிற்குப் பின்னர்,

டாக்டர் எம். பராங்குசம் முதல்வரானார். சென்னை இராஜதானியின் அன்றைய முதல்வராயிருந்த மாண்புமிகு திரு. டி. பிரகாசம் மற்றும் நல்வாழ்வுத்துறை அமைச்சராயிருந்த மாண்புமிகு திருமதி ஆர். லட்சுமிபதி ஆகியோரின் விடா முயற்சியாலும் மற்றும் தனி அலுவலர் (Special Officer) திரு. நாராயணசாமி நாயுடு பி.ஏ.பி.எல்., ஆகியோரது நற்பணிகளாலும், அரசு இந்திய மருத்துவ முறைப் பள்ளி, அரசு இந்திய மருத்துவ முறைக் கல்லூரி எனும் நிலையை அடைந்தது. G.O.Ms.No.762.P.H.Dt.10.3.1947 அரசு ஆணையின் படி 1947–இல் முறைப்படி பள்ளியில் பயின்ற மாணவர்கள் தங்கள் கல்வியை ஒருபுறம் முடித்த காலத்திலேயே அவர்கள் பள்ளி மூடப்பட்டதோடு, புதிய கல்லூரியும் தோன்றியது. மாணவர்களின் எண்ணிக்கை 50 ஆகியது. இது முந்தைய எண்ணிக்கையை விட (120) மிகவும் குறைவு. எனினும் மாற்றம் தேவையாக இருந்தது.

## இந்திய மருத்துவத் துறை

பிற்காலத்தில் 1948–இல் L.I.M. Course - School of Indian Medicine as per G.O. Ms.No.177, P.H. Dt. 28.05.1948 & G.O.Ms.No.405,. P.H. Dt. 08.02.1949 அரசு ஆணைகளின்படி பள்ளியும், கல்லூரியும் ஏக காலத்தில் இயங்கலாயின. எல்.ஐ.எம். மாணவர்களின் எண்ணிக்கை 100–ஆக வரையறுக்கப்பட்டது. G.O.Ms.No.2361 P.H. Dt. 22.06.1949–இன் படி 1.07.1949–இல் டாக்டர் எம்.ஆர். குருசாமி முதலியார், எம்.டி., இந்திய மருத்துவத்துறை இயக்குநராக நியமிக்கப் பெற்றார். சென்னைப் பல்கலைக்கழகம் College of Indigenous Medicine தொடங்க அங்கீகாரம் வழங்காத காரணத்தால், அன்றைய மாணவர்களுக்கு அரசே Graduate of the College of Indigenous Medicine (G.C.I.M.) எனும் பட்டத்தை வழங்கியது.

## இணைப்புமுறை மருத்துவம்

டாக்டர் எம்.ஆர். குருசாமி முதலியார் அவர்களின் இந்திய முறை மருத்துவக் கல்லூரி 01.07.1955–இல் Director of Medical Services கைக்கு மாறியது. 5–ஆண்டுக் கல்வி, ஐந்தரை ஆண்டுகளாகியது. இந்திய முறை மருத்துவமனை, இணைப்பு முறை மருத்துவக் கல்லூரி மற்றும் இணைப்பு முறை மருத்துவமனை ஆகிய பெயர்களைப் பெறலாயின. (Government College of Integrated Medicine & Hospital, 1956–இல் The Integrated Medical Practitioners Act / G.C.I.M., L.I.M.) ஜி.சி.ஐ.எம்., எல்.ஐ.எம். ஆகியோர்களுக்காகவே இணைப்பு முறை மருத்துவம் கொண்டு வரப்பட்டது.

## சித்த மருத்துவக் கல்லூரிகள்

காலப்போக்கில் தூய சித்தா, ஆயுர்வேதா, யுனானி முறைகளை மட்டுமே பாட போதனைகளாகக் கொண்டு, இந்திய முறை மருத்துவக் கல்லூரி வேண்டும் என்ற நல்லெண்ணத்தின் அடிப்படையில், திரு மேதா கமிட்டியின் பரிந்துரையின் பேரில் சித்தா, ஆயுர்வேதா, யுனானி முறைகளுக்காகவே தனியோர் கல்லூரி குற்றாலத்தில் தொடங்குவதற்காக விண்ணப்பங்கள் 1964–இல் வரவேற்கப் பெற்றன. ஆயினும், தவிர்க்க இயலாத பற்பல காரணங்களால் 1964 நவம்பரில், இந்திய முறை மருத்துவக் கல்லூரி பாளையங்கோட்டையில் தொடங்கப் பெற்றது. ஆயுர்வேதா, யுனானி முறைகளில் பயில மாணவர்கள் வராத காரணத்தால், 30 ஆக இருந்த சித்தா மாணவர்களின் எண்ணிக்கை, அதே ஆண்டில் 65 ஆக உயர்ந்தது குறிப்பிடத் தக்கது. இம்மாணவர்களுக்கு Bachelor of Indian Medicine பட்டம் வழங்கப் பெற்றது. பயிற்சியின் காலம் ஐந்தாண்டுகள். பிற்காலத்தில் இந்திய முறை மருத்துவக் கல்லூரி, சித்த மருத்துவக் கல்லூரி எனும் பெயர் மாற்றத்திற்கு உள்ளாகியது. பி.ஐ.எம். பட்டத்தைத் தொடர்ந்து, 1972–இல் எம்.டி., எனும் மேற்படிப்புத் தொடங்கப் பெற்றது. அன்றைய இந்திய மருத்துவக் கல்லூரி நடந்து வந்த அதே இடத்தில், இன்றைய அரசு சித்த மருத்துவக் கல்லூரி பாளையங்கோட்டையில் நடைபெற்று வருகிறது. 1975–76–இல் மாணவர்களின் எண்ணிக்கை (பி.ஐ.எம்.) 40 ஆக்கப்பட்டது. மீண்டும் மாணவர்கள் சேர்க்கை வளர்ந்து, இன்றைய நிலையை (100 மாணவர்கள்) எட்டியது. 1964–இல் ரூ.75/– உதவித் தொகையாக மாணவர் களுக்கும், ரூ.175/– பயிற்சி மருத்துவர்களுக்கும் மாதந்தோறும் வழங்கப் பெற்றது. எம்.டி., மாணவர்களுக்கு ரூ.200/– உதவித்தொகை மாதம்தோறும் வழங்கப் பெற்றது. சென்னைப் பல்கலைக்கழகத்திலிருந்து 1968–1969–இல் மதுரைப் பல்கலைக் கழகத்திற்கு நிர்வாகம் மாற்றப் பெற்றது. முன்னாளில் தோன்றிய பாளையங் கோட்டை இந்திய மருத்துவக் கல்லூரி, சித்த மருத்துவக் கல்லூரிஆன போது பி.ஐ.எம்., எனும் பட்டம் பி.எஸ்.எம்.எஸ். எனும் பட்டமாக மாற்றப் பெற்றது. பயிற்சிக் காலம் ஐந்தரை ஆண்டுகளாயின. இம்மாற்றம் 1976–இல் தோன்றியது.

பாளையங்கோட்டை சித்த மருத்துவக் கல்லூரிக்குத் தேவையான புதிய கட்டடங்களும், பற்பல புதிய துறைகளும், ஓலைச்சுவடி ஆராய்ச்சித் துறையும் (Literary Research Unit), மருத்துவ ஆராய்ச்சித் துறையும் (Clinical Research Unit), தாவரவியல் ஆராய்ச்சித் துறையும் (Survey of Medicinal Plants Unit) பாளையங்கோட்டை சித்த மருத்துவக் கல்லூரி வளாகத்திலேயே தோன்றலாயின. 1985–இல் பழனியில் ஆரம்பிக்கப் பெற்ற புதிய சித்த மருத்துவக் கல்லூரி

1993–இல் சென்னையில் அறிஞர் அண்ணா அரசினர் இந்திய முறை மருத்துவமனை வளாகத்திற்கு மாற்றப்பட்டு, புதிய கட்டடங்கள் கட்டப் பெற்று, சீரும் சிறப்புமாக இயங்கி வருகிறது.

பாளையங்கோட்டையைப் போலவே 1971–இல் கீழ்ப்பாக்கத்தில் மத்திய சித்த மருத்துவ ஆராய்ச்சி நிறுவனமும், 1979–இல் மண்டல சித்த மருத்துவ ஆராய்ச்சி நிறுவனம் பாண்டிச்சேரியிலும் தோன்றலாயின. கீழ்ப்பாக்கத்தில் இயங்கி வந்த மத்திய சித்த மருத்துவ ஆராய்ச்சி நிறுவனம், 1975–இல் அறிஞர் அண்ணா அரசினர் இந்திய முறை மருத்துவமனை வளாகத்திற்கு மாற்றப்பட்டது. இவை யாவும் முன்னாளில் இந்திய மருத்துவம் மற்றும் ஹோமியோபதி மத்திய கழகத்தாலும், பின்னாளில் ஆயுர்வேதா மற்றும் சித்தா மத்திய கழகத்தாலும் நிர்வகிக்கப்படு கின்றன என்பது இங்குக் குறிப்பிடத்தக்கதாகும். இவ்விடத்திலேயே 1979–இல் சித்த மருத்துவ இலக்கிய ஆராய்ச்சி மற்றும் ஆவணத்துறை தோன்றியது. ஏற்கனவே நுண் உயிரியல் (Micro Biology), மருந்து தரக் கட்டுப்பாடு (Drug Standardization), மருந்து செய்யகம் (Pharmacy), பல்வகை மருத்துவ ஆராய்ச்சி (Drug Research Scheme - Multi Disciplinary), மருத்துவ ஆராய்ச்சி (Clinical Research), நோய் கணிப்பு (Pathology), மூலிகை ஆராய்ச்சி (Pharmacognosy) மற்றும் உள்ளிருப்பு (In-Patient), வெளி நோயாளிகள் (Out-Patient) பகுதியும் இயங்கி வந்த போதிலும், புதிதாகத் தோன்றிய சித்த மருத்துவ இலக்கிய ஆராய்ச்சி மற்றும் ஆவணத்துறை, இவைகள் அனைத்திற்கும் தேவையானத் தகவல்களைத் தரும் தலையாய கடமைகளைச் செய்யலாயிற்று. இத்துறை ஓலைச்சுவடிகளைச் சேகரித்தல், பராமரித்தல், படியெடுத்தல், ஒப்பு நோக்குதல், விளக்க உரை எழுதுதல், முறைப் படுத்துதல், நூல்வடிவு பெறச் செய்தல், அச்சிடுதல் மற்றும் வெளியிடுதல் ஆகிய பணிகளோடு, நுண்படியெடுத்தல் (Micro Fliming), பதிவு செய்தல் (Documentation), பாதுகாத்தல் (Preservation) போன்ற பல்வேறு பணிகளையும் செய்து வருகின்றது. இந்நிறுவனத்தில் தரமான நூல்களைக் கொண்ட நூலகமும் (Library), நூலகரும் (Librarian) உள்ளமை இதன் பெருமைக்குச் சான்றாகும்.

## சித்த மருத்துவமனைகள்

1968–இல் அரும்பாக்கத்தில் 100 படுக்கைகள் கொண்ட அறிஞர் அண்ணா அரசினர் இந்திய மருத்துவமனை தொடங்கப் பெற்றது. பிற்காலத்தில் ஹோமியோபதி, யோகா, இயற்கை மருத்துவ முறைகளும் இம்மருத்துவமனையோடு இணைந்து, அறுவகை மருத்துவத் துறைகள் தமக்கே உரித்தான நல் வழிகளில்

இயங்கி வருகின்றன. இதில் இந்திய மருத்துவத்துறை மற்றும் ஹோமியோபதித் துறை இணைந்த இயக்குநர் அலுவலகமும், அவருக்குத் துணையாக இணை இயக்குநர் அலுவலகமும் இவற்றின் பணிகளைச் செவ்வனே செய்து வருகின்றன. முதல் முறையாகத் தலைமைச் செயலகத்திலும், சேப்பாக்கத்திலும், புதுக்கோட்டையிலும், கன்னியாகுமரியிலும், செங்கோட்டையிலும், சோமரசம்பேட்டை, சைதாப்பேட்டையிலும், வாய்மேடு போன்ற இடங்களிலும் அரசினர் சித்த மருத்துவமனை தோன்றலாயின. காலப்போக்கில் சேலம்–ஆத்தூரிலும், இராமநாதபுரம் – ஸ்ரீவில்லிப்புத்தூரிலும், திண்டிவனத்திலும், வடஆற்காடு – குடியாத்தத்திலும், கோவை–உடுமலைப்பேட்டையிலும், திருச்சி– லால்குடியிலும், தஞ்சை – கும்பகோணத்திலும், மதுரை – நிலக்கோட்டையிலும், திருநெல்வேலி – கோவில்பட்டியிலும், செங்கை – தாம்பரத்திலும், திருநெல்வேலி – சங்கரன்கோவிலிலும், தஞ்சை – புதுக்கோட்டையிலும், மன்னார்குடியிலும், பட்டுக்கோட்டையிலும், திருச்சியிலும், கரூரிலும், வடஆற்காடு – செய்யாரிலும், செங்கை – ஸ்ரீபெரும்புதூரிலும், கோவை – கோபிசெட்டிப்பாளையத்திலும், நீலகிரி – கூனூரிலும், தர்மபுரி – ஓசூரிலும், கிருஷ்ணகிரியிலும், இராமநாதபுரம் – சிவகங்கையிலும், சேலம் – நாமக்கல்லிலும், மதுரை – தேனியிலும், திருமங்கலத்திலும், தென்ஆற்காடு – சிதம்பரத்திலும், செங்கை – அரக்கோணத்திலும் 1974–இல் இருந்து தோன்றிய மருத்துவமனைகள் படிப்படியாக மாவட்டங்களில் இருந்து கோட்டங்களுக்கும், கோட்டங்களிலிருந்து வட்டங்களுக்கும் பரவி, படிப்படியாகப் பல ஆரம்ப சுகாதார நிலையங்கள் வரை விரிவுபடுத்தப்பட்டு, வளர்ந்து தமிழகமெங்கும் தமது பணியைச் செய்யலாயின. இன்று அறிஞர் அண்ணா அரசினர் மருத்துவமனை வளாகத்தில் சித்த மருத்துவக் கல்லூரியும், யுனானி மருத்துவ முறைக் கல்லூரியும், மத்திய சித்த ஆராய்ச்சி நிறுவனமும் இயங்கி வருகின்றன. ஏற்கனவே அறிஞர் அண்ணா அரசினர் இந்திய மருத்துவ மனைக்குச் சொந்தமான மருந்து செய்யகம் இருந்த போதிலும், டாம்கால் என்ற தமிழக அரசுக்குச் சொந்தமான நிறுவனம் ஒன்று 1983–இல் ஏற்படுத்தப்பட்டது. இந்நிறுவனத்திற்கு இயக்குநரே மேலாளராக நியமிக்கப் பெற்றார். இவரை ஆலோசகராகக் கொண்ட இந்நிறுவனம் இவ்வளாகத்திலேயே தமக்கென ஓர் மருந்து செய் நிலையத்தையும், மற்றும் ஆத்தூரில் துணை மருந்து செய் நிலையத்தையும் கொண்டு இயங்கி வருகின்றது. சில தவிர்க்க இயலாத காரணங்களால் நஷ்டத்தில் இயங்கி வந்த இந்நிறுவனம், ஒரு கோடிக்கு மேல் இலாபத்தில் இயங்கித் தன்னை நிலைப்படுத்திக் கொண்டு வளர்ந்து வருவது– இந்நிறுவனம் தமிழகத்திற்கு ஓர் எடுத்துக்காட்டாக விளங்கி வருவது – மருத்துவத் துறைக்கு ஓர் வரப்பிரசாதமாகும். இந்நிறுவனம் தரமான மருந்துகளைத் தயாரித்துப் பல மாநிலங்களுக்கும் விற்பனை செய்து வருவது, இதன் முன்னேற்றத்தின் முதல்

படியாகும். காலப்போக்கில் இந்நிறுவனம் மேலும் வளர்ந்து, பல கோடிகளை ஈட்டித் தருவது தமிழகத்திற்குப் பெருமை சேர்ப்பதாகும். மேலும் தமிழகத்தில் கோயம்புத்தூரில் தொடங்கப்பெற்ற ஆயுர்வேத மருத்துவக் கல்லூரியும் ஏற்கனவே இயங்கி வரும் வெங்கடரமணா ஆயுர்வேத மருத்துவக் கல்லூரிக்குப் பெருமை சேர்க்கும் விதத்தில் தங்களது தனித்தனிப் பாணியில் இயங்கி வருகின்றன. மற்றும் சித்த, ஆயுர்வேத மருத்துவக் கல்லூரிகளும் ஆங்காங்கே தோன்றுவதற்கு முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன. இவை யாவும் விரைவில் நடந்தேறும் என்பதில் எள்ளளவும் ஐயமில்லை. மருத்துவம் வளரத் தரமான மருத்துவ அகராதி தேவை என்று மகா மகோபாத்தியாய சுவாமிநாத ஐயர் கூறியபடி அறிவையும், புத்திக்கூர்மையையும் வளர்க்கும் மருத்துவ அகராதியை திரு சாம்பசிவம் பிள்ளை அவர்கள் இயற்றித் தமிழ் மக்களுக்கு அளித்துள்ளமை, தமிழ் மக்கள் வாழும் காலமெல்லாம் நினைந்து, நினைந்து பெருமைப்படத் தக்க ஓர் செயலாகும்.

## சித்த மருத்துவ ஆராய்ச்சி

தற்போது சித்த மருத்துவ மாணவர்கள், சித்த மருத்துவம் மட்டுமின்றி பயனுள்ள ஆராய்ச்சித் துறைகளிலும் தங்களது கவனத்தைச் செலுத்தித் தாவரவியல், மருந்தியல், மருத்துவ ஆராய்ச்சி, மருத்துவ வரலாறு மற்றும் தனித்தனியாக மூலிகைகளையும் இரச, தாதுப் பொருள்களையும் பற்றிய பல்வேறு ஆராய்ச்சிகளைச் செய்து வருவது சித்த மருத்துவ வளர்ச்சிக்கும், வளமைக்கும் எடுத்துக்காட்டாகத் திகழ்கிறது. தற்போது தமிழகக்திலும், அண்டை மாநிலமான புதுச்சேரியிலும் மட்டுமே தன்னாட்சியைச் செய்து வரும் சித்த மருத்துவம் விரைவில் தென்னக மெங்கும் பரவி, வளர்ந்து இந்திய துணைக்கண்டத்திலும் மற்றும் இலங்கை, மலேசியா, சிங்கப்பூர் போன்ற நாடுகளுக்கும் பரவி, உலகெங்கும் தன்னாட்சியோடு தலைசிறந்து விளங்க வேண்டுமென்று எல்லோரும் விரும்புவது இயற்கையே. தேசிய சித்த மருத்துவ ஆராய்ச்சி நிறுவனம் தொடங்க எல்லா ஏற்பாடுகளும் மேற்கொள்ளப்பட்டு, தாம்பரத்தில் நிறுவப் பெற்று விரைவில் தன் பணியைத் தொடங்கத் தமிழக அரசும், மத்திய அரசும் தங்களது நட்புக் கரங்களை நீட்டிச் சித்த மருத்துவத்தை வளரச் செய்து, முதல் தேசிய சித்த மருத்துவ ஆராய்ச்சி நிறுவனம் தோன்றத் துணைபுரியும் என்று நம்புவோமாக.

## சொல்லடைவு

# தமிழ் வளர்ச்சிக் கழகம்

தமிழ் மொழியின் வளர்ச்சி ஒன்றையே குறிக்கோளாகக் கொண்டு 1946 ஆம் ஆண்டு அந்நாள் கல்வியமைச்சர் திரு.தி.சு.அவினாசிலிங்கம் அவர்களால் தமிழ் வளர்ச்சிக் கழகம் நிறுவப்பட்டது. தொடக்க காலம் முதல் 1982 ஆம் ஆண்டு வரை அவர் அதன் தலைவராக இருந்து சிறப்பாகத் தொண்டாற்றி வந்தார். பின்னர் 1982 ஆம் ஆண்டு முன்னாள் மாநில, மைய அமைச்சரான திரு.சி.சுப்பிரமணியம் அவர்கள் கழகத்தின் தலைமைப் பொறுப்பேற்றுச் சீரிய முறையில் தமிழ் வளர்ச்சிக்கு வழிகாட்டி வந்தார். 1990–ஆம் ஆண்டில் அவர் மராட்டிய மாநிலத்தின் ஆளுநர் பொறுப்பை ஏற்ற பொழுதிலிருந்து, பேராசிரியர் டாக்டர் வா.செ.குழந்தைசாமி அவர்கள் தலைமைப் பொறுப்பை ஏற்றுச் சீரிய பணியாற்றி வருகிறார்.

1947–ஆம் ஆண்டு முதல் ம.ப.பெரியசாமித்தூரன் அவர்களைத் தலைமைப் பதிப்பு ஆசிரியராகக் கொண்டு, "கலைக் களஞ்சியம்" 10 தொகுதிகள் வெளியிடப்பட்டன. இதுவே இந்திய மொழிகளில் முதல் முயற்சியாகத் திகழ்கிறது. பின்னர், அவரையே ஆசிரியராகக் கொண்டு "குழந்தைகள் கலைக்களஞ்சிம்" 10 தொகுதிகள் 1976 ஆம் ஆண்டில் வெளியிடப்பட்டன. இதன் இரண்டாவது திருத்திய பதிப்பும் (10 தொகுதிகள்) 1988–இல் முடிவுற்றது. அதன் பின்னர், தமிழ் வளர்ச்சிக் கழகம் அறிவியல் தொடர்பான நூல்களை வெளியிடும் பணியில் ஈடுபட்டு, நான்கு நூல்களை வெளியிட்டது.

தற்போது தமிழ் வளர்ச்சிக் கழகம் மருத்துவ அறிவியலைக் கருத்தில் கொண்டு, "மருத்துவக் களஞ்சியம்" எனும் தலைப்பில் 12 தொகுதிகளை வெளியிடும் பணியை மேற்கொண்டுள்ளது. இதில் "உடல் நலம்" எனும் தலைப்பில் முதல் தொகுதியும், "தாய் சேய் நலம்" எனும் தலைப்பில் இரண்டாவது தொகுதியும் "புலனுறுப்புகள்" எனும் தலைப்பில் இரு நூல்களாக மூன்றாவது நான்காவது தொகுதிகளும், "நரம்பு மண்டலம், மனநோய், நாளமில் சுரப்பிகள்" ஆகியவை அடங்கிய ஐந்தாவது தொகுதியும், "செரிமான மண்டலமும் மூச்சு மண்டலமும்" இடம்பெற்ற ஆறாவது தொகுதியும், "தொற்று நோய்களும் பால்வினை நோய்களும்" எனும் தலைப்பில் ஏழாவது தொகுதியும், "புற்றுநோய், முதியோர் நலம்" அடங்கிய எட்டாவது தொகுதியும், "இதய இரத்தநாள மண்டலம்" எனும் தலைப்பிலான ஒன்பதாவது தொகுதியும் ஏற்கனவே இடம்பெற்றுள்ளன. "சிறுநீரகம் மற்றும் இனவள உறுப்பு மண்டலம்" என்னும் பொருள் பற்றிய பத்தாம் தொகுதியும், "எலும்பியல், மாற்றுறுப்பியல், ஒட்டறுவை மருத்துவம்" ஆகிய மூன்று பகுதிகளைக் கொண்ட பதினொன்றாம் தொகுதியும் வெளியிடப்பட்டுள்ளன. "மரபியல், விபத்து மருத்துவம், நோய் எதிப்பாற்றல் மண்டலத்தின் அடிப்படைகள்" எனும் பகுதிகள் அடங்கிய பனிரண்டாம் தொகுதி விரைவில் வெளிவர உள்ளது.

அலோபதி மருத்துவமுறை நூல் வெளியீட்டுத் திட்டத்தைத் தொடர்ந்து, தமிழகம் தரணிக்கு அளித்த மருத்துவ முறையாம் சித்த மருத்துவம் பற்றிய நூல் வெளியீட்டுத் திட்டத்தில் ஆறு தொகுதிகளை வெளியிடும் பணியைக் கழகம் மேற்கொண்டுள்ளது. இதில் "சித்த மருத்துவம் தொகுதி – 1: வரலாறு" எனும் முதல் தொகுதி இப்போது வெளிவந்துள்து. ஏனைய தொகுதிகளுக்கான தயாரிப்புப் பணிகள் நடைபெற்று வருகின்றன.